சாதாரண, தை 25
பிப்ரவரி 7, 1971

# பொருளடக்கம்

கல்கி





''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

கல்கிக்கு வரும் கதை, கட்டுரை, கவிதை, துணுக்குகள் முதலானவற்றில் பிரசுரத்துக்கு ஏற்கப்படாதவை, போதிய தபால்தலைகளுடன் கூடிய முகவரியிட்ட உறையோடு வந்திருந்தால் அவ்வப்போது திருப்பி அனுப்பப்படுகின்றன. போதிய தபால் தலைகளுடன் வராத கதை, கட்டுரை, கவிதை, துணுக்குகள் பற்றி இக்காரியாலயம் பொறுப்பேற்பதற்கில்லை.

மலர் 30
இதழ் 28

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்





# தேர்தல் 'சின்ன' விஷயம்; சின்ன விஷயமல்ல!

நாட்டின் தலைமை நீதி பீடம் ஒப்புக் கொள்ளாத விஷயங்களைத் திரித்து மறு உருக் கொடுத்துத் தங்கள் கருத்துக்கு வெற்றி தேடிக் கொள்வதே இந்திரா கட்சியின் மனப் போக்காகும். தேர்தல் சின்னம் குறித்தும் இவ்வாறே உயர்நீதி மன்றத்தின் தீர்ப்புக்குப் பிறகு, மக்களைக் குழப்பும் புதிய ஏற்பாடு உருவாகியுள்ளது.

இந்திராகாந்தியின் கட்சிக்குப் பசுவையும் கன்றையும் தேர்தல் சின்னமாகக் கொள்வது சற்றும் பொருந்தாது. இது பெரும்பாலும் இரட்டைக் காளைச் சின்னத்தையே நினைவுறுத்தும். அது மட்டுமின்றி, 'கோமாதா' என்று ஹிந்துக்களால் வணங்கப்படும் புனித சமயச் சின்னத்தை ஓர் அரசியல் கட்சி உபயோகிப்பதும் முறையல்ல.

சமயச் சார்புள்ள சின்னங்கள் அரசியலில் இருக்கலாகாது என்ற கொள்கையைக் கடைப்பிடித்து வரும் நாடு நம்முடையது. எனவே, ஆள்கிற கட்சிக்குப் பசுச் சின்னத்தை வழங்கி இருப்பது மகத்தான தவறு; பகிரங்கமாகத் தெரியும் தவறு.

இந்தச் சின்னத்தை அச்சிடுவதற்குரிய ஏராளமான 'பிளாக்கு'களுக்கு இந்திரா கட்சி 'ஆர்டர்' கொடுத்து விட்டது என்பதற்காக இம்முறையின்மையை அனுமதிக்கலாகாது. பசுச் சின்னத்தைக் கொண்டு எவ்வளவு சட்ட விரோதமான அநுகூலமும் செல்வாக்கும் பெறலாம் எனக் கணக்கிட்டு, இந்திரா கட்சி இச்சின்னத்தைப் பொறித்து ஏராளமான பிரசுரங்களை மிக அவசரமாகத் தயாரித்திருக்கிறது. இவ்விதம் ஒரு தவறான காரியத்தில் இறங்கித் தீவிரமாகச் செயலாற்றிவிட்டதையே தங்களுக்குச் சாதகமான ஒரு வாதமாக அக்கட்சியினர் எடுத்துக் காட்டுகின்றனர். இந்த நாட்டை ஆளும் பொறுப்பைப் பெற்றுள்ள ஒரு கட்சி எப்படியெல்லாம் செயல்படுகிறது என்பதைப் பார்க்க நெஞ்சு நோகிறது. நாட்டில் ஸ்ரீமதி இந்திரா காந்தியின் அதிகார துஷ்பிரயோக இருள் வேகமாகப் பரவி வருகிறது. இரட்டைக் காளைச் சின்னத்துக்கு ஸுப்ரீம் கோர்ட் தடை விதித்து விட்ட பின்பு, அந்த உத்தரவை ஏய்ப்பது போல் வெகு சாதுரியமாக, பசுவும் கன்றும் கொண்ட சின்னத்தைக் காட்டி விஷயமறியா வாக்காளரின் வோட்டைப் பெறப் பார்ப்பது எத்தகைய அநீதம்? இந்த மோசடியை அதிகமாக்குகிறது அதில் உட்கிடையாக உள்ள சமய அம்சம். இது சட்டத்துக்குச் சிறிதும் ஏற்றதல்ல.

தமது காரியத்தைச் சாதித்துக் கொள்ளத் தந்திரமாகப் பிரதமர் திடுமெனத் தேசத்தைத் தேர்தலில் ஆழ்த்தி அதற்கான தேதிகளையும் வெகு நெருக்கமாகப் பிறப்பிக்கச் செய்து விட்டார். இதனால் தேர்தல் கமிஷன் பிரச்னைகளை விசாரித்து முடிவு செய்வதற்கு அவகாசம் இல்லாமல் போய்விட்டது. தேர்தலுக்கென அறிவித்துள்ள தேதிகள் மாற்ற முடியாதவை அல்ல. இருப்பினும் தேர்தல் தேதிகளை மாற்றுவதற்கே இல்லை என்பது போன்ற அபிப்பிராயம் ஏற்படுத்தப் பட்டுவிட்டது. தவற்றைத் திருத்துவதற்கு அவகாசம் போதவில்லை என்ற ஒரே காரணத்துக்காகச் சட்டத்துக்குச் சிறிதும் பொருந்தாத வகையில் ஸ்ரீமதி இந்திரா கட்சிக்கு ஒரு சின்னத்தைக் கொடுத்துத் தேர்தல்கள் ஊழலாவதற்கு அநுமதிக்கலாகாது.

இந்தத் தவற்றை இப்போது திருத்தாவிடில் பின்னால் தேர்தல் முழுதுமே முறை தவறி நடத்தப்பட்டதெனத் தீர்ப்பு பிரகடனமாகக் கூடும்.

ஸ்ரீமதி இந்திராகாந்தி தாம் ஒரு முற்போக்குவாதி என உரிமை கொண்டாடுவதால் அவரது கட்சிக்கு வேண்டுமானால் ரயில் எஞ்சினைச் சின்னமாகக் கொள்வது பொருத்தமா யிருக்கும்.

[அடிப்படை:
ராஜாஜி "ஸ்வராஜ்யா"வில் எழுதியது]

# ராஜாஜியின் கருத்துக்கள்

அரசியல் சட்ட சாஸனத்தின் அடிப்படையில் நோக்கினுல், ஸ்ரீமதி இந்திரா காந்தி மக்கட் சபையைக் கலைத்ததற்கு இருந்த சமாதானம்கூட, தமிழக சட்டசபையைக் கலைத்ததற்குக் கிடையாது. இப்போது தேர்தலை நடத்துவதிலும் ஓராண்டு கழித்துத் தேர்தலை நடத்துவதிலும் திரு கருணாநிதியின் கட்சிக்கு உள்ள சாதகபாதகங்களை மட்டும் அநுமானித்து, தமிழக சட்டசபைக்குப் புதுத் தேர்தல் நடத்தப்படுகிறது.

✶

சென்னை கத்தோலிக்க சங்கத் தலைவர் எனக்கு எழுதியுள்ள அடியில் காணும் கடிதத்துக்கு விமரிசனமே தேவையில்லை:

உங்களுக்கு ஒரு சுவாரசியமான செய்தி. கத்தோலிக்கர், பிராடெஸ்டென்ட் ஆகிய இரு பிரிவுக் கிறிஸ்தவர்களின் தலைவர்களும் சமீபத்தில் சென்னையில் கூடி, அடுத்து வரும் சட்டசபை — மக்கட் சபைத் தேர்தல்களில் ஜனநாயக முன்னணிக்கே ஆதரவு தருவதாகத் தீர்மானித்தனர். தமிழகத்திலுள்ள கிறிஸ்துவ சமயத்தினர் அனைவரும் ஜனநாயக முன்னணி வேட்பாளர்களையே ஆதரிக்க வேண்டும் எனத் தீர்மானம் கோருகிறது.

முஸ்லீம் சமுதாயத்தினர் ஜனநாயக முன்னணியை ஆதரிக்க வேண்டும் என நீங்கள் விடுத்துள்ள கோரிக்கையைக் கவனித்தேன். வியாபாரம், கல்வி முதலிய துறைகளைச் சேர்ந்த முஸ்லீம் தலைவர்களுடன் இவ்விஷயமாக நான் பேசியதில் இதை அவர்கள் சாதகமாக ஏற்றிருப்பதாகவே தெரிந்தது. ஆயினும் முன்னணியில் அங்கம் வகிக்கும் ஜன சங்கத்தின் சமீபத்திய தேர்தல் விஞ்ஞாபனத்தில் முஸ்லீம் துவேஷம் தொனிப்பதால் என் முஸ்லீம் நண்பர்களின் மனம் இப்போது மிகவும் மாறி விட்டது. நடுநிலைமை வகிக்கும் முஸ்லீம்களில் ஒரு பெரும் பகுதியின் மேலான ஆதரவை முன்னணி இழந்து விடும் என்றே அஞ்சுகிறேன்.

ஜனசங்க விஞ்ஞாபனத்தில், குறிப்பாகக் கிறிஸ்துவ மிஷனரி காரியங்களை ஆட்சேபிக்கும் போக்கு, கிறிஸ்துவ சமூகத்தினருக்கு உவப்பாக இல்லை என்பதையும் நான் வெளியிட விரும்புகிறேன். இதனாலும் முன்னணி ஏராளமான கிறிஸ்தவர்களின் வாக்குகளை இழக்க வேண்டி வரும் என அஞ்சுகிறேன்.

கிறிஸ்தவர்களுடையவும், முஸ்லீம்களுடையவும் ஆதரவு வேண்டுமாயின் ஜனநாயக முன்னணியில் அங்கம் வகிக்கும் ஜனசங்கம் தனது கடுமையான முஸ்லீம் எதிர்ப்பு, கிறிஸ்துவ எதிர்ப்புப் போக்கை மாற்றிக் கொள்ள வேண்டும்.

ஸ்தாபன காங்கிரஸும், சுதந்திரக் கட்சியும் பங்கு கொள்ளும் பொது மேடைகளிலிருந்து ஜனசங்கத்தின் பேச்சாளர்கள் உரை நிகழ்த்தாமல் இருப்பது நலம்.

இதற்கு என் பதில் வருமாறு :

உங்களது அன்பான கடிதத்தைப் படித்தேன். மெத்த நன்றி. ஸ்ரீமதி இந்திரா காந்தியைத் தோல்வியுறச் செய்வதற்காக எங்களுடன் சேர்ந்துள்ள ஜனசங்கத்தினரால் தீங்கு ஏதும் விளையாது. தேர்தலின் முடிவாகக் கூட்டணியானது ஆட்சிப் பொறுப்பை ஏற்க நேர்ந்தால், சுதந்திரக் கட்சியும் ஸ்தாபன காங்கிரஸும் ஜனசங்கத்தைக் கட்டுப்படுத்தி நடத்த இயலும். ஜனசங்கம் இப்போது வெளியிட்டுள்ள கருத்துக்களால் சிறுபான்மைச் சமூகத்தினர் அரசியல் சாஸனத்தில் தாங்கள் வைத்துள்ள நம்பிக்கை குலைந்து போக இடம் தர வேண்டாம்.

இந்தியாவில் உள்ள எல்லா சிறுபான்மைச் சமுதாயங்களுக்கும் நியாயமாக உரிய அந்தஸ்தையும் உரிமைகளையும் சாஸனம் பூரணமாக உறுதிப்படுத்துகிறது. சாஸனத்தை இஷ்டப்படி மாற்றக் கூடாது என்றே ஸ்தாபன காங்கிரஸும், சுதந்திரக்கட்சியும், மற்றக் கட்சிகளும் இப்போது போராட்டத்தில் இறங்கியுள்ளன.

## கலியாண மண்டபத் திருப்பணி

பொருளாதார வசதி அதிகம் படைத்திராதவர்களுக்கு ஏற்றதாக ஆங்காங்கு கலியாண மண்டபங்கள் இருக்க வேண்டியதன் அவசியத்தை அனைவரும் அறிவர். இவ்விதம் குறைந்த வாடகையில் சுப வைபவங்களை நிகழ்த்துவதற்கு, திருவல்லிக்கேணி ஸ்ரீ பார்த்தசாரதிஸ்வாமி குளத்தின் கிழக்குக் கரையில் உள்ள ஸ்ரீ யதுகிரி யதிராஜ கலியாண மண்டபம் புதுப்பித்து விஸ்தரிக்கப்படுகிறது. ஸ்ரீ வைஷ்ணவ ஆசாரியர்களுடன் தொடர்புடைய உத்தம ஸ்தாபனம். மேற்படி கலியாண மண்டபத்தினர் திவ்விய தினக் குறிப்பு நூல் ('டயரி') ஒன்று வெளியிட்டுள்ளனர். ஸ்ரீ எம். என் ராமாநுஜம், ஸ்ரீ யதுகிரி யதிராஜ மடம், 46, கிழக் குளக்கரை, திருவல்லிக்கேணி— என்னும் முகவரியில் ரூபாய் ஐந்து செலுத்தி, டயரியைப் பெறுவதன் மூலம் மண்டபப் பணிக்கு உதவிய புண்ணியத்தைப் பெறலாம். அதற்கு அதிகமாக எவ்வளவு தொகை வேண்டுமாயினும் நன்கொடை அனுப்பிக் கலியாணக் காரியத்தில் உதவி செய்த பெருமையைப் பெறலாம்.

# வாழும் பொம்மைகள்

சென்னை மெரீனா கடற்கரையில் பல்கலைக் கழகப் பரீட்சை மண்டபத்தில் கிருஷ்ணதேவ ராயர் தர்பார் நடத்திக் கொண்டிருக்கிறார். நம்பாதவர்கள் அந்த மகத்தான காட்சியை நேரில் அங்கு போய்ப் பார்க்கலாம்! அது மட்டுமா?......

பரத கண்டத்தின் பழம் பெருமைகளை விளக்கும் காட்சிகள் ஒன்று இரண்டா? ராமாயண, மகாபாரதத்திலிருந்து முக்கியமான பல காட்சிகள், பாகவதக் காட்சிகள், புத்தர் வாழ்க்கை, ரஜபுத்திரர்களின் பெருமை, சிவாஜி, மீரா, விவேகானந்தர், விடுதலைப் போர்க் காட்சிகள்—சாஸ்திரி தாஷ்கண்டில் கையொப்பமிட்ட காட்சி வரை... அப்பப்பா! நம்மைக் காலத் தேரிலேற்றி அதைப் பின்நோக்கிச் செலுத்தி நம் நாட்டின் அருமை பெருமைகளையெல்லாம் நமக்கு விளக்கிக் கொண்டிருக்கின்றன பல்கலைக்கழக பரீட்சை மண்டபத்தில் அமைந்துள்ள பொம்மைகள் கண்காட்சி. வெறும் பொம்மைகளா? இல்லை, சரித்திரம் கூறும் ஜீவனுள்ள அற்புதக் கலைப் படைப்புக்கள்.

இந்தப் பொம்மைக் காட்சி **தனி நபர் ஒருவரின்** தளராத உழைப்பு, ஆர்வம், ஆராய்ச்சி, கலை உள்ளம் இவைகளைப் பிரதிபலிப்பதாக இருக்கிறது. சுமார் ஏழு ஆண்டு காலமும் ஏராளமான பொருளும் செலவிட்டு இந்த ஒப்பற்ற கண்காட்சியை உருவாக்கி இருப்பவர் ஸ்ரீமதி சுசீலா ரஜ்னி பட்டேல் என்ற அம்மையார்.

சென்னையில் இக் கண்காட்சி இந்தியன் ஆயில் அதிகாரிகள் சங்கத்தின் ஆதரவில் நடக்கிறது. இச் சங்கத்தின் சமூக நலன் குழுத் தலைவர் பி. வி. ரங்கநாத் கண்காட்சியின் திறப்பு விழா சிறப்பாக நடக்க ஏற்பாடுகளைச் செய்திருந்தார். கல்வி இயக்குனர் திரு சிட்டிபாபு தலைமையில் கல்வி அமைச்சர் திரு நெடுஞ்செழியன் கண்காட்சியைத் திறந்து வைத்தார்.

ஒவ்வொரு காட்சியிலுமுள்ள பொம்மைகளின் உருவம், உடை, அணிகள், அமைப்பு, சூழ்நிலை ஆகியவற்றைப் பார்க்கும்போது, தயாரிப்பாளரின் கலையுள்ளமும் ஆராய்ச்சியும் நன்கு பளிச்சிடுகின்றன. ஓரடிக்கும் குறைவான உயரமுள்ள பொம்மைகள். ஒவ்வொன்றின் முகத்திலும் ஒருவித பாவம். அங்க அமைப்புகளும் அளவோடு அழகாக விளங்குகின்றன. மேடை நாடகங்களில்கூட இரு பாத்திரங்கள் உரையாடும்போது மற்றப் பாத்திரங்கள் பொம்மைபோல நிற்பதைப் பார்க்கிறோம். ஆனால் இந்தப் பொம்மைகளோ? ஒரு காட்சியில் பத்துப் பொம்மைகள் இருந்தால் ஒன்றாவது சும்மா இல்லை. ஏதாவது ஒரு பாவத்தை விளக்கும் வகையில் ''வாழ்ந்து'' கொண்டிருக்கின்றன. அவற்றுக்கு உணர்ச்சி கூட்டுவது போல் பின்புலனான காட்சி அமைப்பும் அரங்க நிர்மாணமும் வர்ணச் சேர்க்கையும் ஒளி அமைப்பும் இருக்கின்றன. ஒரு மரம் என்றால் அதன் இயற்கையான இலைகள், கனிகள், பூக்கள் எல்லாம் உண்டு!

இத்தகைய காட்சிகளை உருவாக்க ஸ்ரீமதி சுசிலா அவர்கள் முதலில் அந்தக் காட்சியை வரை படமாக வரைந்து கொள்வாராம். பிறகு அந்தச் சரித்திர காலத்துக்கு ஏற்ற உடை, நகை, முடி அலங்காரங்கள் தயாரிக்கப்படும். எல்லாம் துணியினாலான பொம்மைகள். கை விரல்களுக்கு மெல்லிய அலுமினியக் கம்பி உள்ளடங்கிய துணிச் சுற்றல். அரக்கு இந்தக் காட்சிகளுக்குப் பெருமளவுக்குப் பயன்பட்டிருக்கிறது. பொருத்தமான பின்புலன்களை வேறு ஒருவர் தீட்டியிருக்கிறார், ஸ்ரீமதி சுசீலாவின் ஆலோசனையுடன்.

இவரது பொம்மைக் காட்சி ஐரோப்பாவில் ஆஸ்திரியா, ஜெர்மனி, ரஷ்யா ஆகிய தேசங்களுக்குப் போய் வந்திருக்கிறது. இந்தியாவிலும் பல நகரங்களுக்குச் சென்றிருக்கிறது:

'சத்தியமேவ ஜயதே' என்ற பெயரில் காந்திஜியின் வாழ்க்கையை இத்தகைய வாழும் பொம்மைகளில் உருவாக்கி வைக்க இவருக்கு எத்தனையோ ஆசையாம். ஆனால் அரசாங்கம் அதற்காக ஒரு பைசாகூட வழங்க விரும்பவில்லையாம். '' பெரிய விஷயமாயிற்றே! ஏராளமாகச் செலவாகுமே. என்ன செய்கிறது? அரசாங்கத்தின் உதவி கிடைக்குமானால் என் கனவும் பூர்த்தியாகும்'' என்று பெருமூச்சு விடுகிறார் ஸ்ரீமதி சுசீலா.

தமிழ் நாட்டில் இக் காட்சியை அமைக்கிறோமே அதற்கு ஏற்றபடி ஒரு காட்சி செய்ய வேண்டுமென்று திட்டமிட்டு, கண்ணகியின் கதையைப் படித்து—விரித்த முடியோடு பாண்டியனின் அவையில் கண்ணகி கையில் சிலம்புடன் சூளுரைக்கும் காட்சியை வெகு விரைவில் தயாரித்துச்சேர்த்திருக்கிறார்.

ஜனவரி 21ந் தேதி முதல் பிப்ரவரி 20ம் தேதி வரை இக்காட்சி நடைபெறுகிறது. குழந்தைகள் திறந்த வாய் மூடாமல் கண்டு களிக்கக் கூடிய காட்சி இது. ஏன், பெரியவர்களும் கூடக் கண்டு வியப்படையும் காட்சிதான்.

— கௌசிகன்








பாகஸ்தர்களுக்கு ஆசிகள் -
சுந்தரம், தேவராஜுலு, வேங்கடசாமி நாயுடு

எத்தனையோ வைர விழாக்கள் நடக்கின்றன. கொஞ்சம் கூர்ந்து ஆராய்ந்தால் அவற்றில் பல வெறும் ரங்கூன் வைரம்தான் என்பது புரிந்து போகும். ஆனால் அண்மையில் லக்ஷ்மி மில்லில் நடைபெற்ற வைர விழா, கோஹினூர் வைர விழா!

இதை யாரேனும் உறுதிப்படுத்திக் கொள்ள விரும்பினால் கோயமுத்தூர் சென்று ஸ்ரீமான்கள் தேவராஜுலு, சுந்தரம், ராஜகோபால் சகோதரர்களுடன் பேசிப் பார்க்கலாம், அல்லது லக்ஷ்மி மில்லையும் அதைச் சேர்ந்த பிற ஸ்தாபனங்களையும் நோக்கலாம், இல்லையேல் கோவைவாசிகளை விசாரிக்கவும் செய்யலாம். கண்ணால் பார்த்தாலும், காதால் கேட்டாலும் நேர விசாரித்தாலும் கிடைக்கிற பதில் ஒன்றுதான்.

கோஹினூர் வைரமாக இந்த நிறுவனம் ஜொலிக்கக் காரணம் சகோதரர்களின் உழைப்புத் திறமை, அன்புடைமை, நேர்மை ஆகிய சிறப்பியல்புகளே. இவர்களது மில்களும், அறக் கட்டளைகளின்பயனும் உருவான பள்ளி, கல்லூரி, ஆஸ்பத்திரி முதலியனவும் எவ்வளவு சுத்தமாகக் காட்சி தருகின்றனவோ அதே அளவு இவர்களது உள்ளங்களும் சுத்தமானவை. இந்தக் குணநலன்கள் இவர்களுக்குப் பரம்பரைச் சொத்தின் ஓர் அங்கமாக வந்து சேர்ந்தன. ஆகவேதான் இவர்கள் புதுமைப் புரட்சி செய்ய நினைக்கையில் பழைமையைப் போற்றவும் மறக்கவில்லை.



பல்லடம் ஜின் மில்ஸ்

உதாரணத்துக்கு லக்ஷ்மி மில்லின் சின்னத்தையே எடுத்துக் கொள்ளுங்கள். இச் சின்னத்தில் உள்ள லக்ஷ்மி, அஜந்தா கொண்டையுடன் கூடிய 'அல்ட்ரா மாடர்ன்' லக்ஷ்மி! ஆனால் இவர்கள் வைர விழாவன்று காலை பூஜையில் வைத்துக் கும்பிட்டது இந்த லக்ஷ்மி விக்கிரகத்தை மட்டுமல்ல, ரவிவர்மாவின் பழங்காலப் படத்தையும் தான். அதே சமயம் இந்த மில்லின் ஸ்தாபகரும் தங்கள் தந்தையுமான திரு ஜி. குப்புசாமி நாயுடு அவர்களுக்கும் அஞ்சலி செலுத்தினார்கள். பூஜைமுடிந்து பிரசாதம் வந்தபோது அதைத் தங்கள் சித்தப்பா திரு வேங்கடசாமி நாயுடுவிடம் (சின்ன நாயகர்) முதலில் கொடுக்கச் செய்து அவரை வணங்கிப் பின் அவரிடமிருந்து பெற்றுக் கொண்டார்கள்.

திரு ஜி. குப்புசாமி நாயுடு எந்த இடத்தில் கையால் இயங்கும் இரண்டு 'ஜின்'களுடன் மிக எளிய முறையில் ஜவுளித் தொழிலை ஆரம்பித்தாரோ, அதே இடத்தில் இன்று லக்ஷ்மி மில்லின் அறுபதாண்டு நிறைவு விழா வினை யொட்டி பூஜை நடந்தது.

கோவையில் விளையும் பருத்தியெல்லாம் நாட்டின் பிற பாகங்களுக்கும் அயல்நாடுகளுக்கும் நூலாகவும் துணியாகவும் உருமாற அனுப்பப்படுவதைப் பார்த்து மனம் நொந்து.

ஸ்தாபகர் ஜி. குப்புசாமி நாயுடு



'ஏன் கோவையிலேயே ஒரு நூற்பு ஆலை தோன்றக் கூடாது?' என்று தம்மைத் தாமே கேட்டுக் கொண்டார் திரு குப்புசாமி. கோவை, ''தென்னகத்தின் மான்செஸ்டர்'' என்று பின்னால் அழைக்கப்பட அன்று வித்திட்டவர்களுள் முக்கியமானவர் அவர். ''இன்று லங்காஷயரிலேயே பல மில்கள் மூடப்பட்டும், இயந்திரங்கள் பிரிக்கப்பட்டும் வருகின்றன. ஆனால் கோவைக்கு வந்த சிறப்புப் பெயர் இன்னும் நிலைத்திருக்கிறது!'' என்று வேடிக்கையாகக் குறிப்பிட்டார் திரு சுந்தரம்.

கையால் இயங்கும் இரண்டு ஜின்களுடன் ஆரம்பித்த தொழில்தான் இன்று மிக நவீனமான மூன்று மில்களாகவும் ஒரு தொழில் தொகுதியாகவும் வளர்ந்திருக்கிறது. இதற்கு ஜி. குப்புசாமி நாயுடு அவர்களின் உழைப்பும் தீர்க்கதரிசனமுமே முக்கிய காரணங்கள்.



தேசியகீதத்தின்போது, சுந்தரம், மண்டேலியா, தேவராஜுலு

இன்று லக்ஷ்மி மில்ஸின் நிர்வாகப் பொறுப்பை ஏற்றுள்ள சகோதரர்கள் மூவரில் இளையவரான திரு ராஜகோபால் அமெரிக்காவில் ஐந்து ஆண்டுகள் தங்கியிருந்து ஜவுளி ஆலைத் தொழிலில் விஞ்ஞான ரீதியாகத் தேர்ச்சி பெற்றுத் திரும்பியவர். வாலிபப் பிராயத்தினராய்க் கண்ணுக்கு லட்சணமாகத் தோற்றம் அளிக்கும் இவருக்கு, மில் விவகாரங்களிலிருந்து விடுதலை பெறும் போது பிடித்தமான பொழுதுபோக்கு வேட்டையாடுதல். உதகையில் கால்ஃப் ஆட்டத்தில் பங்கு கொண்டு பரிசுகள் பெற்றிருக்கிறார். சென்னை, சோழவரத்தில் நடைபெறும் மோட்டார் கார் பந்தயங்களிலும் கலந்து கொள்வார். நாடக, சங்கீதக் கலைகளில் ஈடுபாடு மிக்கவர்.



கே. ராஜகோபால்

'அரசியலையே தொழிலாகக் கொண்டவர்களின் எண்ணிக்கை குறைய வேண்டும்; தொழில் துறையிலும் வியாபாரத்திலும் ஈடுபட்டுள்ள கல்விமான்கள் நாட்டு நடப்பில் அக்கறை கொண்டு இந்நாட்டின் அரசியல் தரத்தை உயர்த்த வேண்டும்' என்ற ராஜாஜியின் கருத்தை ஏற்று, பொறுப்புணர்ச்சியுடன் அரசியலில் இறங்கியவர் திரு கே. சுந்தரம். ஏதோ லக்ஷ்மி மில்ஸ் ஸ்தாபனத்தின் நிர்வாகம், வளர்ச்சி என்று பார்த்துக்கொண்டு போகாமல் அரசியல் சிக்கலில் — அதுவும் இந்தியாவில் இன்று நிலவும் சூழலில் — அகப்பட்டுக் கொள்வதென்றால் அது தியாகம்தான். இத்தகைய தியாகமனப்பான்மை நம் நாட்டில் உயர் நிலையில் உள்ள பல அறிஞர்களுக்கும் ஏற்பட்டால் இந்நாடு துரிதமாய் முன்னேற வழியுண்டு.



தொழிலாளர் சார்பில் ஜி. வேங்கடசாமி நாயுடுவுக்கு மண்டேலியா பொன்னாடை போர்த்துகிறார்

சகோதரர்களில் மூத்தவரான தேவராஜுலு, அசாதாரணமான நிர்வாகத் திறனும் வியாபார நுட்பமும் பெற்றிருப்பவர். தந்தை ஆரம்பித்து வைத்த பணியைத் தொடர்ந்து நடத்துவதுடன் அதன் வளர்ச்சிக்கும் சிறப்புக்கும் அளப்பரிய தொண்டாற்றி வருபவர். ஸ்விஸ் நாட்டவரின் ஒத்துழைப்புடன் கோவையில் ஜவுளித் தொழிலுக்குத் தேவையான இயந்திரங்களை உற்பத்தி செய்யும் தொழிலகத்தை நிறுவினார்.

இன்றோ நிலைமை தலைகீழாக மாறிவிட்டது. லக்ஷ்மி மில்ஸ் ஜவுளிகளையும், நூற்பு ஆலை இயந்திரங்களையும் அயல்நாடுகளுக்கு ஏற்றுமதி செய்வது மட்டுமல்ல; இலங்கையில் ஓர் ஆலையையே லக்ஷ்மி ஸ்தாபனம் நிர்மாணித்துக் கொடுத்திருக்கிறது. வரைபடம் போடுவதில் தொடங்கி, இயந்திரங்களை இயக்குவதில் அங்குள்ளோருக்குப் பயிற்சி

அளிப்பது வரை எல்லாக் காரியங்களையும் லக்ஷ்மி மில்ஸ் நிறுவனமே திட்டமிட்டுச் செய்தது. மலேஷியாவில் இதே போன்று ஒரு மில் அமைத்துத் தருமாறு இப்போது கோரிக்கை வந்திருக்கிறது !

* * *

லக்ஷ்மி மில்ஸ் வைர விழாவுக்குப் பட்டுச் சால்வை போர்த்திய பிரமுகர்களும், பாண்ட் கோட்டுடன் இளைஞர்களும், வேஷ்டி சட்டையுடன் பிறரும் வந்து குழுமி விட்டார்கள்.

அன்றைய விழாவுக்குத் தலைமை தாங்கிய ஸ்ரீ மண்டேலியா சோஷலிஸ மாயையைத் தகர்த்தெறிந்து அடித்த அடியில் அது மண்டையைப் போட்டிருக்க வேண்டும். இனி சந்தர்ப்பவாதிகள் அதற்குப் புத்துயிர் அளித்து நிமிர்த்தி வைத்தால்தான் உண்டு !

'' அதிக மக்களுக்கு வேலை வாய்ப்புத் தருவது, உற்பத்தியைப் பெருக்குவது, விலைகளைக் குறைப்பது, லாபத்தைப் பரவலாகப் பலர் அநுபவிக்கப் பிரித்தளிப்பது, தேசிய வருமானத்தைப் பெருக்குவது, சமூக நலனுக்குச் செல்வத்தை ஒதுக்குவது, தொழிலாளர் நலனைக் கவனிப்பது ஆகிய இவைதாம் சோஷலிஸம் என்றால் அந்த சோஷலிஸம் இங்கு ஏற்கனவே லக்ஷ்மி மில்ஸ் ஸ்தாபனத்தில் செயல்பட்டுத்தான் வருகிறது'' என்று அழகாகச் சொன்னார், பிர்லா ஸ்தாபனங்களின் ஆலோசகரான மண்டேலியா.

ஆக, நாட்டில் உள்ள தனியார் துறை நிறுவனங்களெல்லாம் லக்ஷ்மி மில்ஸ் ஸ்தாபனம் போல் மேலே குறிப்பிட்ட குண விசேஷங்களுடன் நடக்கின்றனவா என்று அரசு கண்காணித்து வந்தாலே போதும். சோஷலிஸத்தைக் கொண்டு வருவதாக மக்களை மயக்கி, சீனாவிலிருந்தும் ருஷ்யாவிலிருந்தும் கம்யூனிஸக் கொள்கைகளை இறக்குமதி செய்ய வேண்டிய அவசியமில்லை.

திரு மண்டேலியா, தொழிலதிபர்களும், வர்த்தகப் பிரமுகர்களும் இந்த சோஷலிஸ மாயைப் பிரசாரத்தைப் பார்த்துக் கொண்டு சும்மா இருப்பதைத் தைரியமாகவும் வன்மையாகவும் கண்டித்தார். ''அரசியல்வாதிகள் என்று தங்களை வருணித்துக் கொள்ளும் சந்தர்ப்பவாதிகள், தொழில் வர்த்தகத் துறையினர் மீது எத்தனை அவதூறுகளைச் சுமத்தி மக்களுக்கு அவர்கள் மீது வன்மம் வளரச் செய்கிறார்கள் ! இந்தப் பொய்ப் பிரசாரத்துக்கு எதிர் நடவடிக்கை நீங்கள் ஏன் மேற்கொள்ளக் கூடாது ? மக்கள் நலனுக்கும், தொழில் வளர்ச்சிக்கும், நாட்டின் மேன்மைக்கும் நீங்கள் ஆற்றியுள்ள பணிகளை மக்களுக்கு விளங்குமாறு நீங்கள் ஏன் எடுத்துச் சொல்லக் கூடாது ?'' என்று ஆணி அடித்தாற்போல் அழுத்தமாகக் கேட்டார் மண்டேலியா.




நம்மைப் பற்றி நாமே சொல்லிக் கொள்வதா என்ற கூச்சத்தையும், அடக்கத்தையும் உதறி விட்டுத் தொழில் வர்த்தகப் பிரமுகர்கள் இவ்விஷயத்தில் கவனம் செலுத்த வேண்டும். இது பிரசாரம் ஆகாது; தற்காப்பு நடவடிக்கையே.

அன்று — வைர விழாவின் போது — தொழிலாளர், பங்குதாரர்கள், வாடிக்கையாளர்கள், விநியோகஸ்தர்கள், வியாபாரிகள், பொதுமக்கள் ஆகிய பல ரகத்தவரையும் லக்ஷ்மி மில்ஸ் நிறுவனம் எந்த அளவுக்குத் திருப்தியுடன் வைத்திருக்கிறது என்பதை உணர முடிந்தது. தொழிலாளர்கள், நிர்வாகிகளுக்கு மாலைகளையும் பொன்னாடைகளையும் அணிவித்து மகிழ்ந்தார்கள்! தொழிற் சங்கத் தலைவர்கள் நிர்வாகத்தை வானளாவப் புகழ்ந்தார்கள்! பங்குதாரர்கள் தங்கள் மன நிறைவைத் தெரியப்படுத்திக் கொண்டார்கள்! வியாபாரிகளும் விநியோகஸ்தர்களும் பாராட்டினார்கள். பொதுமக்கள் தங்களுக்காக ஏற்படுத்தப்பட்டுள்ள அறக்கட்டளைகளுக்காக நன்றி தெரிவித்தார்கள். இவையெல்லாம் ஏதோ வைர விழாவின் போது சம்பிரதாயமாகக் கூறப்பட்ட சொற்கள் அல்ல; அந்தரங்கசுத்தியுடன் மனப்பூர்வமாகப் பேசப்பட்ட வார்த்தைகள்.

'' தேவராஜுலு அவர்கள் ஓய்வு பெறப் போகிறேன் என்றார். இத்தனை நல்ல இதயமும், இத்தனை ஆற்றலும் திறமையும் பயனின்றி மூலையில் முடங்க அனுமதிக்கலாகாது. அது லக்ஷ்மி மில்ஸுக்கு மட்டுமல்ல, நாட்டுக்கே நஷ்டம்'' என்றார் தொழிற்சங்கத் தலைவர் ஒருவர்.

''பெரிய நாயக்கர் (ஸ்தாபகர் குப்புசாமி) 'இந்தா! இந்த நாலை எடுத்துக் கொண்டு போய் வியாபாரம் செய். நஷ்டம் ஏற்பட்டால் என்னிடம் வந்து சொல்லு' என்பார். அதே அளவு பரிவும் அன்பும் இன்றைக்கும் நிர்வாகத்தினரிடையே காண்கிறேன்'' என்றார் ஒரு வியாபாரி.

''சின்ன நாயக்கர் (திரு வேங்கடசாமி நாயுடு) பொருளாதார விஷயங்களில் புலி. சிக்கல்கள் ஏற்படும் போதெல்லாம் தேவராஜுலுவும், சகோதரர்களும் அவர் யோசனையைக் கேட்டு நடப்பார்கள். மலையாக வந்த பிரச்னைகள் பனியாக மறைந்துவிடும்'' என்று அன்னாரது ஆற்றலைப் போற்றினார், விஷயமறிந்த ஒருவர்.

அரசியல் சார்பில்லாத தொழிற்சங்கம், தொழிலாளர் நலனை மட்டுமே கருத்தில் கொண்டு இயங்கினால், எத்தனை அரிய பெரிய சாதனைகளை நிகழ்த்த முடியும் என்பதற்கு மலேஷியா தோட்டத் தொழிலாளர் சங்கத்தின் பிரதிநிதியாக வந்து, இவ்விழாவில் பேசியவரது சொற்பொழிவு எடுத்துக்காட்

டாக அமைந்திருந்தது. தோட்டத் தொழிலாளர் நலனுக்காக அச்சங்கம் மேற்கொள்ளும் பணிகளின் பட்டியலை அவர் கூறி வருகையில் பிரமிப்பு ஏற்பட்டது. பல ஆயிரம் ஏக்கர் விஸ்தீரணமுள்ள ரப்பர் தோட்டத்தையே சங்கம் விலைக்கு வாங்கி நடத்துகிறது. லக்ஷ்மி மில்ஸ் நிறுவனத்தின் ஒத்துழைப்புடன் இப்போது ஜவுளித் தொழிலிலும் இறங்கி அந்நாட்டில் ஆலை நிறுவப் போகிறது !

" நான் இவர்களுடன் வியாபாரம் செய்ய ஆரம்பித்து இன்று தனி மில்லை நடத்துகிறேன். அந்த ஆலைக்குக் கம்பெனி சட்டப் பிரகாரம் தலைவர் வேறு. ஆனால் எங்களுக்கு உண்மை 'சேர்மன்' தேவராஜுலு அவர்களே. கொஞ்சமும் தயக்கமின்றி எங்கள் மில்லையும் தம்முடைய ஆலையாகவே பாவித்து, வளர்ச்சிக்கான ஆலோசனைகளை வழங்குவார் " என்று இன்னொரு மில் அதிபர் மனம் விட்டுக் கூறினார்.

இதே அளவு சாமான்யத் தொழிலாளியின் குறைகளையும் அனுதாபத்துடன் கேட்டு ஆவன செய்யும் குணம் சகோதரர்களுக்கு உண்டு என்று அந்தக் கருணையில் நனைந்த ஓர் உள்ளம் நன்றியால் கண் கலங்க என்னிடம் தெரியப்படுத்திக் கொண்டது, குப்புசாமி நாயுடு மருத்துவமனையைப் பார்வையிட நான் சென்ற போது.

தனிமையில் சந்தித்துப் பேசிய போது திரு சுந்தரம், எதிர்காலம் மிகவும் கவலை அளிப்பதாக இருப்பதை எடுத்துக் கூறினார். சரித்திரத்தில் இதுவரை காணாத அளவு பருத்தி விலை இன்று உயர்ந்திருக்கிறது. உற்பத்திக் குறைவுதான் காரணம். "பருத்தி உற்பத்தியில் அதிகக் கவனம் செலுத்தாது, அயல் நாட்டிலிருந்து பருத்தி இறக்குமதி செய்வதில் அரசு ஏராளமான அந்நியச் செலாவணியை வீணடிக்கிறது" என்றார்.

"அயல்நாடுகளில் செயற்கை நூல் ஆடைகள் மிக மலிவாக இருக்கின்றனவே?" என்றேன். சில மேற்கத்திய நாடுகளில் பருத்தி ஆடையைவிடச் செயற்கை நூல் ஆடைகள் மலிவு.

"அந்த அளவுக்கு இல்லாவிடினும் இங்கும் செயற்கை நூல் ஆடைகள் இப்போது உள்ளதைவிட மிக மலிவாக விற்பனைக்கு வர முடியும், அரசாங்கம் வரிகளைக் குறைத்தால்" என்றார் திரு சுந்தரம்.

செயற்கை நூல் ஆடைகளின் விலை ஏறக்குறைய ஐந்நூறு சதவிகித வரிவிதிப்பினால் இங்கு செயற்கையான முறையில் அதிகரிக்கப் பட்டிருக்கிறது !

விழாவில் பேசியபோது திரு சுந்தரம் கூறிய கருத்துக்கள் சிந்தனைக்குரிய சீரிய எண்ணங்கள். "புதிதாய் ஒரு தொழிலை ஆரம்பித்து வெற்றி காண்பதைவிட ஏற்கனவே ஓரளவு வளர்ந்து விட்டிருக்கிற ஸ்தாபனம் மேலும் வளர்ச்சி அடைவதும் புதிய துறைகளில் கிளைவிட்டுப் படர்வதும் சுலபம். இதனால் நாட்டின் முன்னேற்றம் துரிதமடையும். இதை அரசு புரிந்து கொள்ளாமல், 'ஏகபோகம்' என்ற சொல்லைக் காட்டி பயமுறுத்துகிறது; நாட்டின் தொழில், பொருளாதார வளர்ச்சிக்குத் தடையாக நிற்கிறது. தொழில் வளர்ச்சியில் மூன்றாவது ஸ்தானம் பெற்றிருந்த தமிழ் நாடு, அந்தப் பெருமையை இழந்து, மைசூர் தன்னைத் தோற்கடிக்க அனுமதித்து விட்டது."

இழந்த பெருமையை மீண்டும் பெறவும், இன்னும் முதன்மை ஸ்தானத்தையே அடையவும் காலத்தை வீணாக்காது உறுதியுடன் உழைக்க வேண்டிய தருணம் இது. இதற்குத் தமிழக அரசும் மத்திய அரசும் ஊக்கமும் உற்சாகமும் அளிக்க வேண்டும்.

வைர விழா காணும் லக்ஷ்மி மில்ஸ் பெற்றிருக்கும் லக்ஷ்மி கடாட்சம் இந்த மாநிலம் முழுவதற்கும் பரவட்டும்; அதற்கும் மேல் தேசம் முழுவதுமே அவளது அருள்பார்வையில் நனையட்டும்.

— வி. ராஜேந்திரன்



# உயிரும் ஊர்தியும்

**எச்சரிக்கை!**

**உயிர் மதிப்பு மிக்கது. அவ்வுயிரைக் காக்கக் கவனமாக ஊர்தியைச் செலுத்தி நாம் நமது கடமையை ஆற்றுவோம்.**

மேலே கண்ட வாசகம் சென்னை நகரப் போக்குவரத்தின் பிரதான நிலையங்களில் பெரிய எழுத்துக்களில் காட்சி யளிக்கிறது.

சமீபத்தில் சென்னை மெரினாப் பகுதியில் நான்கு பேர்களின் உயிரை மொத்தமாகப் போக்கிய பாரிமுனை — மந்தைவெளி பஸ் டிரைவர் கண்களுக்கு, அன்று அவர் தம் பஸ்ஸை எடுத்துக் கொண்டு வேலைக்குக் கிளம்பிய போது இந்த அறிவிப்பு கண்ணில் பட்டதா இல்லையா என்று நமக்குத் தெரியாது. ஆனால் அவர் சென்ற பாதையில் அவருடைய பஸ்ஸுக்கு முன்னால் ஓடிக் கொண்டிருந்த ஒரு டாக்ஸி நன்றாக அவர் பார்வையில் விழுந்ததாகவும், அதன் ஓட்டத்துடன் போட்டி போட்டு அதை முந்திப் பெருமை அடைய வேண்டும் என்ற உற்சாகப் பெருமிதத்தில் பஸ்ஸைப் பக்கவாட்டில் முந்தவிட்டதாகவும், எதிர்காலத்தைப் பற்றிக் கொஞ்சம்கூட அவ நம்பிக்கைப்படாமல் அந்த ரோட்டில் வந்து கொண்டிருந்த நான்கு அப்பாவிகளின் உயிரைத் தம் பஸ் மூலம் வேதனைக்கு இடம் கொடுக்காமல் கண் இமைக்கும் நேரத்தில் போக்கினதாகவும் கேள்விப்படுகிறோம்! உயிருக்குக் கொடுக்கும் மதிப்பா இது? ஓட்டுவதில் கவனம் செலுத்தும் முறையா இது?

ஒரு வேளை அந்த பஸ்ஸின் பிரேக்குகள் சரியாக இயங்கவில்லையோ என்ற சந்தேகமும் எழலாம்.

போக்குவரத்து இலாக்காவினர் உறுதியாகச் சொல்லுகிறார்கள்: ''அந்தப் பஸ்ஸின் பிரேக்குகள் விபத்து நடப்பதற்கு முன்னும் சரியாக இயங்கின. விபத்து நடந்த பிறகு பரிசோதித்துப் பார்த்த போதும் அவை எந்த விதத்திலும் பழுதடைந்திருக்க வில்லை'' என்று. யந்திரக் கோளாறு இல்லை!... அப்படியானால்....?

''பிற்பகல் வேளை. கடற்காற்று இதமாக, சுகமாக வீசிக் களைப்படைந்திருக்கும் டிரைவர் முகத்தில் பட்டு ஒருவித இன்ப மயக்கத்தை உண்டாக்கி மெய்மறந்து போகச் செய்திருக்கலாம். இப்படியெல்லாம் ஒரு டிரைவர் பாதிக்கப்படக் கூடாது என்பதற்காகத்தான் டிரைவருக்குச் சில உடுப்பு விதிகள் நிர்ணயித்திருக்கிறார்கள். கழுத்தை மூடிய கோட், நெற்றிப் பொட்டை மறைக்கக் குல்லா—இவற்றை உபயோகப்படுத்தியாக வேண்டும் என்று சொல்வதற்குத் தகுந்த காரணங்கள் உண்டு. குளிர்ந்த காற்று கழுத்தில், பொட்டில், நெற்றியில் வீசி உராயும் போது புலன்களைப் பாதிக்கும்'' என்கிறார் சொந்தத்தில் கார் வைத்து ஓட்டி அனுபவம் பெற்றவர்.

**ஆபத்து!**



பெருவாரியான போக்குவரத்து பஸ் டிரைவர்களைப் பனியனுடன்தான் பார்க்கிறோம். சில பேரை முன்னிரவு வேளைகளில் கூட கூலிங்கிளாஸுடனேயே பார்க்கிறோம்!

விபத்தில் சம்பந்தப்பட்ட டிரைவர் சபாபதியை அவருடைய நெருங்கிய நண்பர் ஒருவர் போலீஸ் காவலில் இருக்கையில் போய்ப் பார்த்த போது, ''எனக்கு ஒன்னுமே சொல்லத் தெரியலே! எல்லாம் விதி! எப்படி இந்த விபத்து நடந்தது என்றே தெரியவில்லை'' என்றாராம். அந்த நண்பர் மேலும் என்ன கூறினார் தெரியுமா?

''நாங்க சபாபதியைச் சின்னத் தம்பின்னு தான் கூப்பிடுவோம். முப்பது வயசிருக்கும். இன்னும் அவர் பிரம்மச்சாரிதான்! கொஞ்சம் முரட்டு சுபாவம். ஆனால் வம்புதும்புக்குப்

போக மாட்டார்! வேலைக்குப் போகாத நேரத்திலே அவர் கையிலே எப்போதும் ஏதாவது புஸ்தகம் இருந்துக்கிட்டே இருக்கும்! அடிக்கடி நான் திருக்குறள் புஸ்தகத்தைப் பார்த்திருக்கிறேன். கொஞ்ச நாளைக்கு முந்தி வரை அவர் ஏதோ காரணத்தினாலே வேலைக்குப் போகாமல் இருந்தார். அப்புறம் தான் வேலைக்குப் போக ஆரம்பித்தார். விபத்து நடந்த தினத்தன்று அவருக்கு வேலைக்குக் கிளம்ப அவ்வளவு உற்சாகம் இல்லை. லீவு போட்டு விடலாமா வென்று வீட்டில் உட்கார்ந்திருந்த போது அவருடைய தாயார், 'ஏனப்பா! ஏன் இப்படிச் சும்மா உட்கார்ந்திருக்கிறாய்? வேலைக்குப் போயேன்!' என்று நச்சரித்திருக்கிறாள். சின்னத் தம்பிக்குக் கோபம் வந்துவிட்டது. ''இன்னிக்கு வேலைக்

**விபத்து!**



குப் போனால் நான் ஜெயிலுக்குத்தான் போவேன்'' என்று இரைந்து விட்டு வேலைக்குக் கிளம்பினாராம். பாவம்! அவர் நாக்கிலே அன்று அந்த வார்த்தை விபரீதமாக வந்திருக்க வேண்டாம் '' என்கிறார்.

மனத்திலே சலனமோ குழப்பமோ இருந்தால்கூட அவை கவனத்தைப் பாதிக்கும் அல்லவா ?

விபத்தை நேரடியாகப் பார்த்த ஒரு ராணி மேரி கல்லூரி மாணவிக்கு இன்னும் அந்த அதிர்ச்சி தீரவில்லை. ''அப்போது எங்களுக்கு வகுப்பு நடந்துகொண்டிருந்தது. திடீரென்று பீச் ரோட் பக்கத்திலிருந்து படபடவென்று சத்தம் கேட்டது. அதைத் தொடர்ந்து மனித ஆரவாரமும் கேட்டது. மாணவியர் எல்லோரும் வகுப்பறையை விட்டு வெளியே வந்து காம்பவுண்டுச் சுவரை நோக்கிப் போனோம். என் பார்வையில் பட்ட காட்சி என்னை அதிர்ச்சி அடையச் செய்தது. அந்த பஸ்ஸின் முன் பக்கத்து 'கிரில்' பகுதியில் ஒரு மனித உடல் சின்ன பின்னமாகித் தொங்கிக் கொண்டிருந்தது. எனக்கு ஒரே 'ஷாக்'. கற்பனையிலும் நினைக்க முடியாத கோரக் காட்சி அது. நான் இன்னும் அதை நினைத்துப் பார்த்து நடுங்குகிறேன்'' என்கிறார்.

இத்தனை அமளி துமளிகளுக்கும் காரணமாக இருந்தது என்று சொல்லப்படும் அந்த டாக்ஸி, இந்த ஆரவாரத்தில், வலது பக்கம் திரும்பி, லாயிட்ஸ் ரோட் வழியாக மாயமாய் மறைந்து விட்டது என்றும் சொல்லுகிறார்கள்.

நகரப் போக்குவரத்துப் பஸ்களில் பொது மக்களுக்கு வசதிகள் அதிகரித்திருக்கின்றனவா என்ற கேள்விக்கு நல்ல முறையில் பதில் கிடைப்பது அரிது. ஆனால் நகரப் போக்குவரத்து பஸ்களால் பொதுமக்களுக்கு ஆபத்து அதிகரித்திருக்கிறதா என்று கேட்டால் நிச்சயம் 'ஆமாம்' என்ற பதில் கிடைக்கும். பத்திரிகைகளில் அடிக்கடி விபத்துச் செய்திகள் வெளியாவதே இதற்குச் சான்று. பல சந்தர்ப்பங்களில் சிறு விபத்தாயின், நேர்ந்த இடத்தில் பஸ்ஸை டிரைவர் நிறுத்துவது கூட இல்லை. பொதுமக்களின் கோபம், விசாரணை முதலியவற்றிலிருந்து தப்ப பஸ்ஸை ஓட்டிக் கொண்டு போய் விடுகிறார் பொறுப்பின்றி.

''எண்ணூறுக்கு மேற்பட்ட பஸ்கள் நகரப் போக்குவரத்துப் பிரிவில் ஓடுகின்றன. சென்னை நகரப் பாதைகள் இனிமேல் தாங்காது என்ற அளவுக்கு உச்ச கட்டத்தை வாகனப் போக்குவரத்து எட்டி விட்டது. பொதுமக்களின் சௌகரியத்துக்காகக் குறுகலான தெருக்கள் வழியாகக் கூட புது பஸ் பாதைகள் அமைத்திருக்கிறோம்'' என்கிறார் போக்குவரத்துத் துறை அதிகாரி ஒருவர்.

பஸ்கள் ஓடலாம். ஆனால் பொதுமக்களுக்கு வசதியாக ஓடுகின்றனவா? மாலை நேரங்களில் காரியாலயங்களி லிருந்து வீடு திரும்ப மௌண்ட் ரோடு, சென்ட்ரல் போன்ற இடங்களில் பொதுஜனங்கள் மணிக்கணக்கில் காத்திருக்க வேண்டிய நிலை மாறவில்லை. காலையில் பள்ளி, கல்லூரிகளுக்குப் போகும் மாணவ மாணவியர், ஃபுட் போர்டில் அந்தரத்தில் தொங்கிக் கொண்டு போவது அன்றாட அவசியமாகி விட்டது.

விபத்துக்குக் காரணமாக இருந்த பஸ், புதிதாக நடைமுறைக்குக் கொண்டு வரப்பட்டிருக்கும் 'நிற்கும் பஸ்' (Standee Bus).

**விளைவு!**



பொதுமக்கள் அந்த வண்டிக்கு அபிமான மாகச் சூட்டியிருக்கும் பெயர் 'நாய் வண்டி'!

இந்த ரக பஸ்களையும் பழைய ரக பஸ்களையும் ஓட்டுவதில் ஏதாவது விசேஷ வித்தியாசம் இருக்கிறதா என்று ஒரு டிரான்ஸ்போர்ட் டிரைவரிடம் விசாரித்தபோது அவர் அப்படி வித்தியாசம் ஒன்றும் இல்லை என்று சொல்லுகிறார். அவர் குறிப்பிடும் குறைகள் இரண்டு. நகரப் போக்குவரத்து பஸ்களின் பராமரிப்பில் செலுத்தும் கவனம் போதாது. குறைந்த எண்ணிக்கையான ஊழியர்களுக்கு அதிக பஸ்களை இரவு வேளைகளில் டிப்போவில் ஒதுக்குவதினால் அந்த ஊழியர்கள் திறமையாகச் செயல்பட மாட்டார்கள் என்பது ஒன்று. இரண்டாவது ஒரு முனையிலிருந்து மறுமுனை போவதற்கான அவகாசம் பல பாதைகளில் போதுமானதாக இல்லை என்பது. விபத்துக்கள் ஏற்பட முதல் காரணம் உதவுகிறது. நேரத்தைக் கடைப்பிடிக்கப் பல இடைவெளி ஸ்டாப்புகளில் கண்டக்டர் இரட்டை விசில் கொடுத்துக் காத்திருப்பவர்களின் வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொள்ள இரண்டாவது உதவுகிறது.

''எந்தப் பாதையிலும் ஓடும் அவகாசம் போதவில்லை என்று டிரைவர்கள் விண்ணப்பித்துக் கொண்டால், நேரத்தை அதிகப்படுத்துவது வெகு சுலபம்'' என்கிறார் போக்குவரத்துத் துறை அதிகாரி. டிரைவர்கள் இந்த விஷயத்தில் ஏதாவது முயற்சி செய்கிறார்களா என்று தெரியவில்லை. உதாரணமாக கெல்லிஸுக்கும் திருவல்லிக்கேணிக்கும் இடையில் 22ம் நம்பர் பஸ் பாதையில் பத்தொன்பது 'ஸ்டாப்'புகள் இருக்கின்றன. ஓடும் நேரம் 28 நிமிடம் என்று சொல்கிறார்கள். காலை மாலை நேரங்களில் இந்தப் பாதையில் ஓடும் பஸ்கள் மக்களின் சாபத்துக்கு ஆளாகாமல் இருப்பதில்லை!

தனியார் நடத்தும் பஸ் நிறுவனங்கள் பொதுமக்களின் நலனில் எவ்வளவு அக்கறை காண்பிக்கின்றன என்பதைக் கவனிக்க நகர பஸ் டிரைவர்கள், கண்டக்டர்களுக்கு வாய்ப்பில்லை. போட்டி இல்லை என்ற ஒரே காரணத்தினால் எந்த வித பாதகமும் விளைவிக்கலாமா? இதுதான் தேசியமாக்குவதின் தத்துவம் என்றால் இந்த தேசிய மயம் அவசியம்தானா?

நகர பஸ் போக்குவரத்து இலாக்கா, நிஜமாகவே பொதுமக்கள் நலனில் அக்கறை காட்ட வேண்டுமென்று நினைத்தால் பஸ் பராமரிப்பிலே இன்னும் சிரத்தை காட்ட வேண்டும். அதிகப்படியான பஸ்களை அவசியமான வழிகளில் நெருக்கடி நேரத்தில் ஓடச் செய்ய வேண்டும். பொறுமை இல்லாத கண்டக்டர்களுக்கு மாற்றுப் பணி கொடுத்து ஒதுக்க வேண்டும். பஸ்களை விபத்துக்குள்ளாக்கும் டிரைவர்களின் லைசென்ஸ்களை நிரந்தரமாக ரத்து செய்ய வேண்டும். இந்த விஷயங்களை அவர்கள் கவனிக்காமல் இருப்பது சுலபம். ஆனால் லட்சக் கணக்கான நகர மக்கள் தங்கள் கஷ்டங்களை மறக்க மாட்டார்கள்.

—பட்டினத்தார்

---

# தட்டியில் புகுந்தால்...

தேர்தல் காலத்தில் தெருவை அடைத்து வளைவுகள் போடக் கூடாது என்று காவல் துறை அறிக்கை கூறுகிறது.

சட்டத்தையும் ஒழுங்கு முறைகளையும் மதிக்கத் தெரிந்தவர்கள் நம் தமிழ்நாட்டு மக்கள்.

'ஆர்ச்' என்னும் வளைவுகள்தானே போடக்கூடாது? சட்டம் தட்டியில் புகுந்தால் எங்களுக்குக் கோலத்தில் புகத் தெரியுமே என்பது போலப் புத்திசாலித்தனமான காரியங்கள் செய்திருக்கிறார்கள் நம் மக்கள்.



தெருவை அடைத்துத் தட்டைப் பந்தல் போட்டிருக்கிறார்கள்! சென்னை உஸ்மான் சாலையில் இரு கட்சிப் பந்தல்களைப் பார்க்கலாம்!

இப்படியும் பந்தல் போடலாமா என்று யாராவது ஆட்சேபனை எழுப்பினால், நாங்கள் தேர்தலுக்காக எங்கே போட்டோம்? வேறு நிகழ்ச்சிகளுக்காகத்தான் போட்டோம் என்று கூற எத்தனை நேரம் பிடிக்கும்?

— ரா. வி.

அமெரிக்க அரசியல் நிர்ணய சட்டம் ஏற்பட்டு 200 ஆண்டுகள் ஆகியும் 25 திருத்தங்கள்தாம் வந்துள்ளன. ஆனால் நமது அரசியல் நிர்ணயச் சட்டம் ஏற்பட்டு 21 ஆண்டுகளில் 23 திருத்தங்கள் வந்து விட்டன!

—'ஹிந்து' கடிதம்.




★



பஞ்சாப் அமைச்சர் சோசன் சிங் பாசி 6 மாத காலத்தில் 25 ஆயிரம் ரூபாய்க்கு டெலிபோன் பில் கட்டியிருக்கிறார்!

-டைம்ஸ் ஆப் இந்தியா

★

சென்ற மாதம் 4 ஆயிரம் ரூபாய்க்குப் புது டெல்லியில் கிடைத்து வந்த பழைய ஜீப்கள் இப்பொழுது 12 ஆயிரத்துக்குக்கூடக் கிடைப்பதில்லை. காரணம் — தேர்தல்! —டைம்ஸ் ஆப் இந்தியா - பாலி.





# கோபாலன் கோப்பையை மீட்டோம்!

ஜனவரி 22, 23, 24ம் தேதிகளில் சென்னை சேப்பாக்கம் மைதானத்தில் இலங்கைக்கும் தமிழ் நாட்டுக்கு மிடையே நடைபெற்ற மூன்று நாள் கிரிக்கெட் பந்தயத்தில், முதல் இன்னிங்ஸில் தமிழ்நாடு எடுத்த அதிக ரன்கள் காரணமாக வெற்றி பெற்று எம். ஜே. கோபாலன் பரிசுக் கோப்பையைத் திரும்பப் பெற்றது. 1951—52ல் நிறுவப்பெற்ற கோபாலன் பரிசுப் பந்தயங்களில் இதுவரை இலங்கை பதினொரு தடவையும், தமிழ்நாடு ஐந்து தடவையும் வெற்றியடைந்துள்ளது. ஸ்கோர் விவரம்: இலங்கை முதல் இன்னிங்ஸ்: 273 ; இரண்டாவது இன்னிங்ஸ்: 139. தமிழ் நாடு முதல் இன்னிங்ஸ்: 322 ; இரண்டாவது இன்னிங்ஸ் : ஒரு விக்கெட் நஷ்டத்துக்கு இருபது ரன்கள்.

பூவா — தலையா போட்டதில் இலங்கை வெற்றி பெற்று முதலில் ஆடத் தொடங்கி 17 ரன்கள் எடுப்பதற்குள் 3 விக்கெட்டுகளை இழந்தது. ஆனால் நான்காவதாக ஆட வந்த டேவிட் ஹைறன் 97 ரன்கள் எடுத்தார், அதிர்ஷ்டவசமாக. ஆம்; அதிர்ஷ்டம் இவர் பக்கம் இருந்ததாலேயே இவர் 13, 33, 37 ரன்கள் எடுத்திருந்த சந்தர்ப்பங்களில் ஆட்டமிழக்காமல் தப்பினார். அவர் கொடுத்த 'காட்ச்'களை நம் ஆட்டக்காரர்கள் நழுவ விட்டதால் அவருக்கு அடித்தது யோகம்! இலங்கை அணியின் முதல் இன்னிங்ஸில் லயனல் பர்ணண்டோ (68 ரன்), விக்கெட் கீப்பர் ஹாமர் (52 ரன்) இருவரும் நன்றாக ஆடியதும், வேங்கடராகவன் 6 விக்கெட்டுக்களை வீழ்த்தியதும் குறிப்பிடத்தக்கது.

தமிழ்நாடு அணி ஆடத் தொடங்கியதும் இலங்கை அணியைப் போலவே 2 விக்கெட்டுக்கள் 5 ரன்களுக்குச் சரிந்தன. மூன்றாவதாக ஆட வந்த மைக்கேல் டால்வி அற்புதமாக ஆடி 108 ரன்கள் எடுத்தார். இவ்வாண்டு இப்பந்தயத்தில் சதம் எடுத்தவர் டால்வி ஒருவர்தான். வேங்கடராகவன் பந்து வீச்சில் காண்பித்த திறமையை 'பாட்' செய்வதிலும் காண்பித்தார். இவர் எடுத்த 63 ரன்களும், கனியோம் எடுத்த 83 ரன்களும் முதல் இன்னிங்ஸ் வெற்றியை ஊர்ஜிதம் செய்ய உதவின. இலங்கை போலீஸ் சப்-இன்ஸ்பெக்டர் கெஹல் கமுவா கன வேகமாகப் பந்து வீசி 54 ரன்கள் கொடுத்து 5 விக்கெட்டுக்களை வீழ்த்தினார். இலங்கையை விடத் தமிழ்நாடு 49 ரன் முதல் இன்னிங்ஸில் கூடுதலாக எடுத்து விட்டது.

இலங்கை இரண்டாவது முறையாக ஆடத் தொடங்கியதும் விக்கெட்டுகள் மளமளவென்று சரிந்தன. கடைசி நாளன்று (24ந்தேதி) பிற்பகல் இரண்டு மணிக்கு இலங்கை அணி 139 ஓட்டங்களுக்கு 'ஆல் அவுட்' ஆனபோது 155 நிமிடங்களில் 91 ரன்கள் எடுத்தால் தமிழ் நாட்டுக்கு முழுவெற்றி என்ற நிலை ஏற்பட்டது. 11 ஓவர்கள் பந்து வீசி 25 ரன்களுக்கு நடராஜ் 4 விக்கெட்டுக்களை வீழ்த்தித் தமிழ்நாடு அணியின் முழு வெற்றிக்குச் சாதகமான நிலையை ஏற்படுத்தினார். இலங்கையின் முதல் இன்னிங்ஸில் இரண்டு 'காட்ச்'களைக் கோட்டை விட்ட டி. இ. சீநிவாசன் இரண்டாவது இன்னிங்ஸில் மூன்று 'காட்ச்'கள் பிடித்து, இழந்த பெருமையைத் திரும்பப் பெற்றார். 20 மீட்டர் தூரம் ஓடிப் பிடித்த 'காட்ச்', உருண்டு புரண்டு தரையில் விழுந்து ஒற்றைக் கையினால் இவர் பந்தைப் பிடித்தது இரண்டும் ரசிகர்களின் பாராட்டைப் பெற்றன.

கோபாலகிருஷ்ணனும் சங்கரும் தமிழ்நாட்டின் இரண்டாவது இன்னிங்ஸைத் தொடங்கி, 'கூட்ஸ்' வண்டி வேகத்தில் ஆடிக் கொண்டிருந்ததை ரசிகர்கள் வரவேற்கவில்லை. நாம் இருப்பது சேப்பாக்கம் மைதானமா அல்லது இங்கிலாந்தா என்று சந்தேகிக்கும்படி எதிர் பாராதவிதமாக மழை விட்டு விட்டுப் பெய்து, இனி ஆட்டம் தொடராது என்று இரு காப்டன்களும் நாலு மணிக்கு முடிவெடுக்கும்படி ஆயிற்று. சென்னையில் மழை காரணமாகக் கடைசி நாள் ஆட்டம் முடிவு காண இயலாமல் தடைப்பட்டது இதுவே முதல் தடவையாகும்.

முதல் இன்னிங்ஸ் வெற்றியை யொட்டி கோபாலன் பரிசுக் கோப்பையை ஏ.ஜி. ராம்சிங் தமிழ்நாடு காப்டன் வேங்கடராகவனிடம் அளித்தார். தென் பிராந்திய அணிக்குத் தலைமை வகித்து வெற்றிபெற்ற வேங்கடராகவன் சமீபத்தில் துலீப் கோப்பையையும் பெற்றது நினைவிருக்குமே? — பாணன்



படங்கள் :

டால்வி

காப்டன் வேங்கடராகவன்

# சேப்பாக்கத்தில் ஷாவும் சோவும்

"சேப்பாக்கத்தில் ஷாவும் சோவும் விஜயம் செய்தது பிரமாதப்பட்டது!''

''இது என்ன ஜோக் அடிக்கிறீர்கள்? கிரிக்கெட் மைதானத்தில் ஷாவுக்கும் சோவுக்கும் என்ன வேலே ?''

''இங்கிலாந்து பள்ளிச் சிறுவர்களுக்கும் இந்தியப் பள்ளிச் சிறுவர்களுக்கும் இடையில் நடைபெற்ற கிரிக்கெட் டெஸ்டை ரேடியோவில் விமரிசனம் செய்ய சோ வந்துவிட்டார்!''

''கூடவே ஷாவின் 'சட்டயர்' வந்ததாக்கும்!''

''சோ ஏமாற்றிவிட்டார்! ரொம்பச் சாதுப் பிள்ளை மாதிரி பந்துக்குப் பந்து அடிப்பதை மட்டும் விமரிசனம் செய்தார்!''

''சோ ஏமாற்றமளித்தார்; சரி, ஏதோ ஷா என்று குறிப்பிட்டீர்களே?''

''ஷா 'விட்' அடிக்கவில்லை; செஞ்சுரி அடிச்சார். அகில இந்திய பள்ளி மாணவர் கிரிக்கெட் கோஷ்டியின் ஹீரோ ஷா!''

''ஓகோ!''

''இவர்தான் டாப் ஸ்கோரர் கல்யாணம். 765 போட்டிருக்கிறுர்!''

''அடேயப்பா! இவ்வளவு ரன்கள் எப்படி எடுக்க முடிந்தது ?''

''சுவாமி! இது வரை பட்டுக்கோட்டை எஸ். கல்யாணசுந்தரம் ஸ்கோர் செய்த மாட்சுகளின் எண்ணிக்கைதான் 765!''

அம்பயர் ஒருவர் வெள்ளைக் கொடி காட்டினுல் 'நாலு' போட்டு வெள்ளைக் கொடி காட்டுவார் கல்யாணம்! ஸ்கோர் போர்டுக்கு எண்ணிக்கை மாற்ற அடுத்த கணமே எச்சரிக்கை விடுப்பார்! பத்திரிகைப் பிரதிநிதிகளுக்கு ஒவ்வோர் ஆட்டக்காரரும் எத்தனை ரன்கள் எத்தனை நிமிஷத்தில் எடுத்திருக்கிறுர்கள்; எத்தனுவது நிமிஷத்தில் யார் 'அவுட்' ஆனுர் என்ற புள்ளி விவரங்களைச் சரமாரியாக எடுத்து வழங்குவார் இரு கல்யாணம். இவரது குறிப்பேடு பல சரித்திரங்களைக் கூறும்; சாதனைகளைக் காட்டும். 'பருப்பில்லாத கல்யாணம்' சிறக்காது என்பதுபோல 'கல்யாணம் இல்லாத கிரிக்கெட் மாட்ச்' பரிமளிக்காது.

"இங்கே பாரும்! இந்த ஆங்கிலேயச் சிறுவன், லாங்மோர் வேவலின் பரம்பரையில் வந்தவனும்!''

''இதோ அடாது ஆட்டம் நடந்தாலும் விடாது நாவல் பக்கங்களைப் புரட்டுகிறுன் ஆலன்!''

''இந்த அமர்ஷர்மா மட்டும் என்ன? பூனையோடு விளையாடிக் கொண்டிருக்கிறுனே!''

பெரிய டெஸ்ட் பந்தயங்களைப் பார்த்தவர்களுக்கு இந்தப் பள்ளிச் சிறுவர் டெஸ்ட் சோடையாகத் தோன்றவில்லை. ஆங்கிலேய இளைஞர்கள் ஆடி ஓடிப் பவுண்டரி போகாமல் பல பந்துகளைக் காத்தார்கள். இந்திய கோஷ்டியில் கடைசி பாட்ஸ்மன் முதல்தர ஆட்டக்காரரைப்போல் ஆடிய அதிசயத்தை மறக்க முடியுமா? வளரும் சமுதாயத்தில் கிரிக்கெட் ஆட்டம் எப்படி இருக்குமோ என்று ஐயுறுவோர்களுக்கு இந்த மாட்ச்—ஒரு சோறு பதம்! இந்தியப் பையன்கள் ஐந்து டெஸ்ட்கள் ஆடி, நாலே 'டிரா'வாக்கி, ஒன்றில் வென்று ஜயக்கொடி நாட்டியிருக்கிறுர்கள்.

— குண்டுமணி





# மோகினித் தீவு

## நான்காம் அத்தியாயம்

பூரண சந்திரன் உச்சி வானத்தை நெருங்கி வந்துகொண்டிருந்தான். அந்தத் தீவுக்கு 'மோகினித் தீவு' என்று ஏன் பெயர் வந்தது என்பது தமக்குத் தெரியாது என்று கப்பல் காப்டன் சொன்னது எனக்கு நினைவு வந்தது. அதற்குக் காரணம் தேடவா வேண்டும்? நள்ளிரவில் வெள்ளி நிலவில் அந்தத் தீவை ஒரு தடவை பார்த்தவர்களுக்கு 'மோகினித் தீவு' என்னும் பெயர் எவ்வளவு பொருத்தமானது என்பது உடனே தெரிந்து போய்விடும்.

சொர்க்க பூமியிலிருந்து ஏதோ ஒரு காரணத்தினால் ஒரு சிறு பகுதி தனித் துண்டாகப் பிரிந்து வந்து கடலில் விழுந்து அங்கேயே மிதப்பது போல மோகினித் தீவு அச்சமயம் காட்சி அளித்தது. சொர்க்கத்திலிருந்து அந்தத் துண்டு பிரிந்து விழுந்த சமயத்தில் அத்துடன் விழுந்துவிட்ட தேவனும் தேவியுந்தான் இந்தத் தம்பதிகள் போலும்! ஆனால் தேவலோகத்துத் தம்பதிகளாயிருந்தாலும், பூலோகத்துச் சதிபதிகளைப் போலவேதான் இவர்கள் அடிக்கடி விவாதத்திலும் விவகாரத்திலும் ஈடுபடுகிறார்கள்!....

மோகினித் தீவின் அந்தச் சுந்தர புருஷன் ''முகத்தில் இரு வாள்களுடன் கூடிய 'கொல்லியம்பாவை'யை மதுரையில் சுகுமார சோழன் சந்தித்தான்'' என்று சொன்னதும் அவன் அருகில் வீற்றிருந்த வனிதாமணி குறுக்கிட்டாள்.

''பெண் குலத்தைப் பற்றி இவ்விதம் அடிக்கடி ஏதாவது நிந்தை மொழி கூறாவிட்டால் புருஷர்களுக்குத் தலை வெடித்து விடும் போலிருக்கிறது!'' என்றாள். பால் நிலவு பட்டு அவளுடைய பால் வடியும் முகம் தந்தத்தினால் செய்த பதுமையின் முகம் போலத் திகழ்ந்தது. ஆனால் அந்தப் பதுமை முகத்தில் ஜீவகளை ததும்பியது. அந்த முகத்திலிருந்த கரிய விழிகள் சந்திர கிரணங்கள் பட்டு எழுந்த எதிரொளிக் கதிர்கள் வாள்களாகவும் வேல்களாகவும், வஜ்ராயுதத்தின் வீச்சுக்களாகவும் ஜொலித்தன.

பாவைமார்களின் வாளையொத்த விழிகளைப் பற்றி அந்த ஆடவன் கூறியது அப்படியொன்றும் தவறில்லை என்று எனக்குத் தோன்றியது.

அவன் தன் காதலியின் வார்த்தைகளைக் கேட்டுப் புன்னகை புரிந்த வண்ணம் அவள் முகத்தை உற்று நோக்கினான். ''மன்னிக்க வேண்டும். புவன மோகினியைக் 'கொல்லியம் பாவை' என்று நான் கூறியது குற்றம்தான். அவளுடைய கண்களை வாள்கள் என்றும் வேல்கள் என்றும் கூறியது அதைவிடப் பெரிய குற்றம். 'அமுத கிரணங்களை அள்ளி வீசும் ஜீவச் சுடர் ஒளிகள்' என்று அவளுடைய கண்களைச் சொல்லியிருக்க வேண்டும்!'' என்றான்.

புவன மோகினி என்ற பெயரை அவன் சொன்னவுடனேயே எனக்குக் கதையின் பேரில் நினைவு சென்றது. ''என்ன என்ன? சுகுமார சோழன் மதுரையில் சந்தித்த 'கொல்லியம் பாவை' பாண்டிய குமாரிதானா? பராக்கிரம பாண்டியரின் ஒரே புதல்வியா?'' என்று வியப்புடன் கேட்டேன்.

''ஆம், ஐயா! சுகுமார சோழன் மதுரைமா நகருக்குச் சென்ற போது அவனுடைய விதியும் அவனைப் பின் தொடர்ந்து சென்றது. விதியின் வலிமை மிகப் பெரிது என்று பெரியோர்கள் சொல்வார்கள். விதி வலிமையுடன் கூட ஒரு பெண்ணின் மன உறுதியும் சேர்ந்து விட்டால், அந்த இரண்டு சக்திகளுக்கு முன்னால் யாரால் எதிர்த்து நிற்க முடியும்? சுகுமாரனால் எதிர்த்து நிற்க முடியவில்லை. ஆனமட்டும் அவன் போராடிப் பார்த்தும் கடைசியில் சரணாகதி அடைய நேர்ந்தது.....''




''நீங்கள் கதை சொல்கிறீர்களா? அல்லது புதிர் போடுகிறீர்களா? பாவம்!

இவருக்கு நீங்கள் சொல்வது ஒன்றுமே புரியவில்லை. மதுரையில் நடந்ததை இனிமேல் நான் கொஞ்சம் சொல்லட்டுமா ?'' என்று கேட்டு விட்டு, அந்த இளமங்கை உடனே சொல்லத் தொடங்கினாள் :—

"மதுரையில் அப்போது தேவேந்திரச் சிற்பி என்பவர் பிரசித்தி பெற்றிருந்தார். அவர் வயது முதிர்ந்தவர். அவருக்கு மனைவி மக்கள் யாரும் இல்லை. அவர் கலியாணமே செய்து கொள்ளவில்லை. கலைத் தேவியைத் தாம் திருமணம் செய்து கொண்டிருப்பதாகவும் வேறொரு மனைவிக்குத் தமது அகத்தில் இடமில்லையென்றும் சில சமயம் அவர் சொல்லுவது உண்டு. பராக்கிரம பாண்டியருக்குத் தேவேந்திரச் சிற்பியிடம் அபிமானம் இருந்தது. தேவேந்திரச் சிற்பியின் சிற்பக் கூடத்துக்கு அவர் சில சமயம் செல்லுவதுண்டு. தம்முடன் தம் குமாரி புவனமோகினியையும் அழைத்துப் போவார். குடும்பமும் குழந்தைகளும் இல்லாத தேவேந்திரச்



சிற்பிக்கு ராஜகுமாரியிடம் மிகுந்த வாஞ்சை ஏற்பட்டது. ராஜகுமாரிக்கும் தேவேந்திரச் சிற்பியிடம் அன்பு உண்டாகி வளர்ந்தது. அந்த அன்பு காரணமாகச் சிற்பக் கலையிடத்திலும் அவளுக்குப் பற்று ஏற்பட்டது.

பராக்கிரம பாண்டியர் தம்முடைய ஆட்சிக் காலத்தில் மீனாட்சி அம்மன் கோயிலைப் புதுப்பித்துக் கட்ட விரும்பினார். அதற்கு வேண்டிய ஆயத்தங்களைச் செய்யும்படி தேவேந்திரச் சிற்பிக்குச் சொல்லியிருந்தார். தஞ்சை நகரில் ராஜ ராஜ சோழர் கட்டிய பிரகதீஸ்வர ஆலயத்தைப் பார்த்த பின்னர் மதுரை மீனாட்சி அம்மன் கோயிலை அதைவிடப் பெரிதாகக் கட்ட வேண்டும் என்ற ஆசை பராக்கிரம பாண்டியருக்கு ஏற்பட்டது. ஆகையால் வேலையைத் துரிதப்படுத்தும்படி கட்டளையிட்டார்.

தேவேந்திரச் சிற்பியின் சிற்பக் கூடத்தில் பல மாணாக்கர்கள் சிற்பக் கலை கற்றுக் கொண்டிருந்தார்கள். வெவ்வேறு தேசங்களிலிருந்து வந்தவர்கள் இருந்தார்கள். பராக்கிரம



பாண்டியர் உத்தமசோழரைச் சிறைப் பிடித்து வந்த சில நாளைக்கெல்லாம் தேவேந்திரச் சிற்பியின் சிற்பக்கூடத்துக்கு ஓர் இளைஞன் வந்தான். தேவேந்திரச் சிற்பி இன்னார்என்பதைத் தெரிந்து கொண்டு அவரிடம் வந்து பணிவோடு நின்று ஒரு விண்ணப்பம் செய்து கொண்டான். 'ஐயா! நான் சோழ நாட்டைச் சேர்ந்தவன்; சிற்பக் கலையில் பற்றுக் கொண்டு அக்கலையைக் கற்றுக் கொள்ளத் தொடங்கினேன்; ஆனால் சோழ நாட்டில் இப்போது ஆலயத் திருப்பணி எது

வும் நடைபெறவில்லை. ஆகையால் என்னுடைய வித்தையைப் பூர்த்தி செய்து கொள்ள விரும்பி யாத்திரை கிளம்பினேன். போகுமிடமெல்லாம் மதுரை தேவேந்திரச் சிற்பியாரின் புகழைக் கேட்டு என் செவிகள் குளிர்ந்தன; என் மனமும் மகிழ்ந்தது. அத்தகைய பிரசித்தமான ஆசிரியரை என் குருவாகக் கொண்டு நான் கற்ற சிற்பக் கலையைப் பூர்த்தி செய்து கொள்வதற்காக வந்தேன். கருணை கூர்ந்து என்னைத் தங்கள் சீடனாக அங்கீகரிக்க வேண்டும்!' என்று சொன்னான். அந்த வாலிபனின் அடக்க ஒடுக்கமும் பணிவான பேச்சும் களை பொருந்திய முகமும் தேவேந்திரச் சிற்பியின் மனத்தைக் கவர்ந்தன. அக்கணமே அவனைத் தம் சீடனாக ஏற்றுக் கொண்டு சிற்பக் கூடத்தில் வேலை செய்யப் பணித்தார். ஆனால் சில நாளைக்குள்ளேயே தமக்குச் சீடனாக வந்திருப்பவன் உண்மையில் தமக்குக் குருவாயிருக்கத் தகுந்தவன் என்று தேவேந்திரச் சிற்பி தெரிந்து கொண்டார். தம்மைக் காட்டிலும் அந்த வாலிபனுக்குச் சிற்ப வித்தையின் நுட்பங்கள் அதிகமாகத் தெரியும் என்று கண்டு கொண்டார். இவ்விதம் தெரிந்து கொண்டதனால் அவர் அதிருப்தியோ, அசூயையோ கொள்ளவில்லை. அளவிலாத மகிழ்ச்சியும் பெருமிதமும் அடைந்தார். இத்தகைய சிற்ப மேதாவி ஒருவன் தமக்குச் சீடனாகக் கிடைத்திருக்கிறபடியால் மீனாட்சிஅம்மன் கோயில் திருப்பணியை விரைவாகவும் சிறப்பாகவும் நடத்தி முடிக்கலாம் என்ற நம்பிக்கை தேவேந்திரச் சிற்பிக்கு ஏற்பட்டது.

உத்தம சோழரைத் தேர்க்காலில் கட்டி இழுத்த கோரமான காட்சியைப் பார்த்த நாளிலிருந்து புவனமோகினிக்கு வாழ்க்கையில் உற்சாகமே இல்லாமல் போயிருந்தது. ஆகையினால் அரண்மனைக்குள்ளேயே இருந்து காலங் கழித்து வந்தாள். தன்னுடைய கலியாணப் பேச்சு காரணமாக அத்தகைய குரூரமான சம்பவம் நிகழ்ந்ததை எண்ணி எண்ணி அவள் வருந்தினாள். இது போதாததற்குச் சோழ நாட்டு இளவரசர்களைச் சிறைப் பிடித்துக் கொண்டு வருவதற்குத் தன் தந்தை முயன்று வருகிறார் என்னும் செய்தி அவளுக்கு இன்னும் அதிக மனச் சோர்வை உண்டாக்கியிருந்தது. இந்த நிலையில் அவள் தன்னுடைய தந்தைக்கு இணையாக மதித்து வந்த தேவேந்திரச் சிற்பியைக்கூட நெடு நாள் வரையில் போய்ப் பார்க்கவில்லை.

இப்படியிருக்கும் போது ஒரு நாள் தேவேந்திரச் சிற்பியிடம் புதிதாகச் சோழ நாட்டிலிருந்து ஒரு மாணாக்கன் வந்து சேர்ந்திருக்கிறான் என்றும் அவன் சிற்பக் கலையில் தேர்ந்த மேதாவி என்றும் கேள்விப்பட்டதாகப் புவனமோகினியிடம் அவளுடைய தோழி ஒருத்தி சொன்னாள். இதைக் கேட்டதும் புவனமோகினிக்குத் தேவேந்திரச் சிற்பியை வெகு நாட்களாகத் தான் போய்ப் பார்க்கவில்லை என்பது நினைவு வந்தது. அதற்குப் பரிகாரமாக உடனே அவரைப் போய்ப் பார்க்கத் தீர்மானித்தாள். முடிந்தால் அவருடைய புதிய சீடனையும் பார்க்க அவள் விரும்பினாள். சோழ நாட்டிலிருந்து வந்தவனாகையால், ஒரு வேளை சோழ இளவரசர்களைப் பற்றி அவன் அறிந்திருக்கலாம் அல்லவா? தன் தந்தையின் படை வீரர்களிடம் சோழ இளவரசர்கள் சிக்காமல் இருக்க வேண்டுமே என்று அவளுக்கு மிகுந்த கவலை இருந்தது. உத்தம சோழர் அவருடைய அரண்மனைப் பணிப் பெண்ணாகத் தன்னை வரும்படி சொன்னதைப் பற்றி அவளுக்குக் கோபமும் ஆத்திரமும் இல்லாமல் இல்லை. ஆயினும் அந்த அவமானம் தனக்கு நேர்ந்ததின் பொறுப்பை அவள் தன் தந்தையின் பேரிலேயே சுமத்தினாள். இவர் எதற்காக வலியப் போய்த் தன்னைச் சோழ குமாரனுக்கு மணம் செய்து கொடுப்பதாகச் சொல்ல வேண்டும்? அப்படிச் சொன்னதினால்தானே இந்த அவமானம் தனக்கு நேர்ந்தது? பாண்டிய நாட்டில் பிள்ளையைச் சேர்ந்தவர்கள் பெண்ணைத் தேடிக் கொண்டு போவதுதான் வழக்கம். சாக்ஷாத் பரமசிவனே கைலாசத்திலிருந்து மீனாட்சியம்மனைத் தேடிக் கொண்டு மதுரைக்கு வந்து அம்பிகையை மணந்து கொண்டாரே? அதற்கு மாறாக, பராக்கிரம பாண்டியர் மகளுக்கு வரன் தேடிக் கொண்டு ஏன் தஞ்சாவூருக்குப் போனார்? அப்படி முறை தவறிய காரியத்தைச் செய்து விட்டுப் பிறகு ஆத்திரப்படுவதில் பயன் என்ன? உத்தம சோழரைத் தேர்க் காலில் கட்டி இழுப்பதனாலோ அவருடைய குமாரர்களைச் சிறைப் பிடித்து வந்து சித்திரவதை செய்வதனாலோ அவமானம் நீங்கி விடுமா?

பெண்ணாய்ப் பிறந்தவர்கள் கலியாணம் செய்து கொண்டுதான் ஆக வேண்டும் என்பது என்ன கட்டாயம்? தமிழ் மூதாட்டியான ஔவையாரைப் போல் ஏன் கன்னியாகவே இருந்து காலம் கழிக்கக் கூடாது? பராக்கிரம பாண்டியனுடைய மகளாகப் பிறந்ததினாலேயல்லவா இவ்வளவு துன்பங்

களும் அவமானங்களும் தனக்கு நேர்ந்தன? பாண்டியர் மகளாகப் பிறக்காமல் தேவேந்திரச் சிற்பியின் புதல்வியாகத் தான் பிறந்திருக்கக் கூடாதா என்று புவனமோகினி எண்ணி எண்ணிப் பெருமூச்சு விட்டாள். தன்னுடைய மனோநிலையை அறிந்து தன்னிடம் அநுதாபப்படக் கூடிய ஆத்மா இந்த உலகத்தில் தேவேந்திரச் சிற்பி ஒருவர்தான். அவரை இத்தனை நாளும் பார்க்கப் போகாமலிருந்தது தவறு. — இவ்வாறெல்லாம் எண்ணிப் பாண்டிய குமாரி அன்று மத்தியானம் தேவேந்திரச் சிற்பியின் சிற்ப மண்டபத்துக்கு வருவதாக அவருக்குச் செய்தி சொல்லி அனுப்பினாள்.

கொஞ்ச காலமாக ராஜகுமாரி தம்மை மறந்திருந்தது தேவேந்திரச் சிற்பியாருக்கு வியப்பாயும் வருத்தமாயுமிருந்தது. ஆகவே இப்போது அரசிளங்குமரி வரப்போகிறாள் என்னும் செய்தியினால் மிகுந்த குதூகலம் அடைந்து, அந்தச் செய்தியை முதன் முதலில் மதிவாணனுக்குத் தெரியப்படுத்தினார். சோழ குமாரன் தன்னுடைய பெயர் மதிவாணன் என்று அவரிடம் சொல்லியிருந்தான். ஆச்சாரிய சிற்பியார் தம்முடைய புதிய மாணாக்கனைப் பார்த்து, 'மதிவாணா! சமாசாரம் கேட்டாயா? இன்றைக்குப் பாண்டிய ராஜகுமாரி இங்கே வரப் போகிறாளாம். வருவதாகச் செய்தி சொல்லி அனுப்பியிருக்கிறாள். புவனமோகினிக்கு என்னிடம் மிக்க வாஞ்சை உண்டு. அதைவிடச் சிற்பக் கலையில் பற்று அதிகம். அவளுடைய தந்தையான பராக்கிரம பாண்டியரிடம் எவ்வளவு மரியாதை வைத்திருக்கிறாளோ அவ்வளவு பக்தி என்னிடமும் அவளுக்கு உண்டு. உத்தமமான குணம் படைத்த பெண். அழகோடு அறிவும், அறிவோடு குணமும் அப்படிப் பொருந்தியிருப்பது மிகவும் துர்லபம்!' என்றெல்லாம் வர்ணித்தார். ஆனால் அந்த வர்ணனையெல்லாம் மதிவாணன் காதில் ஏறவே இல்லை. புவனமோகினியை அந்த வாலிபன் பேய் பிசாசு என்று நினைத்தானோ அல்லது வேறு என்ன நினைத்தானோ தெரியாது. அவள் வருகிறாள் என்ற செய்தி கேட்டதும் அவன் முகத்தில் பயப்பிராந்தியும் அருவருப்பும் திகைப்பும் விழிப்பும் தோன்றின. இதைப் பார்த்துத் தேவேந்திரச் சிற்பியும் திகைத்துப் போனார். 'ஏன், அப்பா, உனக்கு என்ன வந்து விட்டது திடீரென்று? ஏதாவது உடம்பு சரியில்லையா?' என்று கேட்டார். மாணாக்கன் குருவின் காலில் சாஷ்டாங்கமாக விழுந்து, 'என்னைக் காப்பாற்றியருள வேண்டும்!' என்று பிரார்த்தித்தான். குரு மேலும் தூண்டிக் கேட்டதின் பேரில் தன்னுடைய விசித்திரமான விரதத்தைப் பற்றிச் சொன்னான். 'குருநாதா! நான் சில காலத்துக்குப் பெண்களின் முகத்தை ஏறிட்டுப் பார்ப்பதில்லையென்றும் அவர்களுடன் பேசுவதில்லையென்றும் விரதம் எடுத்துக் கொண்டிருக்கிறேன். தஞ்சையில் நான் முதலில் சிற்பம் கற்றுக் கொண்ட குருவுக்கு அவ்விதம் வாக்குறுதி கொடுத்திருக்கிறேன். அதை மீறி நடந்தால் என்னுடைய சிற்ப வித்தையை அடியோடு மறந்து விடுவேன் என்று என் குருநாதர் சொல்லியிருக்கிறார். ஆகையால் தாங்கள் இச்சமயம் என்னைக் காப்பாற்ற வேண்டும். ராஜகுமாரியை நான் பார்க்கவே விரும்பவில்லை. பார்த்த பிறகு அவள் ஏதாவது கேட்டால் எப்படிப் பதில் சொல்லாதிருக்க முடியும்? இந்தச் சிற்பக் கூடத்தில் ஒதுப்புறமான இடம் ஒன்றை எனக்குக் கொடுத்து விடுங்கள். நான் ஒருவர் கண்ணிலும் படாமல் என் வேலையைச் செய்து கொண்டிருக்கிறேன்!' என்று சீடன் முறையிட்டதைக் கேட்ட தேவேந்திரச் சிற்பியாருக்குச் சிறிது வியப்பாகத்தான் இருந்தது. ஆயினும் வேறு வழியின்றி அவனுடைய பிடிவாதமான கோரிக்கைக்கு அவர் இணங்க வேண்டியதாயிற்று.

அன்று மத்தியானம் பாண்டிய குமாரி சிற்பக் கூடத்துக்கு வந்தாள். தேவேந்திரச் சிற்பியிடம் சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்து விட்டுச் சோழ நாட்டிலிருந்து வந்திருந்த சீடனைப் பற்றிக் கேட்டாள். அவனைப் பற்றி எவ்வளவோ பெருமையுடன் சொல்ல வேண்டும் என்று தேவேந்திரச் சிற்பி எண்ணியிருந்தார். அதற்கு மாறாக இப்போது தயங்கித் தயங்கி, பட்டும் படாமல் ஏதோ கூறினார். ஆனாலும் புவனமோகினி விடவில்லை. அந்தப் புதிய சீடனையும் அவன் செய்திருக்கும் சிற்ப வேலைகளையும் பார்க்க வேண்டும் என்று கோரினாள். 'அவனுடைய சிற்பங்களைப் பார்க்கலாம்; ஆனால் அவனைப் பார்க்க முடியாது!' என்றார் தேவேந்திரர். அவனுடைய சிற்பங்களைக் காட்டிய போது தம்முடைய புதிய சீடனைப் பற்றி அவரால் வானளாவப் புகழ்ந்து பேசாமலிருக்க முடியவில்லை. 'இந்த ரதியின் சிலையைப் பார், தாயே! அந்தச் சிலையின் கையில்

உள்ள இளியைப் பார்! என்ன ஜீவ களை! எவ்வளவு தத்ரூபம்! உயிரற்ற கல்லுக்கு இந்தப் பையன் உயிரைக் கொடுத்திருக்கிறானே? இவன் பிரம்ம தேவனைக் காட்டிலும் ஒரு படி மேலான வன் அல்லவா? நான் வேணுமானால் சொல்லுகிறேன். தஞ்சாவூரில் ராஜ ராஜேசுவரம் என்னும் பெரிய கோயி லைக் கட்டினானே ஒரு மகா சிற்பி, அவ னுடைய சந்ததியில் இவன் தோன்றிய வனாயிருக்க வேண்டும். தன் பரம் பரையைப் பற்றி இவன் எதுவும் சொல்ல மறுக்கிறான். ஆனாலும் என் னுடைய ஊகம் சரியென்பதில் எள்ளள வும் சந்தேகமில்லை' என்றார்.

இதையெல்லாம் கேட்ட புவனமோகி னிக்குக் கட்டாயம் அந்த வாலிபச் சிற்பி யைப் பார்க்க வேண்டும் என்ற ஆசை உண்டாகி விட்டது. ஆனால் அதற்குத் தேவேந்திரச் சிற்பி இடங் கொடுக்க வில்லை. புதிய சீடனிடம் அவர் இதற் குள் தம் மகனைப் போலவே அன்பு செலுத்தத் தொடங்கியிருந்தார். அவ னைத் தம்முடைய தவறினால் இழந்துவிட அவர் விரும்பவில்லை. 'இன்றைக்கு வேண்டாம். அந்தப் பிள்ளைக்கு நான் சொல்லி அவனுடைய மனம் மாறும் படி செய்கிறேன். பிறகு பார்த்துக் கொள்ளலாம்' என்றார்.

ஏதாவது ஒரு பொருளை அடைவ தற்குத் தடை ஏற்பட்டால் அந்த அள வுக்கு அதன் பேரில் ஆசை அதிகமாகி றது. இது மனித இயல்பல்லவா? புதிய இளம் சிற்பியைப் பார்ப்பதில் புவன மோகினியின் ஆர்வமும் அதிகமாயிற்று. மதிவாணனுடைய விரதத்தைப் பற்றி அவளுக்கு நம்பிக்கை உண்டாகவில்லை. பெண் முகத்தைப் பார்த்தால் கற்ற வித்தை மறந்து போகவாவது? அவர் களுடைய ஊரில், சோழ தேசத்தில், பெண்களையே இவன் பாராமல் இருந் திருக்க முடியுமா? எந்தக் காரணத் தினாலோ வீண் சால்ஜாப்புச் சொல்லு கிறான். பொருத்தமில்லாத காரணத் தைச் சொல்லுகிறான். ஏதோ சூட்சுமம் ஒன்று இருக்க வேண்டும். அதை நாம் கண்டுபிடித்தே யாகவேண்டும். — இவ் விதம் புவனமோகினி தீர்மானித்து அடிக் கடி சிற்ப மண்டபத்துக்குப் போனாள். புதிய சீடனைப் பார்க்கும் விஷயமாகத் தேவேந்திரச் சிற்பியைக் கேட்டாள். அவர் தம்முடைய பிரயத்தனம் இது வரையில் பலிதமாகவில்லை என்றார். 'மாமா! நீங்கள் அந்தப் பையன் சொல் வதை நம்புகிறீர்களா? அப்படி ஒரு குரு சாபம் இருக்க முடியுமா?' என்று கேட் டாள். 'நான் என்னத்தைக் கண் டேன், தாயே! எனக்கென்னமோ, அவனுடைய விரதம், சுத்தப் பைத் தியக்காரத்தனமாகத் தோன்றுகிறது. சாக்ஷாத் மீனாட்சி அம்மனைப் போல் இருக்கிறாய். உன்னை அவன் ஒரு தடவை பார்த்தால்கூட அவனுடைய கலை மேம் படும் என்றே எனக்குத் தோன்றுகிறது. ஏன்? அவன் செய்துள்ள ரதியின் சிலை கூட இன்னும் சிறிது மேலாகவே இருந் திருக்கும். ஆனால் யாரோ என்னமோ சொன்னார்கள் என்று அவன் ஒரே குருட்டு நம்பிக்கையில் ஆழ்ந்திருக் கிறான்!' என்றார்.

அதற்கு மேலே பாண்டிய குமாரி புவனமோகினி ஒரு யுக்தி செய்தாள். தேவேந்திரச் சிற்பியின் மனத்தைக் கரைத்து அதற்கு அவரையும் சம்மதிக் கும்படி செய்தாள். அதாவது புவன மோகினி ஆண் வேடம் போட்டுக் கொண்டு வரவேண்டியது. காசியில் வசித்துத் திருப்பணி செய்யும் தேவேந் திரச் சிற்பியின் தமையனுடைய குமாரன் என்று தன்னைச் சொல்லிக் கொள்ள வேண்டியது. அப்போது மதி வாணன் ஆட்சேபம் ஒன்றும் சொல்ல முடியாதல்லவா? இந்த உபாயம் அவனை ஏமாற்றுகிற காரியமாயிருந்தாலும், அதனால் அவனுக்கு முடிவில் நன்மை தான் உண்டாகும் என்று இருவரும் முடிவு செய்தார்கள்.

அவ்விதமே புவனமோகினி வட தேசத்திலிருந்து வந்த வாலிபனைப் போல் வேடந் தரித்துக் கொண்டு வந் தாள். அவளுடைய உபாயம் பலித் தது. மதிவாணனை அவள் சந்திக்க முடிந்தது. ஆகா! மனித இதயத்தின் மர்மத்தைத்தான் என்னவென்று சொல் வது? மதிவாணனை முதன் முதலில் சந்தித்த அதே விநாடியில் புவன மோகினியின் இதயப் பூட்டும் தளர்ந்து திறந்து கொண்டது. இது வரையில் அவள் கண்டறியாத உணர்ச்சி வெள்ளம் அவளை ஆட் கொண்டது. அவள் உள்ளக் கடலில் மலை போன்ற அலைகள் எழுந்து விழுந் தன. புயலும் தென்றலும் கலந்து அடித்தன. குதூகலமும் சோர்வும், இன்பமும் வேதனையும் அவள் மீது ஏககாலத்தில் மோதின. தன்னுடைய இருதயத்தில் என்ன நேர்ந்தது, எத னால் நேர்ந்தது என்பதை யெல்லாம் அச்சமயம் அவள் தெளிவாகத் தெரிந்து கொள்ளவில்லை. போகப் போகத்தான் தெரிந்து கொண்டாள். தெரிந்து கொண்ட பிறகு ஏன் அந்த வாலிப னைச் சந்தித்தோம், அவனைச் சந்திப்ப தற்காக ஏன் இவ்வளவு பிரயாசை எடுத் தோம் என்றெல்லாம் அவள் வருந்தும் படி நேர்ந்தது...."

**(தொடரும்)**

## அத்தியாயம் 35

பாஸ்கரனுடைய எண்ணம், செயல் இரண்டிலும் திடீரென்று ஓர் அசாதாரண வேகம் தென்பட்டதைக் கண்டு யாமினி உள்ளூற அஞ்சினாள். அவ்வளவுக்குப் பேச்சு ரொம்பவும் குறைந்து விட்டது. போகட்டும்; பெண்டாட்டியிடம் பேசுவது கூடவா குறைந்து போகும்? சாப்பிட வருவதற்குக் கூட அவனுக்கு நேரம் கிடைக்கவில்லை. வேளை தப்பி




வேளை வருவதும், சில வேளைகளில் வராமலே இருப்பதும் சகஜமாகி விட்டன. இப்படியெல்லாம் வயிற்றைக் காயப் போட்டால் உடம்பு என்னத்துக்கு ஆகும் என்று யாமினி கவலைப்பட்டாள்.

இந்த ஒரு மாத காலத்துக்குள் அவன் செய்திருந்த சாதனைகளைக் கண்டு அவ

ளுக்கு இன்னொருபுறம் பெருமையாகவும் இருந்தது. ஆனாலும் வீட்டில் தனக்காக ஒருத்தி காத்திருப்பாளே என்ற நினைப்பே இல்லாமலும் தன் சௌகரியங்களைக் கொஞ்சங்கூடக் கவனிக்காமலும் இப்படியா உடம்பைக் கெடுத்துக் கொள்வது? பாஸ்கரன் மட்டும் குழந்தையாக இருந்தால் சில சமயம் அவளுக்கு வந்த கோபத்துக்குக் கன்னங்கள் இரண்டையும் பிடித்து இழைத்துத் திருகி விடுவாள். ஒருநாள்—

''ஏன் சாப்பிடவரல்லே இன்னிக்கு?''

''ரொம்ப வேலே; வர முடியல்லே!''

''அப்ப எங்கே சாப்பிட்டேள் ?''

பாஸ்கரன் விழித்தான்.

''வேறே எங்கேயாவது சாப்பிட்டேளா, அதுவும் இல்லேயா?''

''ஓ.... நான் இன்னிக்குச் சாப்பிடவேயில்லேன்னு நினைக்கிறேன். அதான் இப்ப ரொம்பப் பசிக்கிறாப் பலே இருக்கு !''

''ஓகோ — பசிக்கிறாப்பலே இருக்கா ? அதுவும் நிச்சயமில்லேயாக்கும்! அப்படிப் பசிகூடத் தெரியாமல் ஒரு வேலேயா? உங்களைப் போலப் பசிக்குக்கூட மறந்து போயிடுத்து போலிருக்கு!''

தன்னுடைய மறதியை நினைத்து வெட்கம் அடைந்தான் பாஸ்கரன். சாப்பிடப் போகிற சமயத்தில் சங்கடப்படுத்த வேண்டாம் என்று அத்துடன் விட்டு விட்டாள் யாமினி. அப்புறம் அவனை வம்புக்கு இழுக்க மனம் வரவில்லை; பரிதாபமாக இருந்தது. அவன் மாடிக்குப் போனான். வெற்றிலே தட்டை எடுத்துக் கொண்டு அவள் மெல்லப் படியேறி வருவதை அவன் பார்த்துக் கொண்டேயிருந்தான். யாமினிக்கு என்னவோ வெட்கமாய் இருந்தது. இரண்டு மாதங்களுக்குள் என்ன பெரிய மாறுதல் தெரிந்துவிடும்?

'' என்ன பார்க்கிறேள் ?''

''பார்க்கப்படாதா, உன்னை ?''

'' எல்லாம் எப்போதும் போலச் சாதாரணமாப் பார்த்தாப் போதும்.''

''சாதாரணமாத்தான் பார்த்தேன்.''

'' ஒண்ணுமில்லே. ஒரு தினுசாத்தான் இருக்கு பார்வை !''

''ஸ்பெஷலாப் பார்க்கிறதாவே வைச்சுக்கோ. என் கண்ணே பட்டுடுமோன்னு பயப்படறேன். அத்தனை அழகா இருக்கே நீ !''

'' அதாவது இன்னிக்கு ?''

'' அதாவது என்னிக்குமேதான்!''

''போறது, இப்பவாவது ஞாபகம் வந்ததே — என்னேயே மறந்துட்டேளோன்னு பார்த்தேன். பசி, வீடு, பெண்டாட்டி நினைவெல்லாம் இன்னும் இருந்தால் சரிதான். சந்தோஷம்தான்!''

''அதுக்கு என்ன செய்யறது, அப்படி இருக்கு வேலே இப்ப. நம்ம 'ஸ்பேர் பார்ட்'களுக்குத் திடீருன்னு ஏகப்பட்ட கிராக்கி. 'மலிவாகவும் இருக்கு; அயல் நாட்டுச் சரக்கை விட அருமையாகவும் இருக்கு'ன்னு மார்க்கெட்டிலே நல்ல பேரு. இன்னும் புது யூனிட் வைச்சால் ஒழிய இருக்கிற ஆர்டருக்குச் சப்ளை செய்ய முடியாது போலிருக்கு! இங்கே இருக்கிற பஞ்சாபி வியாபாரிகளெல்லாம் இந்த விலேக்கு அவர்கள் ஸ்டாக்குகளைக் குறைச்சு விக்க முடியாமெ முழிக்கிறாங்களாம். இந்த அளவுக்கு வித்தாலே நூறு குடும்பம்போல் பிழைக்கும். இன்னும் கொஞ்சம் விரிவு படுத்தினல் நானூறு குடும்பமாவது பிழைக்கலாமேன்னு நான் பார்க்கிறேன். அதைக் கவனிக்கிறதா, வேண்டாமா? வேண்டாம்னு சொல்லு, வேலைக்கு முன்னாலேயே சாப்பாட்டையும் வீட்டையும் நினைச்சுண்டு வந்துடறேன் !''

''பாருங்களேன், அப்பாவா ஆகிறதுக்கு முன்னாலேயே அடிக்கிற அதிர்ஷ்டத்தை ! என்னவோ அவசர அவசரமா இப்ப எதுக்குப் பிள்ளைன்னு சுவாரசியமில்லாமே, அலட்சியமா இருக்கேளே, இதிலே பார்த்துக்குங்கோ அந்த ராசியை. பிறக்கப் போறது, ஆணே, பெண்ணே எதுவாய் இருந்தாலும் அதிருஷ்டம் எப்படி அடிக்கப் போறதுன்னு பார்த்திண்டே இருங்கோ. மோட்டார் கார் உபகரணங்களுக்கு உங்களை மிஞ்சி இந்தியாவிலேயே யாருமில்லேன்னு ஆகப் போறது. வேணும்னு இப்பவே எழுதித் தரேன் ; வெச்சுக்குங்கோ !'' என்று உற்சாகப் பட்டாள் யாமினி.

''அப்பவும் என் திறமைக்கு ஒரு மதிப்பும் இல்லே; உன் பிள்ளேயோட அதிர்ஷ்டம்தானுக்கும்! அதுதானே?''

''எல்லாம்தான்! உங்க திறமை, அதிர்ஷ்டம் எல்லாம் பிள்ளை மூலமாகத்தான் ! உங்க பிள்ளைதானே !''

''உம்.... என்னமோ ஒரு புது அழகு உங்கிட்டே மெதுவா பூத்திண்டு வருதேன்னு பார்த்தேன். கடைசியிலே இப்படிக் கொண்டு வந்து முடிச்சுட்டியாக்கும், கதையை !''

''அதான் பார்க்கிறதைச் சாதாரணமாப் பார்க்கிறதுதானே, திருட்டுத்தனமாப் பார்க்க வேண்டாமேன்னுதான் நானும் சொன்னேன் ! தெரியாமெயா சொன்னேன்?''

''நான் பார்த்தது திருட்டுத்தனம்னு, சாதாரணமாப் பார்க்கறது எப்படி ?''

'' அதுக்கு ஒரு வகுப்பு நடத்தித்தான் சொல்லித் தரணும். ரொம்ப லேசாச் சொல்லித் தந்துட முடியாது!''

''நீ இவ்வளவு போக்கிரியாய் இருப்பேன்னு எனக்கு அப்பவே தெரியாமல் போயிடுத்து.''

''எல்லாம் தெரியும். எனக்கும் இன்னும் யாரோ ஒருத்திக்கும் ஏதோ ஒரு ஒத்துமை இருந்ததாச் சொன்னது என்ன ஆச்சு? மறந்தே போயிட்டுதா? மறுபடியும் திருவனந்தபுரம் போனுல்தான் ஞாபகம் வருமா?''

''அது என்னவோ ஏமாந்து போயிட்டேன்.''

''பேசாமல் ஏமாறுமல் உங்க அஜிதாவையே கல்யாணம் பண்ணிண்டிருந்திருக்கலாம், இல்லையா?''

''சரி சரி, இந்த நல்ல சமயத்திலே அவள் பேச்சு வேண்டாம்.''

''ஏன், என்ன விஷயம், ஒரு மாசமாகவே அங்கெல்லாம் போறதில்லை போலிருக்கே! வந்திருந்த கணவன் கிட்டேதான் சண்டை; உங்ககிட்டேயும் சண்டையா? போன மாசம் அவளுடைய கணவர் வந்திருந்த போது பெரிய ரகளையாய்ப் போயிட்டுதாமே, உங்களுக்குத் தெரியாதா?''

''ஓ! அவன்தான் அவள் கணவன் முரளியா? நான்தான் பார்த்ததேயில்லையே—எனக்குத் தெரியாது. ஆனுல் உனக்கு எப்படித் தெரியும்?''

''உங்க அம்மா சொல்லல்லியா? சொல்லியிருப்பார்னு நினைச்சேன்..... ஆனல் ஒரு மாசமா உங்ககிட்டே பேசறதுக்கு நேரம் எங்கேயிருந்தது? அதனுலே சொல்லல்லே போலிருக்கு. அண்ணுவைப் பார்த்துட்டு வரதுக்காக அம்மா போயிருக்கார். அப்பத்தான் அஜிதாவுக்கும் அந்த முரளிக்கும் பெரிய சண்டையாம். ரிவால்வரைக்கூட எடுத்துட்டாராம். அதுக்குள்ளே யாரோ போன் பண்ணி, போலீசை வரவழைச்சு, பெரிய ரகளையாய்ப் போய் விட்டதாம். அப்புறம் என்ன ஆச்சோ? ஒண்ணுமே தெரியாதா உங்களுக்கு?''

''ஊஹூம்; தெரியாது.''

''அதான் நானும் நினைச்சேன்.''

''எப்படி நினைச்சே?''

''உங்களுக்குத் தெரிஞ்சிருக்காதுன்னு. யாருக்கும் தெரியாமெ வந்த புதிசிலே போயிண்டிருந்தாப்பலே இந்த ஒரு மாசமாப் போகவேயில்லேன்னு. என்னமோ, கோபமோ, சந்தேகமோ தெரியல்லேன்னு!''

''உனக்கு எல்லாம் ரொம்பத் தெரியுமோ?''

''முந்தாநாள் அவள் போன் பண்ணியிருக்காமல் போனுல் தெரிஞ்சிருக்காது. அப்படி ஒண்ணும் முக்கியமான காரியம் ஒண்ணும் இல்லையாம். ஒரு மாசமா அந்தப் பக்கம் கண்ணிலேயே காணுமேன்னு சும்மாத்தான் போன் பண்ணினுளாம். என்னைப் பார்க்கணும்னு ரெண்டு மூணு தடவை உங்ககிட்டே சொன்னுளாம். நீங்க காதிலேயே போட்டுக்கல்லியாம். அதனுலே முடிஞ்சா ஒரு நாளைக்கு என்னை வரச் சொல்லிக் கூப்பிட்டிருக்காள்....''

நன்ருகச் சிரிச்சுப் பேசிக் கொண்டிருந்த பாஸ்கரனுடைய முகம் இதைக் கேட்டதும் 'செவ செவ' என்று ஆகி விட்டது.

''அதெல்லாம் நீ எங்கேயும் போகக் கூடாது. பெரிய ராணி பார், உன்னை அங்கே வரச் சொல்லிக் கூப்பிட்டாளாக்கும்! அக்கறையாய் இருந்தால் அவள் இங்கே வந்து பார்த்துக் கட்டும்! எங்கிட்டே ரெண்டு மூணு தடவை சொன்னுளாமே — ரெட்ச்சட்! கல்யாணம் ஆச்சாமேன்னுகூடக் கேக்கல்லே, பார்க்கணும்னு சொன்னுளாம். கன்ஸீட்டெட் உமன்! அவளுக்கு இருக்கிற அந்தஸ்து, கௌரவம் எல்லாம் நமக்கும் இருக்கு. இன்னும் சொன்னுல் அதுக்கு மேலேகூட இருக்கு உனக்கு. இன்னெரு தடவை போன் பண்ணினுல் இங்கே வந்து பார்த்துக் கச் சொல்லு. ஊஹூம்; அதுகூட வேண்டாம். அம்மாவைப் பத்தி ஒரு வார்த்தைகூடக் கேட்காதவள் இங்கே ஒண்ணும் வரவேண்டாம். கேட்டால், என்னைக் கேட்டுண்டு போன் பண்றதாச் சொல்லிவிடு. அவள் நடத்தையிலேயே எனக்குச் சந்தேகம் தோன்றியது. குப்பை மேடு கோபுரத்தைப் பார்த்துக் குசலம் விசாரிச்சுதாம்!''

''நீங்க தேவலே. கோபம் வந்தால் நீங்க ரொம்ப அழகாகத்தான் இருக்கேள். நான் இதை இதுவரையிலே பார்த்ததில்லே!'' என்று மெல்லச் சிரித்தாள் யாமினி.

பிறகுதான் பேச்சு மாறிற்று. கடைசியில் யாமினி படுக்கப் போகிற சமயத்தில் டெலிபோன் மணி கதறியது. எழுந்து போய் எடுத்தாள்.

''ஹலோ!''

யாமினி சட்டென்று பேசுகிற பக்கத்தைக் கையால் பொத்திக் கொண்டு கணவனைப் பார்த்தபடி, ''அவளேதான்!'' என்று சொன்னுள்.

''போகச் சொல்லு எங்கேயாவது: போன் பண்ணுகிற நேரத்தைப் பார்க்கல்லே!'' என்று அங்கிருந்தபடியே கத்தினுன் அவன்.

''பாஸ்கர் இன்னும் வரல்லியா? பாக்டரியிலேயும் கிடைக்கல்லியே!''

''ஏன், முக்கியமா ஏதானும்?''

''முக்கியம்னு இல்லே. பைனான்ஷியல் மாட்டர் கொஞ்சம் பேசணும்.''

''அதுக்கென்ன நானே சொல்லிட றேன். இப்பல்லாம் அவருக்கு எதுக்குமே நேரம் கிடைக்கமாட்டேங்கிறது. ரொம்பத் தொந்தரவாப் போய்த்தின்டாரு! எதுக்கும் அவரையே போன் பண்ணச் சொல்றேன். சரிதானா? குட் நைட்!''

அந்தப் பக்கம் அஜிதா பதில் சொல்வதற்கு இடமே கொடுக்காமல் ரிஸீவரை வைத்து விட்டாள் யாமினி.

இதைக் கண்டு பாஸ்கரன் சிரித்தான்; அவளும் சிரித்தாள்.

## அத்தியாயம் 36

வீட்டில் இருக்கிற பாஸ்கரன் வேறு, தொழிற்சாலை வேலையில் ஈடுபட்டிருக்கிற பாஸ்கரன் வேறு; நண்பர்களோடு குலவுகிற பாஸ்கரன் வேறு, யந்திர நுணுக்கங்களை ஆராய்கிற பாஸ்கரன் வேறு, தொழிலை நிர்வகித்து நடத்துகிற பாஸ்கரன் வேறு. இப்படிப் பலவகைக் குணங்களைப் பெற்றிருந்த அவனை முழுவதும் அறிந்தவர்கள் யாருமே இல்லை என்றுதான் சொல்ல வேண்டும். யாமினிக்குக்கூட எல்லாமே தெரியாது. அவனுக்கே தன்னிடமுள்ள ஆற்றலின் அளவும் மகத்துவமும் தெரியுமா என்பது சந்தேகம்தான். அவனுடைய திறமைகளை அவனே அறிந்து கொண்டிருக்கவில்லை. அவனுடைய கைபட்டால் நுட்பமான கருவிகளும் சொன்னபடி கேட்டன; ராட்சஸ யந்திரங்களும் கதறிக் கொண்டு இயங்கின. அப்படி அவனுக்கு என்னவோ ஓர் அருள் இருந்தது. ஆனால் ஆண்டவனுடைய விளையாட்டுக்கு அவன் தப்பவில்லை. அதாவது எங்கேயோ கொண்டு போய் வைக்க வேண்டியவனை எங்கேயோ கொண்டு வந்து வைத்திருந்தான். சுருக்கமாக இவ்வளவுதான் சொல்லலாம்.

ஆனால் அவனுக்கு ஒரு குறிக்கோள் இருந்தது. அதற்குக் குறுக்கே நிற்கக் கூடிய எதையும் உதறிக் கொண்டு போகிற உறுதியும் வேகமும் இருந்தன. அதே போலத் தன்னுடைய லட்சியத்துக்கு உதவக் கூடியவற்றை உணர்ந்தறிந்து அவற்றைப் பெறுகிற வேட்கையும் ஆவலும் இருந்தன.

அஜிதாவைக் கல்யாணம் செய்து கொண்டால் அமெரிக்கப் படிப்பும் பயிற்சியும் பயன்படாமல் போய்விடும்; அது தன்னுடைய முன்னேற்றத்துக்கு இடையூறாக இருக்கும் என்று நினைத்தான். அதன்படி அவளைப் புறக்கணிக்கத் தவறவில்லை. காமேசுவரன் என்ன நோக்கத்தோடு கொடுத்து வந்தாலும் அந்தப் பணம் வருகிற வரையில் சொந்த முயற்சியில் அக்கறை உண்டாகாது என்ற எண்ணம் விழுந்தது. அதற்கு மேல் கொஞ்சமும் தயங்காமல் அந்தத் தொகை தனக்குத் தேவையில்லை என்று எழுதிவிட்டான். இப்படித்தான் அவன் எல்லாவற்றிலுமே நடந்து கொண்டான். யந்திரங்களோடு உழல்கிற அவனுக்கு இப்படிப்பட்ட உள்ளுணர்வு இருந்தது அதிசயம் தான். அந்த உள்ளுணர்வின் நுண்ணிய குரலை அவன் தெளிவாகக் கேட்டான். அதன் ஆணைப்படி நடந்து கொள்வதில் உறுதியாகவும் நின்றான். வேறு எதையும் யாரையும் அவன் சிறிதும் நம்பியிருக்கவில்லை.

மகேசன் அண்ட் மகேசுவரன் நிறுவனத்தைச் சேர்ந்த காமேசுவரனுடைய உறவைத்தான் புறக்கணித்தானே தவிர நண்பன் காமேசுவரனுடைய உதவியை வேண்டாம் என்று அவன் மறுக்கவில்லை. அவனுடைய தொழிற்சாலையில் புதிதாக விஸ்தரிக்க வேண்டியிருந்த யூனிட்டுகளுக்கு அவன் காமேசுவரனுடைய உதவியைத்தான் எதிர்பார்த்திருந்தான். பணத்திலே புரள்கிறவர்களுக்குக் கணக்கெல்லாம் ஒன்றுதான். 'நாலும் மூணும் ஏழு' என்று சொன்னாலும் சரி; 'மூணும் நாலும் ஏழு' என்று சொன்னாலும் சரி—எப்படிக் கூட்டினாலும் வருகிற விடை ஒன்றுதான் என்பது அவர்களுக்குத் தெரியும். 'நண்பன் என்கிற முறையில் வருகிறாயா? சரி வா' என்று பணம் தருவதற்கு முன்வந்தான். இந்த ஏற்பாடு ஒருவிதத்தில் ரொம்ப நல்லது என்பது அவனுக்குத்தான் தெரியும். பாஸ்கரனுக்கு அதைப் பற்றித் தெரியாது. தெரிந்தாலும் கவலையில்லை. அவனுக்கு வேண்டியது பணம்தான்.

அஜிதா, யாமினிக்குப் போன் செய்த அன்று இரவு அவன் இருந்த சூழ்நிலையே வேறு. அப்போதிருந்த மன நிலையும் வேறு. இருந்தாலும் பண விஷயமாக அஜிதா பேச விரும்புகிறாள் என்ற ஒரு செய்தியை மட்டும் மனம் எங்கோ ஒரு மூலையில் பதித்துக் கொண்டுவிட்டது. அது மேல் மட்டத்துக்கு வரவும் இல்லை; அதைப் பற்றி அவன் எண்ணிப் பார்க்கவும் இல்லை.

ஆனால் மறு நாள் தொழிற்சாலைக்குப் போனதுமே அவனை அறியாமலே கை

போனை எடுத்து அவர்கள் வீட்டு நம்பரைத்தான் சுழற்றியது.

''ஹலோ, யாரு, நான் ராமாஞ்ஜம் பேசறேன் சார். நமஸ்காரம் சார். அஜிதா அம்மாதானே சார்? இதோ கூப்பிடறேன் சார். லயனிலேயே இருங்க சார்'' என்று பதில் வந்தது.

பாஸ்கரன் ரிஸீவரைக் காதோடு வைத்துக் கொண்டு அஜிதாவின் குர லுக்காகக் காத்துக் கொண்டிருந்தான். ஒரு நிமிஷம், ஐந்து, பத்து நிமிஷம். கால் மணி நேரமா அதற்கு என்று ஒருவன் காத்திருப்பது? அவன் போனை வைக்கப் போவதற்குள் எதிர்ப் பக்கம் சத்தம் கேட்டது.

''ஹலோ.... நான்தான் ராமஞ்ஜம் பேசறேன் சார். அஜிதா அம்மா ஷவர்பாத் எடுத்துக்கிண்டு வந்து இப் பத்தான் டிரஸ் பண்ணிக்கிறுங்களாம் சார். கொஞ்சம் வெயிட் பண்ணச் சொல்லுங்க சார். இதோ வந்துடுருங் களாம்! இருக்கிங்களா, சார்?''

''இல்லேப்பா! வெயிட் பண்ண முடியாது. அவங்க டிரஸ் பண்ணிக் கிண்டு வந்தப்புறம் என்னைக் கூப்பிடச் சொல்லு. நான் இங்கேயேதான் இருப் பேன்'' என்று போனைக் கீழே வைத்து விட்டான்.

அஜிதாவிடமிருந்து போனே வர வில்லை. அவனும் வேலை மும்முரத்தில் அதை மறந்தே போனான். வீட்டுக்குச் சாப்பிடப் போன சமயத்தில்தான் வழியில் அந்த நினைவு வந்தது. உடனே வண்டியை நாகநாதன் காலனிப் பக்கம் செலுத்தினான்.

''என்ன பாஸ்கர், உன்னைக் காணவேயில்லே?''

''இப்பல்லாம் கொஞ்சம் வேலை மும் முரம். அதான் வரவே முடியல்லே.''

''அதானே, வேறே ஒண்ணும் என் மேலே கோபமில்லேயே?''

''உன் மேலே என்ன கோபம்?''

''நெஜமா நான் பயந்தே போயிட் டேன். என்னமோ தெரியல்லே; தப்புப் பண்ணிட்டோம்னு! அப்படியெல்லாம் இல்லேயே!''

''நோ நோ! சே சே! உங்கிட்டே யிருந்து போன் வரும்னு நினைச்சேன். நீ பண்ணவே யில்லேயே!''

''யார் சொன்னது, கேட்டுப் பார் எல்லாரையும். உனக்கு எத்தனை தடவை போன் பண்றது? எப்பக் கேளு, இல்லேதான் பதில்!''

''இன்னிக்கு நான் எங்கேயும் போகல்லியே.''

''இன்னிக்கு நான் பண்ணல்லே... ஐ ஆம் ஸாரி!''

''காலையிலே உன்னைக் கூப்பிட் டேன். நீ குளிச்சுட்டு டிரஸ் பண் ணிண்டிருந்தியாம்! வந்தப்புறம்....''

''இன்னிக்கா, காலமேயா? யாரும் சொல்லவேயில்லேயே!''

''ராமானுஜம் சொல்லல்லே? அவன் தான் போனை எடுத்தான்.''

''எடுத்தான்னு எங்கிட்டே சொல்ல வேண்டாமோ? அவன் ஒரு இடியட். மறந்துட்டுப் போயிருப்பான்!''

''நேத்திக்கு நீ போன் பண்ணினி யாமே ராத்திரி?''

''தினம்தான் போன் பண்றேன். நேத்திக்கும் பண்ணினேன்!''

''என்னமோ முக்கியமா பைனான்ஷி யல் மாட்டர்....''

''ஓ! அதுவா? அப்ப நீ வீட்டிலே இல்லியா?''

''அதான் சொன்னேனே, இப்பல் லாம் வந்து.... நான் வந்து....''

''அதனால் என்ன? உன் ஒய்ஃப் போனை எடுத்ததும் எனக்கு என்ன சொல்றதுன்னே தெரியல்லே. அதுக் காகச் சட்டுனு ஏதோ ஒண்ணைச் சொல்லி வச்சேன்!''

''ஓ! இவ்வளவுதானா? முக்கியமா ஒண்ணும் இல்லேயே. அப்ப நான் வர் றேன். வீட்டுக்குப் போய்ச் சாப்பிட் டுட்டு நாலஞ்சு இடம் போகணும்!'' என்று அவன் அவளுடைய பதிலை எதிர்பாராமலே திரும்பினான்.

அஜிதா தனக்குள்ளாகச் சிரித்துக் கொண்டாள். அவன் வண்டியில் ஏறப் போகிற சமயம் வெளியில் வந்தாள்.

''பாஸ்கர்!''

''என்ன?''

''அப்படி ஏதாவது முக்கியம்னுத் தான் வருவே போலிருக்கு!''

''ஓ! அப்படியெல்லாம் ஒண்ணு மில்லே.''

''வாயேன் லீஷர்லியா! பேச வேண்டியிருக்கு!''

''எது விஷயமா?''

''பணம் 'இன்வெஸ்ட்' பண்ற விஷயமா?''

''ஆகட்டும்; பார்க்கலாம்.''

''போன் பண்ணட்டுமா, உனக்கு?''

''நோ நோ.... வேண்டாம், வேண் டாம். நானே வர்றேன்.''

''போன்னு சொன்னாலே பயப் படறியே இப்படி. ஒய்ஃப்புக்கிட்டே பயமா?'' என்று கேட்டு விட்டுச் சிரித் தாள் அஜிதா.

''அவகிட்டேயும் பயம்தான்; எனக் குப் போன்கிட்டேயும் பயம்தான்!'' என்று சொல்லி விட்டுப் போனான் பாஸ்கரன். (தொடரும்)

# ரகுபதி ராகவ

மகாத்மா காந்தி

தமிழாக்கம்: ராஜாஜி

## 63

ஏதேனும் ஹிம்சை செய்யாமல் உயிரைக் காப்பாற்றவே முடியாது. உடலும் உயிரும் கூடியிருப்பதற்கு ஏதாவதொரு ஹிம்ஸைசெய்யாமல் முடியாது.உயிர்கள் எல்லாம் ஒன்றையொன்று ஹிம்ஸித்தே ஜீவித்து வருகின்றன. சரீரமும் உயிரும் பிரியாமல் நிற்பதற்கு ஹிம்ஸை இன்றியமையாததாகிறது. ஆகையினால்தான் அஹிம்ஸையை உபாசிப்பவன் இந்த உடல் பாரத்தை நீக்குவதற்கு ஆசைப்படுகிறான். முக்தி என்பது அதுவே. மறுபடியும் ஜன்மம் எடுத்துச் சரீர பாரம் அடையாமல் இருக்க வேண்டுமென்று கோருகிறான். உயிர் வாழ்க்கை என்பது எப்போதும் ஹிம்ஸையோடு கலந்தே நிற்கிறது. மறு பிறப்பில்லாமல் முக்தி அடைவதே எல்லாச் சமயங்களின் நோக்கமும்.

(யங் இந்தியா, 4-10-1928)

அஹிம்ஸைக் கொள்கையானது என்னுடைய உயிரேயாகும். அஹிம்ஸையும் சத்தியமும் ஆகிய இரண்டு தருமங்கள் எனக்கு இரண்டு சுவாசப் பைகளைப் போலாகும். அவையின்றி நான் உயிர் வைத்திருக்க முடியாது. அப்படியாயினும் அஹிம்ஸையினுடைய பெருமையையும், கூடவே மனிதனுடைய சிறுமையையும் தெளிவாகக் காண்கிறேன். ஒவ்வொரு விஷயத்திலும் இதைக் காண்கிறேன். வனவாசம் செய்யும் முனிவனும்கூட, களங்கமற்ற கருணை உள்ளம் படைத்த ரிஷியுங்கூட, ஓரளவு ஹிம்ஸை செய்யாமல் ஜீவயாத்திரை நடத்த முடியாது. சுவாசம் கொள்வதும் விடுவதுமே ஹிம்ஸையாகும். மனிதனுடைய உடலே ஒரு கசாப்புக் களம். எவ்வளவோ உயிர்களை ஜீரணித்துச் சரீரம் தன் உயிரைக் காப்பாற்றிக் கொள்கிறது. ஆனபடியால் நாம் இறப்பும் பிறப்பும் வேண்டாம் என்று பிரார்த்தனை செய்கிறோம். உடலைக் கொண்டு அனுபவிக்கும் சுகங்கள் எல்லாம் நிலையற்றவை. உடலினின்று விடுபடுவதே விடுதலையும் ஆனந்தமும். அதுவரையில் ஹிம்ஸை என்கிற விஷபானத்தைத் தினசரி உட்கொண்டே தீர வேண்டும்.

(யங் இந்தியா, 21-10-1926)

சரீர யாத்திரை ஹிம்ஸையில்லாமல் நடத்த முடியாது. இந்த உண்மையை நான் கண்டதனாலேதான் என்னுடைய சரீர நிலையைப் பற்றி வர வர அக்கறை எனக்குக் குறைந்து வருகிறது. மூச்சு விட்டாலுங்கூட எவ்வளவோ உயிர்களை, கண்ணுக்குத் தெரியாத உயிர்களைக் கொலை செய்கிறோம். இது தெரிந்தே மூச்சு விடுகிறேன். சைவ உணவிலும் ஹிம்ஸை இல்லையா? கறிகாய்களிலும் பழங்களிலும் உயிர் உண்டு என்பதை அறிவேன். ஆயினும் அவற்றை விட்டு விட்டேனா? இல்லை. மருந்துகள் உபயோகித்துக் கொசுக்களைக் கொன்றுவிட்டுத்தான் படுக்கிறேன். அதுவும் ஹிம்ஸைதான். ஆசிரமத்தில் கண்ட விஷப் பாம்புகளைக் கொல்லாமல் விடுகிறார்களா? அந்த ஹிம்ஸையையும் சகித்துத்தான் வருகிறேன். ஆசிரமத்தில் வேலைசெய்யும் மாடுகளை அடித்துத்தான் ஓட்டுகிறார்கள். இவ்வகையான எத்தனையோ ஹிம்ஸைகளுக்கு நான் பொறுப்பாளிதான். அஹிம்ஸா முறையில் என்னுடைய குறைகளுக்குக் கணக்கே இல்லை. அவற்றை மறைக்கவும் நான் விரும்பவில்லை. ஆனால் இதற்காகக் கொள்கையை முற்றிலும் விட்டுவிடுவது சரியாகாது. பூரண அஹிம்ஸையை நான் கடைப் பிடிக்க முடியவில்லை என்று முற்றிலும் அந்த தர்மத்தை விட்டு விட முடியுமா? நான் என்னைப் பற்றிச் சொல்லிக் கொள்வதெல்லாம் இவ்வளவே; அஹிம்ஸா தத்துவத்தின் உண்மையை உணர்ந்து உள்ளம், உரை, செயல் இவற்றில் அந்தத் தர்மத்தைக் கடைப்பிடிக்க முயன்று வருகிறேன் என்பதே. விடாமுயற்சியுடனும் கவனத்துடனும் இந்தத் தர்மத்தைக் காப்பாற்ற என்னாலானதைச் செய்து வருகிறேன். இந்த முயற்சி பயனற்றுப் போகவில்லை. ஆயினும் பூரண வெற்றி வெகுதூரத்தில் நிற்பதையும் காண்கிறேன்.

(யங் இந்தியா 1-11-1928)



# ராமாயணம்

## ராஜாஜி

# 78. இலங்கையில் கவலை

இனி ராவணனிடம் போவோம். மகா கவியின் போக்கில் ஒரு தனிச் சிறப்பு உண்டு. தங்களுடைய கற்பனை சக்தியைச் செலுத்தி வெறுக்க வேண்டிய பாத்திரங்களையும் இயற்கை நியதிகளைப் புறக்கணிக்காமல் உணர்ச்சியுடன் சித்திரிப்பார்கள். குணங்களையும் சாமர்த்தியத்தையும் தாழ்த்தி விட்டுச் சித்திரிக்க மாட்டார்கள்.

மக்களின் மனப்பான்மையை சாத்விக மார்க்கத்தில் செலுத்துவதே கவிகளின் கருத்து. இதற்காகவேதான் ராஜஸ தாமஸ பாத்திரங்களையும் மிகத் திறமையாகக் கையாளுவார்கள். ராஜஸ தாமஸ குணங்கள் பொதிந்து கிடக்கும் சாதாரண மக்களுக்குக் காவியம் படிக்கும்போது ராஜஸ தாமஸ பாத்திரங்களிடம் அனுதாபமே ஏற்படும். கீழ்த்தர மக்களைப் பற்றிச் சொல்லவே வேண்டியதில்லை. சாத்விக பாத்திரங்களின் செயல்களை வெறும் கதையாகவும் பூஜை விஷயமாகவும் வைத்துவிட்டு, ராஜஸ தாமஸ பாத்திரங்களைத் தங்கள் உறவினர்களாகவே பாவித்து அனுதாபத்தோடும் அக்கறையோடும் படித்து அநுபவிப்பார்கள்.

மில்டன் என்னும் ஆங்கில கவி ''சுவர்க்கம் இழந்த'' கிறிஸ்துவ புராணத்தைப் பெரும் காவியமாகப் பாடியிருக்கிறார். அந்தக் காவியத்தின் புகழ் உலகம் அளாவிப் பரந்தது. அதில் ஆண்டவன், ஆண்டவனுடைய மானஸ புத்திரனும் மக்களுக்குப் புருஷாகாரனுமான கடவுள் திருமகன், * நித்தியசூரிகள் எல்லாரும் பாத்திரங்களாக வருகிறார்கள். கடவுளை முதல் முதலில் எதிர்த்துப் பாபத்தையும் மரணத்தையும் பிரபஞ்சத்தில் உற்பவம் செய்த சைத்தான் அந்தப் பெருங் காவியத்தில் முக்கியமான பாத்திரம். இந்தச் சைத்தானை மில்டன் அற்புத அழகுடன் சித்திரித்திருப்பதாக ஆங்கிலக் காவிய ரசிகர்கள் புகழ்வார்கள். அப்படியே உலகப் பிரசித்தரான நாடகக் கவிஞன் ஷேக்ஸ்பியரும். ஷைலாக் என்கிற லோபி அதிக வட்டிக்குக் கடன்கொடுத்து மக்கள் ரத்தத்தை உறிஞ்சும் ஒரு பாத்திரம். அவனை ஷேக்ஸ்பியர் மிக அழகாகச் சித்திரித்திருக்கிறார். பெரும் துர்க்குணங்களை வைத்துக் கற்பித்த பாத்திரங்களானாலும் கெட்ட குணங்களுடன், தைரியம், உறுதி, சாமர்த்தியம் இத்தகைய உயர்ந்த குணங்களையும் அழுக்குக்குப் பின்னிருந்து மிளிரும்படி மனத்தைக் கவரும் வகையில் சேர்த்தே கவிகள் நமக்குச் சித்திரித்துக் காட்டுவார்கள். பாமர மக்களாகிய நமக்கு அந்தப் பாத்திரங்களினின்றும் அடைய வேண்டிய அறிவு ரொம்பவும் இருக்கிறபடியால் நம்முடைய கவனத்தை இழுக்கும்படி அந்தப் பாத்திரங்களின் சித்திரத்தில் மிகுந்த ஒளி புகுத்தியே அமைப்பார்கள். வால்மீகி மகா காவியத்திலும் ராவண கும்பகர்ண சித்திரங்களில் இதைப் பார்க்கலாம். உணவுப் பதார்த்தங்களில் கசப்பிலும் மிக ருசி உண்டல்லவா? அத்தகைய பண்டங்களை நன்று



* நம்முடைய சமயங்களில் எப்படி தேவி புருஷாகாரமோ அதாவது கருணைக் கென்று மூர்த்தியோ அப்படியே கிறிஸ்து மதத்தில் புருஷாகாரம் கடவுள் திருமகனை ஏகநாதன்.

கச் சமைப்பதே சாமர்த்தியம். அதைப் போலவே காவியத்திலும்.

**ஹ**னுமான் லங்கையில் செய்த வீரச் செயல்களும் நாச காரியங்களும் ராக்ஷச ராஜனுக்கு ஓரளவு வெட்கம் உண்டாக்கின. பயமும் ஏற்பட்டது. ஆனபடியால் சபை கூட்டி மந்திராலோசனை செய்தான்.

ஹனுமான் செய்த காரியங்களைப் பற்றிக் கொஞ்சம் அவமானப்பட்டுத் தலைகுனிந்தே பேசினான்:

''இதுவரையில் பகைவர் யாரும் நம்முடைய நகரத்துக்குள்ளே புகுந்துபார்த்ததில்லை. ராமனிடமிருந்து வந்த இந்த வானரன் லங்கைக்குள் பிரவேசித்து, சிறையிலிருக்கும் ஜானகியையும் பார்த்துவிட்டுப்போய்விட்டான். மாட மாளிகைகளை அழித்தான். சிறந்த வீரர்களைக் கொன்றான். நம்முடைய பிரஜைகளைப் பயத்தால் நடுங்கவும் செய்து விட்டான். இந்த விஷயம் இத்துடன் நிற்காது ஆகையால், மேல் நடத்த வேண்டிய காரி



யங்களைப் பற்றி நாம் ஆலோசிக்க வேண்டும்.

''மங்களம்! அரசனுடைய நன்மையைக் கோரும் மந்திரிகளுடன் ஆலோசித்தே எல்லாக் காரியங்களையும் அரசன் செய்ய வேண்டுமல்லவா? ஆதலால் இந்தச் சபை கூட்டினேன். நமக்கு ராமன் பகைவனாகிவிட்டான். அவனைப் பற்றி என்ன செய்யலாம் என்பதை நன்றாய் யோசிக்க வேண்டும். அரசன் தன் சாமர்த்தியம், தன் புத்தி இவற்றையே நம்பிக் காரியங்களைச் செய்து கொண்டு போவதைக் காட்டிலும் தன்னுடைய நன்மையில் பங்கும் பற்றும் கொண்ட புத்திமான்களுடன் யோசித்துக் காரியங்களைச் செய்வதே நன்மை தரும். மந்திரிகளுடைய யோசனையையும், இயற்கை விதிகளையும் புறக்கணித்து விட்டுக் காரியங்களைச் செய்து கொண்டு போகும் அரசன் கெட்டுப் போவான். மந்திரிகளிலும் நீதி சாஸ்திரத்தைக் கவனித்து உறுதியான கொள்கைகளை அநுசரித்துத் தைரியமாக யோசனை சொல்லுகிறவர்கள் உத்தமமான மந்திரிகள் ஆவார்கள். தங்கள் புத்தியை நேர்வழியில் செலுத்தாமலும் உறுதியான முடிவுகளுக்கு வராமலும் இப்படியும் அப்படியும் பேசுபவர்கள் உதவாத மந்திரிகளாவார்கள்.

''இப்போது நம்முன் நிற்கும் விஷயம் மிகவும் முக்கியமானது. ராமனும் பலவான்; அவன் படையும் பலம் கொண்டது. இவர்கள் லங்கையைத் தாக்குவது நிச்சயம். சமுத்திரத்தை ஏதோ யுக்தி செய்து கடந்து வருவார்கள் என்பது நிச்சயம். அந்த அரண் ஒன்றையே நாம் நம்பிச் சும்மா யிருத்தல் சரியாகாது. நம்முடைய நகரத்தையும் சேனையையும் எப்படிப் பலப்படுத்திக் காப்பது என்பதையும் நம்முடைய க்ஷேமத்துக்காக என்னவெல்லாம் செய்ய வேண்டுமென்பதையும் நன்றாக யோசனை செய்து சொல்லுவீர்களாக'' என்றான் ராக்ஷச மன்னன்.

* * *

அரசன் சொன்னதைக் கேட்ட சபையோர் அனைவரும் ஒரே அபிப்பிராயமாகப் பேச ஆரம்பித்தார்கள்.

''மகாராஜா! நம்முடைய சேனா பலமும் ஆயுத பலமும் பிரபஞ்சத்தில் நிகரற்றதாக இருக்கத் தாங்கள் ஏன் கவலைப்படுகிறீர்கள்? எந்தப் பகைவன் இந்தக் கோட்டையையாவது, தங்களுடைய சேனையையாவது எதிர்த்து வெற்றி பெற முடியும்? தங்களுடைய பலம் பகைவர்களுக்குத் தெரியாதா?

''போகவதி நகரம் சென்று நாகராஜனை எதிர்த்துத் தாங்கள் வெற்றி பெறவில்லையா? மகாபலவானான குபேரனையும் அவனுடைய யக்ஷர்களையும் தாக்கித் தோற்கடித்துப் புஷ்பக விமானத்தையும் லங்கையையும் தாங்கள் வெற்றியுடன் அடையவில்லையா ?

''மயன் தங்களுக்குப் பயந்து நட்புச் செய்து கொண்டு தன் மகளையே தங்களுக்குத் தந்து விவாகம் செய்து கொடுத்தான் அல்லவா? பாதாளத்தில் எத்தனையோ நகரங்களைத் தாங்கள் தாக்கி வெற்றி பெற்றிருக்கிறீர்கள். காலகேயர்களோடு யுத்தம் செய்து வெற்றி பெற்றிருக்கிறீர்கள். தங்களுடைய பலபராக்கிரமத்துக்கு எல்லையேயில்லை. வருணனுடைய புத்திரர்களையும் யமனையும் கூட அபயம் கேட்கச் செய்தீர்கள். இந்த ராமன் எம்மாத்திரம்? வீரன் இந்திரஜித்து ஒருவன் போதாதா இந்த ராமனையும் அவன் வானர சேனையையும் அழிக்க? இந்திரனையே பிடித்து வந்து சிறையில் வைத்து அடக்கி, 'ஓடிப் போ' என்று சொல்லித் திருப்பி அனுப்பவில்லையா? இந்த ராமனும் அவனுடைய வானரர்களும் எம்மாத்திரம்? இந்திரஜித்தை அனுப்பி இந்த வானர சேனையை அழித்து விட்டு வர உத்தரவு கொடுத்தீர்களானால் காரியம் முடிந்தது. ஏன் கவலைப்படுகிறீர்கள்?''

இவ்வாறு சொல்லித் தங்கள் அரசனைப் புகழ்ந்தார்கள்.

மகாசூரன் பெரிய கருத்த மேகம் போன்ற சேனாதிபதி, பிரஹஸ்தன் எழுந்தான்:

''தேவ தானவ கந்தர்வர்களையெல்லாம் யுத்தம் செய்து அடக்கின மன்னனாகிய தாங்கள் இந்த அற்ப மனிதனைப் பற்றி ஏன் கவலைப்படுகிறீர்கள்?

''வானரம் ஒன்று வந்தபோது நாம் அஜாக்கிரதையாக இருந்துஏமாந்தோம். நம்முடைய அஜாக்கிரதையை உபயோகித்துக் கொண்டு அனுமான் துஷ்டத்தனம் செய்தான். அது மறுபடியும் நடக்க விடுவோமா? இங்கே அவன் மறுபடியும் வந்தால் அவனை நான் பார்த்துக்கொள்கிறேன். இந்த வானர ஜாதியையே நிர்மூலம் செய்துவிடுவேன், உத்தரவு கொடுங்கள். தாங்கள் செய்து விட்ட ஒரு தவற்றின் பயனாக அபாயம் வந்துவிட்டது என்று கவலைப்பட வேண்டியதில்லை'' என்றான். **(தொடரும்)**

## பதினொன்றாம் அத்தியாயம்

# மண்டபம் விழுந்தது!

மின்னல் வெளிச்சத்தில் அங்கே நின்று பேசியவர்கள் இருவருடைய தோற்றங்களையும் பழுவேட்டரையர் ஒரு கணம் பார்த்துத் தெரிந்து கொண்டார். அவர்களில் ஒருவனாகிய ரவிதாஸனை இரண்டொரு தடவை அவர் தமது அரண்மனையிலேயே பார்த்ததுண்டு. அவன் மந்திர வித்தைகளில் தேர்ந்தவன் என்று நந்தினி கூறியதுண்டு. அவருடைய சகோதரன் காலாந்தக கண்டன் இந்த மந்திரவாதியைப் பற்றியேதான் சந்தேகப்பட்டு அவரை எச்சரித்திருக்கிறான். இன்னொருவன் கடம்பூர் அரண்மனையில் வேலனாட்டம் ஆடிய தேவராளன். அவனைத் தாம் பார்த்தது அதுதானா முதல் தடவை? அவனுடைய உண்மைப் பெயர் என்ன?... அப்படியும் ஒருவேளை இருக்க முடியுமா?... நெடுங் காலத்துக்கு முன்பு அவரால் அரசாங்க உத்தியோகத்திலிருந்து விலக்கப்பட்ட பரமேசுவரனா அவன்?...

இருக்கட்டும்; இவர்கள் மேலும் என்ன பேசுகிறார்கள், கேட்கலாம்.

''ரவிதாஸா! நீ இப்படித்தான் வெகு காலமாகச் சொல்லிக் கொண்டிருக்கிறாய். 'நாள் நெருங்கிவிட்டது' 'யமன் நெருங்கி விட்டான்' என்றெல்லாம் பிதற்றுகிறாய். யமன் வந்து யாரையோ கொண்டு போகிறான். ஆனால் மூன்று வருஷங்களாகப் படுத்த படுக்கையாகக் கிடக்கும் சுந்தர சோழனைக் கொண்டு போவதாக இல்லை. அவனுடைய குமாரர்களையோ யமன் நெருங்குவதற்கே அஞ்சுகிறான். ஈழ நாட்டில் நாம் இரண்டு பேரும் எத்தனையோ முயன்று பார்த்தோமே?...''

''அதனால் குற்றமில்லை, அப்பனே! யமதர்மராஜன் உன்னையும் என்னையும் விடப் புத்திசாலி! மூன்று பேரையும் ஒரே தினத்தில் கொண்டு போவதற்காக இத்தனை காலமும் காத்துக் கொண்டிருந்தான். அந்தத் தினம் நாளைக்கு வரப் போகிறது. நல்ல வேளையாக நீயும் இங்கே வந்து சேர்ந்தாய்! சரியான யம தூதன் நீ! ஏன் இப்படி நடுங்குகிறாய்? கொள்ளிட வெள்ளத்தில் அகப்பட்டுக் கொண்டாயா? படகு கொண்டு வந்து வைத்திருக்கிறாய் அல்லவா?''

''வைத்திருக்கிறேன். ஆனால் படகை வெள்ளமும் காற்றும் அடித்துக் கொண்டு போகாமல் காப்பாற்றுவது பெரும் பாடாய்ப் போய்விட்டது! உன்னை எத்தனை நேரம் எங்கெல்லாம் தேடுவது?... ரவிதாஸா! ஏன் என் உடம்பு நடுங்குகிறது என்று கேட்டாய் அல்லவா? சற்று முன்னால் யமதர்ம

# பொன்னியின் செல்வன்



ராஜனை நான் நேருக்குநேர் பார்த்தேன். இல்லை இல்லை; யமனுக்கு அண்ணனைப் பார்த்தேன். அதனால் சற்று உண்மையி லேயே பயந்து போய்விட்டேன்...''

''பரமேசுவரா! என்ன உளறுகிறாய்? யமனாவது, அவன் அண்ணனாவது? அவர் களைக் கண்டு உனக்கு என்ன பயம்? அவர்கள் அல்லவோ உன்னைக் கண்டு அஞ்ச வேண்டும்?''

ரவிதாஸன் மற்றவனைப் 'பரமேசு வரன்' என்று அழைத்ததும் பழுவேட் டரையர் துணுக்குற்றார். தாம் சந்தேகப் பட்டது உண்மையாயிற்று. யமதர்மனு டைய அண்ணன் என்று அவன் குறிப் பிட்டது தம்மைத்தான் என்பதையும் அறிந்து கொண்டார். அவனை உடனே நெருங்கிச் சென்று கழுத்தைப் பிடித்து நெரித்துக் கொல்ல வேண்டுமென்று அவர் உள்ளமும் கைகளும் துடித்தன. மேலும் அவர்களுடைய பேச்சைக் கேட்க வேண்டும் என்ற ஆவலினால் பொறுமை யாக இருந்தார். நந்தினியைப் பற்றி அவர்கள் இன்னும் பேச்சு எடுக்கவில்லை. சுந்தர சோழரின் குடும்பத்துக்கே நாளை யமன் வரப் போகிறான் என்று மந்திர வாதி கூறியதன் கருத்து என்ன? உண் மையிலேயே ஜோதிடம் பார்த்துச் சொல்கிறானோ? இவனுடைய மந்திர சக் தியைப் பற்றி நந்தினி கூறியதெல்லாம் உண்மைதானோ? ஒருவேளை இவன் கூறு கிறபடி தெய்வாதீனமாக நடந்துவிட் டால்?... தம்முடைய நோக்கம் நிறை வேறுவது எளிதாகப் போய்விடும்! சோழ சாம்ராஜ்யத்தைப் பங்கிடு செய்ய வேண்டிய அவசியம் ஏற்படாது! ஆனால் இந்தப் பரமேசுவரன்?...இவ னுக்கு என்ன இந்த விஷயத்தில் கவலை? ஆம்; ஆம்; இருபது வருஷங்களுக்கு முன்னால் 'சோழ குலத்தையே அழித்து விடப் போகிறேன்' என்று சபதம் செய்து விட்டுப் போனவன் அல்லவா இவன்?...ஆகா! தம்மைப் பற்றித்தான் அவன் ஏதோ பேசுகிறான்! என்ன சொல் கிறான் என்று கேட்கலாம்!

''நீ என்னிடம் சொல்லியிருந்தபடி இன்று காலையே இங்கு நான் வந்தேன். ஆனால் உன்னைக் காணவில்லை. காற்றி லும் மழையிலும் அடிபட்டு எங்கே யாவது சமீபத்தில் ஒதுங்கியிருக்கிறாயா என்று சுற்றுப்புறமெல்லாம் தேடி அலைந்தேன். கொள்ளிடத்து உடைப் புக்கு அருகில் ஒரு சிறிய கோவில் இருக் கிறது. அதில் யாரோ படுத்திருப்பது போலத்தோன்றியது. ஒருவேளை நீதான் அசந்து தூங்குகிறாயோ என்று அருகில் போய்ப் பார்த்தேன்... யாரைப் பார்த் தேன் என்று நினைக்கிறாய்? சாக்ஷாத் பெரிய பழுவேட்டரையனைத்தான்!...''

மந்திரவாதி ஹாஹாஹா என்று உரத்துச் சிரித்தான். அதைக் கேட்ட வனத்தில் வாழும் பறவைகள் 'கிறீச்' 'கிறீச்' என்று சத்தமிட்டன. ஊமைக் கோட்டான்கள் உறுமின.

''பழுவேட்டரையனைப் பார்த்தாயா? அல்லது அவனுடைய பிசாசைப் பார்த் தாயா?'' என்று ரவிதாஸன் கேட்டான்.

''இல்லை; பிசாசு இல்லை; குப்புறப் படுத்திருந்தவனைத் தொட்டுப் புரட்டிப் போட்டு முகத்தை நன்றாக உற்றுப் பார்த்தேன். ரவிதாஸா! யமனுக்கு அண்ணன்கள் இரண்டு பேர் இருக்க முடியுமா? பழுவேட்டரையனைப் போலவே, அதே முகம், அதே மீசை, அதே காய வடுக்கள் — இவற்றுடன் இன்னொரு மனிதன் இருக்க முடியுமா?''

''நீ பார்த்தவன் பழுவேட்டரையன் தான். சந்தேகமில்லை. நேற்று மாலை பழுவேட்டரையன் படகில் ஏறிக் கொள் ளிடத்தைத் தாண்டிக் கொண்டிருந் தான். கரையருகில் வந்தபோது படகு காற்றினால் கவிழ்ந்து விட்டது. அவ னுடைய பரிவாரங்களில் தப்பிப் பிழைத் துக் கரையேறியவர்கள் இப்போது கூடக் கொள்ளிடக் கரையோரமாகப் பழுவேட்டரையனைத் தேடிக் கொண் டிருக்கிறார்கள். அவன் வெள்ளத்தில் மூழ்கிச் செத்துப் போயிருக்கலாம் என்று சந்தேகப்படுகிறார்கள். உடைப்பு வரை யில் போய்ப் பார்த்து விட்டு அவர்கள் திரும்பி வரும்போது பேசியதை நான் கேட்டேன். ஆகையால், நீ பார்த்தவன் பழுவேட்டரையனாகவே இருக்கக் கூடும். ஒருவேளை அவனுடைய பிரேதத்தைப் பார்த்தாயோ, என்னமோ!''

''இல்லை, இல்லை. செத்துப் போயிருந் தால் கண் விழிகள் தெரியுமா? நான் புரட்டிப் பார்த்தவனுடைய கண்கள் நன்றாக மூடியிருந்தன. களைத்துப் போய்த் தூங்கிக் கொண்டிருந்தான் போலிருக்கிறது...''

''முட்டாளே! நீ என்ன செய்தாய்! அவனைச் சும்மா விட்டுவிட்டு வந்தாயா? தலையிலே ஒரு கல்லைத் தூக்கிப் போட் டிருக்கக் கூடாதா?''

''பழுவேட்டரையன் தலையைப்பற்றி உனக்குத் தெரியாது. அவன் தலையிலே கல்லைப் போட்டால் கல்தான் உடைந்து தூள் தூளாகும்!''

''அப்படியானால், கொள்ளிடத்து உடைப்பு வெள்ளத்திலாவது அவனை இழுத்து விட்டிருக்கலாமே?''

''நான்தான் சொன்னேனே? அவனைக் கண்டதும் எனக்கு யமனுடைய அண்



ணைக் கண்டது போல் ஆகிவிட்டது. கடம்பூரில் அவன் முன்னால் வேலனாட்டம் ஆடியபோதுகூட என் நெஞ்சு 'திக், திக்' என்று அடித்துக் கொண்டு தானிருந்தது. என்னை அவன் அடையாளங் கண்டு கொண்டானானால்...''

''அதை நினைத்து இப்போது எதற்கு நடுங்குகிறாய்?''

''அவன் உயிரோடிருக்கும் வரையில் எனக்குக் கொஞ்சம் திகிலாய்த்தான் இருக்கும். நீ சொன்னபடி செய்யாமற் போனோமே, அவனை வெள்ளத்தில் புரட்டித் தள்ளாமல் வந்து விட்டோமே என்று கவலையாயிருக்கிறது...''

''ஒரு கவலையும் வேண்டாம். ஒரு விதத்தில் பெரிய பழுவேட்டரையன் உயிரோடிருப்பதே நல்லது. அப்போது தான் சுந்தர சோழனும் அவனுடைய பிள்ளைகளும் இறந்து ஒழிந்த பிறகு சோழ நாட்டுச் சிற்றரசர்கள் இரு பிரிவாய்ப் பிரிந்து நின்று சண்டையிடு

வார்கள். பழுவேட்டரையர்களும் சம்புவரையர்களும் ஒருபக்கத்திலும் கொடும்பாளூர் வேளானும் திருக்கோவலூர் மலையமானும் இன்னொரு பக்கத்திலும் இருந்து சண்டை யிடுவார்கள். அது நம்முடைய நோக்கத்துக்கு மிக்க அநுகூலமா யிருக்கும். அவர்கள் தங்களுக்குள் சண்டையிடும்போது நாம் பாண்டிய நாட்டில் இரகசியமாகப் படை திரட்டிச் சேர்க்கலாம்....''

''ரவிதாஸா! அத்தைக்கு மீசை முளைத்தால் சித்தப்பா என்ற கதையாகப் பேசுகிறாய்! சுந்தர சோழனுக்கும் அவனுடைய இரு புதல்வர்களுக்கும் நாளைக்கு இறுதி நேர்ந்தால் அல்லவா நீ சொன்னபடி சோழ நாட்டுத் தலைவர்கள் சண்டை போட்டுக் கொள்வார்கள்? மூன்று பேருக்கும் நாளைக்கே முடிவு வரும் என்பது என்ன நிச்சயம்? உனக்கு ஒரு செய்தி தெரியுமா?...''

''எதைச் சொல்லுகிறாய்?''

''நாகைப்பட்டினத்தில் அருள்மொழி வர்மன் உயிரோடிருக்கிறானாம்! மக்கள் அவனைச் சூழ்ந்து கொண்டு அவனே சோழ நாட்டின் சக்கரவர்த்தியாக வேண்டும் என்று ஆர்ப்பரிக்கிறார்களாம். நீ கேள்விப்பட்டாயா?''

ரவிதாஸன் மறுபடியும் சிரித்துவிட்டு, ''நான் கேள்விப்படவில்லை. எனக்கே அது தெரியும். அருள்மொழி வர்மனைப் புத்தவிஹாரத்திலிருந்து வெளிப்படுத்தியது யார் என்று நினைக்கிறாய்? நம் ரேவதாஸக் கிரமவித்தனுடைய மகள் ராக்கம்மாள்தான்! அவள் தான் படகோட்டி முருகையனுடைய மனைவி!'' என்றான்.

''அதனால் என்ன? அருள்மொழி வர்மன் வெளிப்பட்டதனால் என்ன லாபம்? அவனை இனி எப்போதும் லட்சக் கணக்கான ஜனங்கள் அல்லவா சூழ்ந்து கொண்டிருப்பார்கள்? ஈழ நாட்டில் அவன் இரண்டு மூன்று பேருடன் இருந்தபோதே நம்முடைய முயற்சி பலிக்கவில்லையே?'' என்றான் தேவராளன்.

''அதுவும் நல்லதுதான் என்று சொன்னேனே? மூன்று பேருக்கும் ஒரே நாளில் யமன் வருவதற்கு இருக்கும்போது...''

''ரவிதாஸா! லட்சம் பேருக்கு மத்தியில் உள்ள இளவரசனிடம் யமன் எப்படி நெருங்குவான்? அதை நீ சொல்லவில்லையே?''

''நெருங்குவான் அப்பனே, நெருங்குவான்! யானைப் பாகனுடைய அங்குசத்தின் நுனியில் யமன் உட்கார்ந்திருப்பான்! சரியான சமயத்தில் இளவரசனுடைய உயிரை வாங்குவான்! பரமேசுவரா! சோழ நாட்டு மக்கள் இளவரசனை யானை மீது ஏற்றிவைத்து ஊர்வலம் விட்டுக் கொண்டு தஞ்சையை நோக்கி வருவார்கள். அந்த யானையை ஓட்டும் பாகனுக்கு வழியில் ஏதாவது ஆபத்து வந்து விடும். அவனுடைய இடத்தில் நம் ரேவதாஸக் கிரமவித்தன் யானைப் பாகனாக அமருவான்! அப்புறம் என்ன நடக்கும் என்பதை நீயே ஒருவாறு ஊகித்துக் கொள்!''

''ரவிதாஸா! உன் புத்தி கூர்மைக்கு இணை இல்லை என்பதை ஒத்துக்கொள்கிறேன். கிரமவித்தன் எடுத்த காரியத்தை முடிப்பான் என்று நாம் நம்பியிருக்கலாம். சுந்தர சோழன் விஷயம் என்ன? அவனுக்கு என்ன ஏற்பாடு செய்திருக்கிறாய்?'' என்று கேட்டான் தேவராளன்.

''பழுவேட்டரையனுடைய கருவூல நிலவறையில் சோமன் சாம்பவனை விட்டுவிட்டு வந்திருக்கிறேன். கையில் வேலாயுதத்துடன் விட்டு வந்திருக்கிறேன். அங்கேயிருந்து சுந்தர சோழன் அரண்மனைக்குச் சுரங்கப் பாதை போகிறது. சுந்தர சோழன் படுத்திருக்கும் இடத்தையே சோமன் சாம்பவனுக்குச் சுட்டிக் காட்டியிருக்கிறேன். இரண்டு கண்ணும் தெரியாத குருடன் கூட நான் குறிப்பிட்ட இடத்தில் நின்று வேலை எறிந்து சுந்தர சோழனைக் கொன்றுவிடலாம். சோமன் சாம்பவனை 'அவசரப்படாதே! நாளை வரையில் பொறுத்துக் கொண்டிரு!' என்று எச்சரித்து விட்டு வந்திருக்கிறேன்...''

''அது எதற்காக? சமயம் நேரும் போது காரியத்தை முடிப்பதல்லவா நல்லது?''

''முட்டாளே! சுந்தரசோழன் முன்னதாகக் கொலையுண்டால், அந்தச் செய்தி கேட்டதும் அவன் குமாரர்கள் ஜாக்கிரதையாகிவிட மாட்டார்களா? அந்த நோயாளிக் கிழவன் இறந்துதான் என்ன உபயோகம்? அது இருக்கட்டும்; நீ என்ன செய்தி கொண்டு வந்திருக்கிறாய்? கடம்பூர் மாளிகையில் எல்லாரும் எப்படி இருக்கிறார்கள்? அங்கே நாளை இரவு நடக்கப் போகிற காரியம் அல்லவா எல்லாவற்றையும் விட முக்கியமானது?''

''கடம்பூரில் எல்லாம் கோலாகலமாகத்தான் இருந்து வருகிறது. கலியாணப் பேச்சும் காதல் நாடகங்களுமாயிருக்கின்றன. நீ என்னமோ அந்தப் பழுவூர் ராணியை நம்பியிருப்பது எனக்குப் பிடிக்கவே இல்லை...''

''பழுவூர் ராணியா அவள்? பாண்டிமாதேவி என்று சொல்! வீர பாண்டியர்

இறப்பதற்கு இரண்டு நாளைக்கு முன்னால் அவளைத் தம் பட்டமகிஷியாக்கிக் கொண்டதை மறந்து விட்டாயா? வீர பாண்டியர் மரணத்துக்குப் பழிக்குப் பழி வாங்க அவள் சபதம் செய்திருப்பதை மறந்து விட்டாயா? ஒரு வாரத்துக்கு முன்னால் இதே இடத்தில் அவள் பாண்டிய குமாரன் கையிலிருந்து பாண்டிய குலத்து வீர வாளைப் பெற்றுக் கொள்ளவில்லையா...?''

''ஆமாம், ஆமாம்! ஆனால் நேற்று மாலை உன் பாண்டிமாதேவி வீர நாராயண ஏரியில் உல்லாசப் படகு யாத்திரை செய்துவிட்டுத் திரும்பி வந்ததை நீ பார்த்திருக்க வேண்டும்...''

''உல்லாசமாயிராமல் பின் எப்படியிருக்க வேண்டும் என்கிறாய்? மனத்தில் உள்ளதை மறைத்து வைக்கும் வித்தையை நந்தினியைப் போல் கற்றிருப்பவர் யாரும் கிடையாது. இல்லாவிட்டால் பழுவேட்டரையனின் அரண்மனையில் மூன்று வருஷம் காலம் தள்ள முடியுமா? அங்கேயிருந்தபடி நம்முடைய காரியங்களுக்கு இவ்வளவு உதவிதான் செய்திருக்க முடியுமா? ஆமாம், பழுவேட்டரையனை நீ சற்று முன் கொள்ளிடக்கரை துர்க்கையம்மன் கோவிலில் பார்த்ததாகக் கூறினாயே? அவனை ஏற்றி வந்த படகு கவிழ்ந்ததைப் பற்றி நானும் கேள்விப்பட்டேன். பழுவேட்டரையன் எப்போது கடம்பூரிலிருந்து புறப்பட்டான்? ஏன்?.....''

''ஏன் என்று எனக்கு உறுதியாகத் தெரியாது. மதுராந்தகத் தேவனைக் கடம்பூரிலிருந்து அழைத்து வரப் புறப்பட்டதாகச் சொன்னார்கள். நேற்றுக் காலை பழுவேட்டரையன் கிளம்பிச் சென்றான். அவன் சென்ற பிறகு இளவரசர்கள் வேட்டையாடச்சென்றார்கள். இளவரசிமார்கள் வீரநாராயண ஏரிக்கு ஜலக் கிரீடை செய்யச் சென்றார்கள். இளவரசர்களும் இளவரசிகளும் திரும்பி வந்த குதூகலமான காட்சியை நீ பார்த்திருந்தாயானால் இவ்வளவு நம்பிக்கையோடு பேச மாட்டாய்!...''

''அதைப் பற்றி நீ கொஞ்சமும் கவலைப்பட வேண்டாம். பழுவேட்டரையனைத் தஞ்சைக்கு அனுப்பி வைத்ததிலிருந்தே பாண்டிமாதேவியின் மனத்தை அறிந்து கொள்ளலாமே?''

''பெண்களின் மனத்தை யாரால் அறிய முடியும்? அந்தக் கிழவனை ஊருக்கு அனுப்பியது பழி வாங்கும் நோக்கத்துக்காகவும் இருக்கலாம்; காதல் நாடகம் நடத்துவதற்காகவும் இருக்கலாம்...''

''என்ன உளறுகிறாய், பரமேசுவரா! நந்தினி அந்தப் பழைய கதையை அடியோடு மறந்து விட்டாள். கரிகாலனை அவள் இப்போது விஷம் போலத் துவேஷிக்கிறாள்!''

''கரிகாலனைப் பற்றி நான் சொல்லவில்லை. அவனுடைய தூதன் வந்தியத்தேவனைப் பற்றிச் சொல்லுகிறேன். இரண்டு மூன்று தடவை நந்தினி அவனைத் தப்பிச் செல்லும்படி விட்டதை நீ மறந்து விட்டாயா?''

மந்திரவாதி கலகலவென்று சிரித்துவிட்டு, ''ஆமாம், வந்தியத் தேவன் எதற்காகப் பிழைத்திருக்கிறான் என்பது சீக்கிரத்திலேயே தெரியும். அது தெரியும்போது நீமட்டும்தான் ஆச்சரியப்படுவாய் என்று எண்ணாதே! இன்னும் ரொம்பப் பேர் ஆச்சரியப்படுவார்கள். முக்கியமாக சுந்தர சோழனின் செல்வக் குமாரி குந்தவை ஆச்சரியப்படுவாள். அவள் எந்தச் சுகுமார வாலிபனுக்குத் தன் உள்ளத்தைப் பறி கொடுத்திருக்கிறாளோ, அவனே அவளுடைய தமையன் ஆதித்த கரிகாலனைக் கொன்றவன் என்று அறிந்தால் ஆச்சரியப்பட மாட்டாளா?'' என்றான்.

''என்ன சொல்கிறாய், ரவிதாஸா! உண்மையாகவே வந்தியத் தேவனா கரிகாலனைக் கொல்லப் போகிறான்? அவன் நம்மோடு சேர்ந்து விட்டானா என்ன?''

''அதெல்லாம் இப்போது கேட்காதே! கரிகாலனைக் கொல்லும் கை யாருடைய கையாக இருந்தால் என்ன? பாண்டிய குலத்து மீன் சின்னம் பொறித்த வீர வாள் அவனைக் கொல்லப் போகிறது. அவனைக் கொன்ற பழி வந்தியத்தேவன் தலை மீது விழப் போகிறது! நம்முடைய ராணியின் சாமர்த்தியத்தைப் பற்றி இப்போது என்ன சொல்லுகிறாய்?''

''நீ சொன்னபடி எல்லாம் நடக்கட்டும். பிற்பாடு கேள், சொல்லுகிறேன்.''

''வேறு எது நடந்தாலும் நடக்காவிட்டாலும், கரிகாலனுடைய ஆவி நாளை இரவுக்குள் பிரிவது நிச்சயம். நந்தினி அவள் ஏற்றுக் கொண்ட பொறுப்பை நிறைவேற்றியே தீருவாள். நம்முடைய பொறுப்பையும் நாம் நிறைவேற்ற வேண்டும்....''

''நம்முடைய பொறுப்பு என்ன?''

''நாளை இரவு கடம்பூர் மாளிகையிலிருந்து வெளியேறும் சுரங்கப் பாதையில் ஆயத்தமாகக் காத்திருக்க வேண்டும். காரியம் முடிந்ததும் நந்தினி அதன் வழியாக வருவாள். அவளை அழைத்துக் கொண்டு இரவுக்கிரவே கொல்லிமலையை அடைந்துவிட வேண்டும். அங்கே இருந்து கொண்டு, சோழ நாட்டில் நடைபெறும் அல்லோல

கல்லோலத்தைப் பார்த்துக் கொண்டிருப்போம். ஒருவேளை சௌகரியப் பட்டால்.....''

''சௌகரியப்பட்டால், என்ன?''

''பழுவேட்டரையனின் கருவூல நிலவறையில் சேர்த்து வைத்திருக்கும் பொருள்களையெல்லாம் சுரங்கப் பாதை வழியாகக் கொண்டு போய்ச் சேர்க்க வேண்டும். சோழ நாட்டுப் பொக்கிஷத்திலிருந்து கொண்டு போன பொருள்களைக் கொண்டே சோழ நாட்டின் மீது போர் தொடுக்கப் படை திரட்டுவது எவ்வளவு பொருத்தமாயிருக்கும் ?''

இவ்விதம் கூறிவிட்டு மறுபடியும் ரவிதாஸன் சிரித்தான்.

தேவராளனுக்கு ரடித்த பரமேசுவரன், '' சரி, சரி ! ஆகாசக் கோட்டையை ரொம்பப் பெரிதாகக் கட்டி விடாதே ! முதலில் கொள்ளிடத்தைத் தாண்டி அக்கரையை அடைந்து கடம்பூர் போய்ச் சேரலாம். கடம்பூரில் நீ சொன்னபடி எல்லாம் நடக்கட்டும் ! பிறகு, பழுவேட்டரையனுடைய பொக்கிஷத்தைக் கொள்ளையடிப்பது பற்றி யோசிக்கலாம். என்ன சொல்லுகிறாய்? இப்போதே கிளம்பலாமா ? இரவே கொள்ளிடத்தைத் தாண்டி விடுவோமா ?'' என்றான்.

''வேண்டாம், வேண்டாம்! பொழுது விடிந்ததும் படகில் ஏறினால் போதும். அதற்குள் காற்றும் நன்றாக அடங்கிவிடும். ஆற்று வெள்ளமும் கொஞ்சம் குறைந்துவிடும்.''

''அப்படியானால், இன்றிரவு இந்தப் பள்ளிப்படை மண்டபத்திலேயே படுத்திருக்கலாமா ?''

ரவிதாஸன் சற்று யோசித்தான். அப்போது சற்றுத் தூரத்தில் நரிகள் ஊளையிடும் சத்தம் கேட்டது. ரவிதாஸனுடைய உடல் நடுங்கிற்று.

'' ரவிதாஸா ! கேவலம் நரிகளின் குரலைக் கேட்டு ஏன் இப்படி நடுங்குகிறாய்?'' என்றான் தேவராளன்.

'' அப்பனே ! கோடிக்கரைப் புதை சேற்றில் கழுத்து வரையில் நீ புதைபட்டிருந்து, சுற்றிலும் நூறு நரிகள் நின்று உன்னைத் தின்பதற்காகக் காத்திருக்கும் பயங்கரத்தை நீ அநுபவித்திருந்தால், இப்படிச் சொல்லமாட்டாய் ! சிங்கத்தின் கர்ஜனையையும் மத யானையின் ஓலத்தையும் கேட்டு, எனக்குப் பயம் உண்டாவதில்லை. நரியின் ஊளையைக் கேட்டால் குலை நடுங்குகிறது. வா ! வா ! இந்தச் சுடுகாட்டில் இராத் தங்க வேண்டாம். வேறு எங்கேயாவது கிராமத்துக்குப் பக்கமாயுள்ள கோயில் அல்லது சத்திரத்தில் தங்குவோம். இல்லாவிட்டால், கொள்ளிடக்கரையிலுள்ள துர்க்கை கோயிலைப் பற்றிச் சொன்னாயே ? அங்கே போவோம். இன்னமும் அந்தக் கிழவன் அங்கே படுத்திருந்தால், வெள்ளத்தில் அவனை இழுத்து விட்டுவிடலாம். அதுவே அவனுக்கு நாம் செய்யும் பெருதவியாயிருக்கும். நாளைக்கு மறுநாள் வரையில் அவன் உயிரோடிருந்தால், ரொம்பவும் மனத் துயரத்துக்கு ஆளாக நேரிடும் !''

மேற்கூறிய சம்பாஷணையை ஏறக்குறைய ஒன்றும் விடாமல் பெரிய பழுவேட்டரையர் கேட்டுக் கொண்டிருந்தார். அவர்கள் பேசிய ஒவ்வொரு வார்த்தையும் அவருடைய செவிகளில் ஈயத்தைக் காய்ச்சி ஊற்றுவதுபோல் இருந்தது. அவருடைய நெஞ்சு ஒரு பெரிய எரிமலையின் கர்ப்பத்தைப் போல் தீக்குழம்பாகிக் கொதித்தது. தாம் காதலித்துக் கலியாணம் செய்து கொண்ட பெண், வீரபாண்டியன் மரணத்துக்காகச் சோழ குலத்தின் மீது பழி வாங்க வந்தவள் என்பதும், மூன்று வருஷங்களாக அவள் தம்மை ஏமாற்றி வருகிறாள் என்பதும் சொல்ல முடியாத வேதனையையும் அவமானத்தையும் அவருக்கு உண்டாக்கின.

ஆறு தலைமுறையாகச் சோழர் குலத்துக்கும் பழுவூர் வம்சத்துக்கும் நிலை பெற்று வளர்ந்து வரும் உறவுகளை அச்சமயம் பழுவேட்டரையர் நினைத்துக் கொண்டார். பார்க்கப் போனால், சுந்தர சோழனும் அவனுடைய மக்களும் யார்? சுந்தர சோழனுடைய பாட்டி பழுவூர் வம்சத்தைச் சேர்ந்தவள் அல்லவா? சுந்தரசோழனுடைய மக்கள் மீது தமக்கு ஏற்பட்ட கோபமெல்லாம் சமீப காலத்தது அல்லவா? ஆதித்த கரிகாலன் ஏதோ சிறுபிள்ளைத்தனமாக நடந்து கொண்டான் என்பதற்காகவும் மலையமானை நமக்குப் பிடிக்கவில்லை என்பதற்காகவும், எவ்வளவு பயங்கரமான சதிச் செயல்களுக்கு இடங்கொடுத்து விட்டோம்? சோழர் குலத்தின் தீராப் பகைவர்களான பாண்டிய நாட்டுச் சதிகாரர்கள் நம்முடைய அரண்மனையிலிருந்து கொண்டு, நம்முடைய நிலவறைப் பொக்கிஷத்திலிருந்து திருடிப்போன பொருளைக் கொண்டு, சோழ குலத்துக்கு விரோதமாகச் சதிகாரச் செயல்களைச் செய்ய அல்லவா இடம் கொடுத்து விட்டோம்? ஆகா! இந்தச் சண்டாளர்கள் சொன்னபடி நாளை இரவுக்குள் மூன்று இடங்களில் மூன்று பயங்கரமான கொலைகள் நடக்கப்

போகின்றனவா? நம்முடைய உடலில் மூச்சு இருக்கும் வரையில் முயன்று அவற்றைத் தடுத்தேயாக வேண்டும். இன்னும் அறுபது நாழிகை நேரம் இருக்கிறது. அதற்குள்எவ்வளவோ காரியங்கள் செய்து விடலாம். இரவுக்கிரவே குடந்தை சென்று தஞ்சைக்கும் நாகைப் பட்டினத்துக்கும் செய்தி அனுப்பிவிட்டுக் கடம்பூருக்குக் கிளம்ப வேண்டும். இந்தப் பாதகர்கள் அங்கே போய்ச் சேர்வதற்குள் நாம் போய்விட வேண்டும்...



திரு வேமு முகுந்தா ஐரோப்பிய நாடுகள் பலவற்றில் ரசிகர்களை வீணை கானத்தினால் மகிழ்வித்து வருகிறார். பிரிட்டனில் இவர் வீணைக் கச்சேரி செய்தபோது எடுத்த படத்தை மேலே காண்கிறீர்கள். அவருடன் சேர்ந்து வீணை வாசிப்பவர் ஸ்ரீமதி லக்ஷ்மிபதி. ஜெர்மனியில் இசைமேதை பீதோவன் ரசிகர்களைப் பரவசப்படுத்திய அதே ரெடௌட் மன்றத்தில் இவர்களது வீணைக் கச்சேரியும் நடந்தது விசேஷம்.

இவர்களைக் கடம்பூருக்கு வரும்படி விடுவதா? இந்த இடத்திலேயே இவர்களைக் கொன்று போட்டு விட்டுப் போய் விடுவது நல்லதல்லவா? நம்மிடம் ஆயுதம் ஒன்றுமில்லை. இல்லாவிட்டால் என்ன? வஜ்ராயுதத்தை நிகர்த்த நம் கைகள் இருக்கும்போது வேறு ஆயுதம் எதற்கு? ஆனால் இவர்கள் ஒருவேளை சிறிய கத்திகள் இடையில் செருகி வைத்திருக்கக்கூடும். அவற்றை எடுப்பதற்கே இடங்கொடுக்காமல் இரண்டுபேருடைய கழுத்தையும் இறுக்கிப் பிடித்து நெரித்துக் கொன்றுவிட வேண்டும்....

ஆனால் அவ்வாறு இவர்களுடன் இந்த இடத்தில் சண்டை பிடிப்பது உசிதமா?

இவர்களிடம் தெரிந்து கொள்ள வேண்டிய விஷயங்களைத் தெரிந்து கொண்டாகிவிட்டது. நாம் வழிபடும் குலதெய்வமாகிய துர்க்கா பரமேசுவரியே படகு கவிழச் செய்து, நம்மை அவளுடைய திருக்கோயிலில் படுத்திருக்கச் செய்து, இந்தப் பயங்கர இரகசியங்களைத் தெரிந்து கொள்ளும் படியும் செய்திருக்கிறாள். சக்கரவர்த்திக்கும் அவருடைய குமாரர்களுக்கும் விபத்து நேரிடாமல் பாதுகாப்பதல்லவா நம்முடைய முக்கியமான கடமை? அதிலும், கடம்பூரில் கரிகாலனுக்கு எதுவும் நேராமல் தடுப்பது மிக மிக முக்கியமானது. அப்படி ஏதாவது நேர்ந்து விட்டால் நமக்கும் நமது குலத்துக்கும் அழியாத பழிச் சொல் ஏற்பட்டுவிடும். ஆறு தலைமுறையாகச் சோழ குலத்துக்குப் பழுவூர் வம்சத்தினர் செய்திருக்கும் உதவிகள் எல்லாம் மறைந்து மண்ணாகிவிடும். பெண் என்று எண்ணி நமது அரண்மனையில் கொண்டு வந்து வைத்திருந்த அரக்கியினால் கரிகாலன் கொல்லப்பட்டால், அதைக் காட்டிலும் நமக்கு நேரக்கூடிய அவகேடு வேறு ஒன்றுமேயில்லை.

ஆகா! அத்தகைய அழகிய வடிவத்துக்குள்ளே அவ்வளவு பயங்கரமான ஆலகால விஷம் நிறைந்திருக்க முடியுமா? மூன்று உலகையும் மயக்கக்கூடிய மோகனப் புன்னகைக்குப் பின்னால் இவ்வளவு வஞ்சகம் மறைந்திருக்க முடியுமா? இந்தச் சண்டாளர்கள் சற்று முன்னால் சொன்னதெல்லாம் உண்மையாக இருக்க முடியுமா?....

**ப**ழுவேட்டரையருடைய உள்ளத்தில் கோபத் தீ கொழுந்துவிட்டு எரியும்படிசெய்த அந்தச் சதிகாரர்களின் வார்த்தைகள் ஒருவிதத்தில் அவருக்குச் சிறிது திருப்தியையும் அளித்திருந்தன. நந்தினி சதிகாரியாக இருக்கலாம்; தம்மிடம் அன்பு கொண்டதாக நடித்து வஞ்சித்து ஏமாற்றி வந்திருக்கலாம். ஆனால் அவள் கரிகாலன் மீதோ கந்தமாறன் அல்லது வந்தியத்தேவன் மீதோ மோகம் கொண்ட காரணத்தினால் தம்மை வஞ்சிக்கவில்லை! அந்த மௌடீகச் சிறுவர்களை அவள் பொருட்படுத்தவில்லை. அவளுடைய அந்தரங்க நோக்கத்துக்கு அவர்களையும் உபயோகப் படுத்துவதற்காகவே அவர்களிடம் சுமுகமாகப் பேசிப் பழகி வருகிறாள்!

இந்தச் செய்தி பழுவேட்டரையரின் அந்தரங்கத்தின் அந்தரங்கத்துக்குள்ளே அவரையும் அறியாமல் சிறிது திருப்தியை அளித்தது. கரிகாலன் கொல்லப்படாமல் தடுக்க வேண்டியது, தம் குல கௌரவத்தைப் பாதுகாத்துக் கொள்ளவும் தமக்கு என்றென்றைக்கும் அழியாத அபகீர்த்தி நேராமல் தடுத்துக் கொள்ளவும் மட்டும் அல்ல, நந்தினியை அத்தகைய கோரமான பாவ காரி

யத்திலிருந்து தப்புவிப்பதற்காகவுந் தான். ஒரு வேளை அவனுடைய மனத்தையே மாற்றி விடுதல் கூடச் சாத்தியமாகலாம். இந்தச் சண்டாளச் சதிகாரர்களிடம் அகப்பட்டுக் கொண்டிருப்பதால் அவள் வேறு வழியின்றி இவர்களுக்கு உடந்தையாயிருக்கலாம் அல்லவா? இவர்களை இங்கேயே கொன்று ஒழித்து விட்டால் நந்தினிக்கு விடுதலை கிடைக்கலாம் அல்லவா ?....

இவ்வாறு எண்ணி அந்த வீரக் கிழவர் தம்மை அறியாமல் தொண்டையைக் கனைத்துக் கொண்டார். சிம்ம கர்ஜனை போன்ற அந்தச் சத்தம் சதிகாரர்கள் இருவரையும் திடுக்கிடச் செய்தது.

''யார் அங்கே?'' என்றான் தேவராளனாகிய பரமேசுவரன்.

அதற்கு மேல் தாம் மறைந்திருப்பது சாத்தியம் இல்லை. உசிதமும் ஆகாது என்று கருதிப் பெரிய பழுவேட்டரையர் வெளிப்பட்டு வந்தார்.

**ம**ழைக்கால இருட்டில் திடீரென்று தோன்றிய அந்த நெடிய பெரிய உருவத்தைக் கண்டு சதிகாரர்கள் இருவரும் திகைத்து நின்றபோது, ''நான்தான் யமனுக்கு அண்ணன்!'' என்று கூறி விட்டுப் பழுவேட்டரையர் சிரித்தார்.

அந்தக் கம்பீரமான சிரிப்பின் ஒலி அவ்வனப் பிரதேசம் முழுவதையும் நடுநடுங்கச் செய்தது.

வந்தவர் பழுவேட்டரையர் என்று அறிந்ததும் ரவிதாஸன், தேவராளன் இருவரும் தப்பி ஓடப் பார்த்தார்கள் ! ஆனால் பழுவேட்டரையர் அதற்கு இடங் கொடுக்கவில்லை. தம் நீண்ட கரங்கள் இரண்டையும் நீட்டி இருவரையும் பிடித்து நிறுத்தினார். அவருடைய வலது கை ரவிதாஸனுடைய கழுத்தைப் பற்றியது. இடது கை தேவராளனுடைய ஒரு புஜத்தைப் பற்றியது. வஜ்ராயுதத்தைக் காட்டிலும் வலிமை பொருந்திய அந்தக் கரங்களின் பிடிகள் அவ்விருவரையும் திக்குமுக்காடச் செய்தன.

எவ்வளவுதான் கையில் வலிவு இருந்தாலும் இருவரையும் ஏககாலத்தில் சமாளிக்க முடியாது என்று எண்ணிப் பழுவேட்டரையர் தேவராளனைத் தலைகுப்புற விழும்படி கீழே தள்ளினார். கீழே விழுந்தவன் முதுகில் ஒரு காலை ஊன்றி வைத்துக் கொண்டு ரவிதாஸனுடைய கழுத்தை இரண்டு கைகளாலும் நெரிக்கத் தொடங்கினார்.

ஆனால் தேவராளன் சும்மா இருக்கவில்லை. அவனுடைய இடுப்பில் செருகியிருந்த கத்தியைச் சிரமப்பட்டு எடுத்துத் தன்னை மிதித்துக் கொண்டிருந்த காலில் குத்தப் பார்த்தான். பழுவேட்டரையர் அதை அறிந்து கொண்டார். இன்னொரு காலினால் அவனுடைய கை மணிக்கட்டை நோக்கி ஒரு பலமான உதை கொடுத்தார். கத்தி வெகுதூரத்தில் போய் விழுந்தது. தேவராளனுடைய ஒரு கையும் அற்று விழுந்து விட்டது போல் ஜீவனற்றதாயிற்று. ஆனால் அதே சமயத்தில் அவனை மிதித்திருந்த கால் சிறிது நழுவியது. தேவராளன் சட்டென்று நெளிந்துகொடுத்து வெளியே வந்து குதித்து எழுந்தான். உதைபடாத கையின் முஷ்டியினால் பழுவேட்டரையரை நோக்கிக் குத்தத் தொடங்கினான். அந்தக் குத்துக்கள் கருங்கல் பாறைச் சுவர் மீது விழுவன போலாயின. குத்திய தேவராளனுடைய கைதான் வலித்தது. அதுவும் இன்னொரு கையைப் போல் ஆகிவிடுமோ என்று தோன்றியது.

இதற்கிடையில் ரவிதாஸன் தன் கழுத்திலிருந்து பழுவேட்டரையருடைய கரங்களை விலக்கப் பெருமுயற்சி செய்தான். ஒன்றும் பலிக்கவில்லை. கிழவருடைய இரும்புப் பிடி சிறிதும் தளரவில்லை. ரவிதாஸனுடைய விழிகள் பிதுங்கத் தொடங்கின. உளறிக் குளறிக் கொண்டே, ''தேவராளா ! சீக்கிரம்! சீக்கிரம்! கோவில் மேலே ஏறு! மண்டபத்தைக் கீழே தள்ளு!'' என்றான்.

தேவராளன் உடனே பாய்ந்துசென்று பள்ளிப்படைக் கோயிலின் மேல் மண்டபத்தின் மீது ஏறினான். அங்கே மண்டபத்தின் ஒரு பகுதியில் பிளவு ஏற்பட்டு இனி சிறிது நகர்ந்தாலும் கீழே விழக்கூடிய நிலையில் இருந்தது. அதை முன்னமே அவர்கள் கவனித்திருந்தார்கள். ரவிதாஸன் அதைத்தான் குறிப்பிடுகிறான் என்று தேவராளன் தெரிந்து கொண்டான். மண்டபத்தின் இடிந்த பகுதியைத் தன் மிச்சமிருந்த வலிவையெல்லாம் பிரயோகித்து நகர்த்தித் தள்ளினான். அது விழும்போது அதனுடனிருந்த மரம் ஒன்றையும் சேர்த்துத் தள்ளிக் கொண்டு விழுந்தது.

பழுவேட்டரையர், மேலேயிருந்து மண்டபம் தகர்ந்து விழப் போவதைத் தெரிந்து கொண்டார். ஒரு கையை ரவிதாஸனுடைய கழுத்திலிருந்து எடுத்து மேலேயிருந்து விழும் மண்டபத்தைத் தாங்கிக் கொள்ள முயன்றார்.

ரவிதாஸன் அப்போது ஒரு பெரு முயற்சி செய்து அவருடைய பிடியிலிருந்து தப்பி அப்பால் நகர்ந்தான்.

மரமும் மண்டபமும் பழுவேட்டரையர்பேரில் விழுந்தன. பழுவேட்டரையர் தரையில் விழுந்து நினைவு இழந்தார்.

(தொடரும்)

"உள்ளியது எய்தல் எளிதுமன் மற்றுந்தான் உள்ளியது உள்ளப் பெறின்" —திருக்குறள்

**ஏன் முடியாது**

"IMPOSSIBLE IS IN THE DICTIONARY LEAVE IT THERE" —மேற்கு

▲ கருத்து : தீப. நடராஜன்

**மு**தல் உலக மகா யுத்தத்துக்கு முற்பட்ட காலத்தில் அமெரிக்காவில் உள்ள இண்டியானா மாநிலத்தில் சிப்பாய்களுக்கும் மாலுமிகளுக்கும் ஒரு நினைவுச் சின்னம் எழுந்தது.

பல போர்க்களங்களில் வீர மரணம் எய்தியவர்களுக்காக எழும்பிய இந்த ஸ்தூபி, இண்டியானா போலிஸ் நகரில் நடுநாயகமாக விளங்குகிறது. 1887ல் ஆரம்பித்து 1901ல் முடிவுற்ற இந்த ஸ்தூபியைத் திட்டமிட்டவர்கள் ஒரு கட்டிடக் கலை நிபுணரும் இரு சிற்பிகளுமாவர். இவர்கள் மேற்பார்வையில் உருவான இந்த ஸ்தூபி 314 அடி உயரமும் அடிவாரத்தில் 342 அடி சுற்றளவும் உடையது. அந்நாளைய கட்டிடக் கலைச் சாதனைகளை மனத்தில் கொண்டு பார்த்தால் இது எவ்வளவு பெரிய சாதனை என்று விளங்கும். கல்லிலும் வெண்கலத்திலும் பல அழகிய சிலைகள் ஸ்தூபியைச் சுற்றிலும் உள்ளன. ஸ்தூபியின் கிழக்கிலும் மேற்கிலும் யுத்தம், சமாதானம் ஆகிய இரண்டையும் உருவகப்படுத்திய சிலைகள் சதா சர்வ காலமும் ஒன்றை யொன்று எதிர்த்த வண்ணம் நிற்கின்றன. உயரே செல்ல "எலிவேட்டர்" சாதனம் உண்டு. அதன் உதவியை ஏற்க விரும்பாதோர் முந்நூற்று முப்பது படிகளை ஏறிக் கடக்கும் தெம்பு உள்ளவர்களாக இருக்க வேண்டும். "ஏன் முடியாது?" என்று கேட்கக் கூடியவர்கள் முயன்று பார்க்கலாம்.

"**ஏ**ன் முடியாது?" என்று சவால் விடும் பழக்கம் இன்று நேற்றல்ல, இன்றைக்கு ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்பாகவே ஆரம்பமாகிவிட்டது! அக்காலத்தில் மிஸிஸிபி பள்ளத்தாக்கின் கிழக்குப் பாதியில் "குன்று சமைப்போர்" வாழ்ந்து வந்தனர். ஒஹையோ மாநிலத்தில் மட்டும் இவர்கள் ஐயாயிரம் மண்மேடுகளை — செயற்கைக் குன்றுகளை — உருவாக்கி யிருக்கிறார்கள். இவற்றுள் ஒரு பெரிய பாம்பு வளைந்து நெளிந்து ஒரு முட்டையை விழுங்க முற்படுவது போல் அமைந்துள்ள செய்குன்றுகள் உல்லாசப் பயணிக

# ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட அரிய சாதனை!

ளிடையே மிகப் பிரசித்தி பெற்றுள்ளன. இந்தப் பாம்புப் பாணி அமைப்புக்கு மத சம்பந்தப்பட்டதான ஏதோ ஓர் உட்பொருள் இருக்க வேண்டும் என ஆராய்ச்சியாளர் நம்புகின்றனர்.

வெள்ளையர் அமெரிக்காவில் அடியெடுத்து வைப்பதற்கு நீண்ட காலம் முன்பே இந்தக் குன்று சமைக்கும் சமூகம் மறைந்துபோய் விட்டது. அவர்கள் என்ன ஆனார்கள் என்பது பற்றிய தடையம் எதுவுமே கிடைக்கவில்லை.



**சி**வப்பிந்தியர்களுள் ஒரு மாபெரும் வீரன் கிரேஸி ஹார்ஸ். நூறு ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்து தீரத்துடன் வெள்ளையரை எதிர்த்துப் போரிட்ட இவனை ஒரு மாபெரும் சிற்பமாக வடிக்க கோர்க்ஸாக் ஸியோல்கோவ்ஸ்கி என்பவர் முயன்று வருகிறார். அறுபத்தோரு வயதான இவர் இதற்காக முப்பது ஆண்டுகளாகப் பாடுபட்டு வருகிறார். ரஷ்மோர் மலையில் உருவாக்கப்பட்டுள்ள நான்கு ஜனாதிபதிகளின் தலைகளையும் ஒன்றாய் இணைத்தால் எவ்வளவு பெரிதாய் இருக்குமோ அத்தனை பெரிதாக கிரேஸி ஹார்ஸின் தலை அமையும்! அவன் ஒரு குதிரைமேல் அமர்ந்து முன்னேறுமாறு வீரக் கட்டளை இடுவது போல் சிற்பம் வடிக்கப்படும். அரசாங்க உதவியை எதிர்பாராமல் பணியாற்றிவரும் இச் சிற்பி ஏராளமாகப் பாறைகளை இதுவரை தகர்த்திருக்கிறார் எனினும் ராட்சத அளவுள்ளதான சிற்ப வடிவத்தின் ஒரு பகுதிகூட இன்னும் உருவாகவில்லை! சிற்பம் அத்துணை பெரியது!

ஸியோல்கோவ்ஸ்கி கூறுகிறார்: "முதல் தடவை நான் இம்மலை மீது ஏறியபோது முப்பதடி சறுக்கி விழுந்தேன். மலைச் சரிவில் நாலடி அகலத்துக்கே நீட்டிக் கொண்டிருந்த ஒரு சமதள அமைப்பு என்னைத் தாங்கிக் காத்தது. இந்த இயற்கையான அமைப்பு இல்லாது போயிருந்தால் அதள பாதாளத்தைக் கண்டிருப்பேன். இந்த முதல் அதிர்ச்சிக்குப் பிறகு, இனி எந்தக் கஷ்டமும் எனக்கு நேராது என்ற நம்பிக்கை பிறந்தது. அப்புறம் ஓரிரு தடவைகளில் கையெலும்பையும் முதுகெலும்பையும் ஒடித்துக் கொண்டிருக்கிறேன்; இப்படிச் சில சில்லறைப் பிரச்னைகள். ஆனால் விபரீதமாக ஏதும் நேர்ந்துவிடவில்லை!"

சிங்கக் கழுகு 4

பீட்டர் ஓ டான்னல்

வெனிஸில் அன்று மாலை...

இன்று இரவு நம்மை விருந்துக்கு அழைத்துள்ளவனைவிட என் தோல் பையைத் திருடிய வாண்டுகள் எவ்வளவோ மேல்.

அல்போரினியை உனக்குப் பிடிக்காதென்றால் எதற்காக நாம் விருந்துக்குப் போக வேண்டும்?

ஒரு பேரழகி என்னுடன் வருவதைக் கண்டு அவன் பொருமையால் வெந்து போவானே; அதைக் காண எனக்கு ஆசை!

அது நீ சொல்லும் காரணம்; அவன் உன்னை அழைக்கக் காரணம்?

அல்போரினி போன்றவர்கள் எதிரிகளிடம் மிகவும் கரிசனம் காட்டுவார்கள். எதிர்பாராத சமயத்தில் ஆளைத் தீர்த்துக் கட்ட இந்தப் பண்பு உதவும்.

1707

அல்போரினிக்கும் உனக்கும் ஒத்து வரவில்லையே, ஏன்?

டாஸ்ஸோ நிலையும் அதிலுள்ள அரண்மனையையும் அல்போரினி என்மூலமாகத் தான் ரோமிலுள்ள ஒரு பணக்காரருக்கு விற்றான்.

அவற்றுக்கு நான் அதிகமாக மதிப்புப் போட்டால் லஞ்சம் தருவதாகச் சொன்னான்.

அதற்கு இந்தக் கட்டடக் கலை நிபுணர் கூறிய பதில்?

'லஞ்சத்தை உன் பணத் தொந்தியில் நிற்கும் கால் சராயிலேயே செருகிக்கொள்' என்றேன்.

1708


அல்போரினியின் விருந்துக் கென இப்படிப் பழங்கால உடை அணிந்து கொண்டு விரைப் படகில் செல்வதா!
பழங்கால பாணி யில் துடுப்புப் போடும் படகுக் கும் ஓட்டக்கார னுக்கும் ஏற்பாடு செய்திருக் கிறேன்.
1709

மாக்ஸ்! நீ என்ன சொல் கிறாய்?
பழங்கால மன்னர்கள் பாணி யில் இன்றும் வாழ விரும்பு கிறான். அவன் சிந்தனையும் நடத்தையும் கூட அப்படியே இருக்கும். கட்டி வருமா? இன்றிரவு நீதான் பார்க்கப் போகிறாயே!

டாஸ்ஸோ தீவில் உள்ள தன் இரண் டாவது அரண் மனையை அல்போ ரினி விற்கக் காரணம்?
அவன் இப்போ வசித்துக் கொண்டிருக்கும் முதல் அரண்மனையை நிர்வ கிக்கவும் ஆடம்பர மாய் வாழவும் பணம் வேண்டியிருக்கிறது. இருநூறு ஆண்டுகளுக்கு முன் பிறந்திருக்க வேண்டியவன் அவன்.

மாக்ஸ்! அந்த வாண்டுகள் இருடிச் சென்ற தோல் பையில் ஏதாவது முக்கிய மான தாள்கள் இருந்தனவா?
முக்கியமான தொரு தாள் இருந்தது: ஆனால் அது தொலைந்து போனதால் பாதகம் இல்லை.
1710.

ரொம்ப மர்மமாகப் பேசுகிறாயே?
வேண்டுமென்றேதான் அப்படி பேசுகிறேன். உன் ஆவ லைத் தூண்டி பிறகு அரை குறை யாக விஷயத்தைச் சொல்லி உன்னைத் தவிக்க வைக்கப் போகிறேன்

இன்று அந்த அரண்மனைக் கூரை யில் பழுது பார்க்கும் வேலைகள் நடந்தபோது அங்கு ஒளித்து வைக்கப்பட்டிருந்த நூறு ஆண்டுகளுக்கு முற்பட்டஒரு கடிதம் எனக்குத் தற்செய லாய்க் கிடைத்தது.



அந்தப் பழமைகாலக் கடிதத்தில் என்ன எழுதியிருந்தது?
அதை இப்போ சொல்ல மாட்டேன். ஆனால் இதைத் தெரிந்துகொள் அல்போரினி பிரபு, ''தீவையும் அரண்மனையையும் அவற்றின் மேலும் உள்ளும் இருக்கும் அத்தனையையும் விற்றேன'' என்று பத்திரத்தில் எழுதியிருக்கிறான்




இப்படி எழுதியதில் தான் என்னென்ன வற்றை யெல்லாம் இழக்கிறோம் என்று முழு விவரமும் தெரிய வரும்போது கர்வ மிக்க அந்த அயோக்கியச் சீமான் பாயைப் பிராண்டுவான்!
மாக்ஸ்! முழு விவரமும் சொல்!




மாட்டேன்! உன்னை ஆச்சரியத்தில் ஆழ்த்த வேண்டுமெனக்கு. கழுகுச் சிங்கத்தைத் தகர்க்கும்வரை காத்திரு – காட்டுகிறேன்!
1711




அப்படியானால் கழுகுச் சிங்கத்தில் ஒரு ரகசியம் பொதிந்திருக்கிறது! இல்லையா?
மேற்கொண்டு எதுவும் கேட்காதே! உன்னைப போலவே நானும் மர்மமாக நடந்து கொள்ளப போகிறேன




என்னைப போலவா? என்னைப பற்றி உனக்குத தெரியாதது என்ன இருக்கிறது?
ஒன்று, இரண்டா?




நீ யார்? எங்கிருந்து வந்தாய்? எங்கே வளர்ந்தாய்? எப்படிப பணக்காரியானாய்? நம திருமணம் எப்போ நடக்கப் போகிறது? அடிக்கடி கார்வின் என்பவனுக்கு டெலிபோன் செய்கிறாயே, அவன் யார்?
(தொடரும்)

இடுக்கண்
களைந்திடும் நட்பு போல்

# வலியைப்
# போக்கிடும்
# 'ஆஸ்ப்ரோ'



'ஆஸ்ப்ரோ' மட்டுமே மைக்ரோ:ஃபைன் செய்யப்படுகிறது
அதிவேகமாக வலியை வெளியே இழுப்பதற்காக.

நிகோலஸ் (N) தயாரிப்பு

## 28. நரபலி

இந்திய எல்லையில் லடாக் பகுதியில் சீனர்கள் தாக்கத் தொடங்கிவிட்டார்கள். இந்திய அரசாங்கத்துக்கும், சீன அரசாங்கத்துக்கும் இடையே ஏற்பட்ட கடிதப் போக்குவரத்தினால் எவ்வித நன்மையும் இல்லை. வடகிழக்கு எல்லைப் பகுதியில் (நேஃபா) இரு நாடுகளுக்கும் எல்லையாக வகுக்கப்பட்டிருந்த 'மக்மோஹன் கோட்டை' யும் சீனர்கள் தாண்டி, இந்தியாவுக்குள் பிரவேசித்துவிட்டதாகச் செய்தி வந்தது.

செய்தி ஸ்தாபனங்கள் மூலமாக டெலிபிரிண்டரில் வந்து கொண்டிருந்த செய்திகளை மிகவும் கவலையுடன் கவனித்துக் கொண்டிருந்தான் முரளி. பூடான் எல்லைக்குக் கிழக்குப் பகுதியிலும் போர் வலுக்கிறது என்ற செய்தி கிடைத்ததும் முரளி பரபரப்படைந்தான். இவ்வளவு முக்கியமான கட்டத்தில் இந்தியப் பிரதமர், இலங்கைக்குச் சுற்றுப் பயணம் செய்யப் போகிறார் என்ற செய்தி முரளியை இன்னும் திகைக்க வைத்தது. நாடு, பெரும் ஆபத்துக்கு உள்ளாகியிருக்கும் போது பிரதமர் வெளிநாடு செல்வது முரளிக்கு வியப்பாயிருந்தது. இந்தச் சமயத்தில் ஒரு நிருபரைத் தில்லிக்கு அனுப்பி வைக்க நினைத்தான்.

சற்று இளைப்பாற முரளி கிளப்புக்குச் சென்றான். ஜட்ஜ் ராஜரத்தினம் வழக்கம் போல் ஒரு தனி இடத்தில் அமர்ந்து சிந்தனையில் மூழ்கியிருந்தார். அவருக்குப் பக்கத்தில்



கிடந்த சோபாவில் போய் அமர்ந்தான் முரளி. அவனைக் கண்டதும் உற்சாகத்துடன் கையை நீட்டி அவன் கையைப் பற்றினார்.

''மிஸ்டர் முரளி, உங்களைப் பார்த்து வெகு நாளாயிற்று. வேலை அதிகம் போலிருக்கிறது. சீனாக்காரன் சண்டைக்கு வந்து விட்டான். செய்திக்குப் பஞ்சமிருக்காது'' என்றார் ஜட்ஜ்.

''இந்தி சீனி பாய் பாய் என்று சொல்லிக் கொண்டே சீனாக்காரன் முதுகில் குத்தி விட்டானே!'' என்றான் முரளி.

''முதுகில் குத்துவது ஒரு ராஜதந்திரம். உலக வரலாறு தெரிந்தவர்களுக்கு இது வியப்பளிக்காது. முதுகிலும் கத்தி பாயும் என்பதை ஒரு

ர.சு.நல்லபெருமாள்



நாட்டை ஆள்பவர்கள் புரிந்து கொண்டு எச்சரிக்கையாக இருக்கவில்லை' என்பதுதான் வியப்பாயிருக்கிறது. இதைவிட வியப்பானது முதுகில் குத்தியவனுக்கு உதவி புரியும் தேசத் துரோக அரசியல் கட்சிகளை இன்னும் தடை செய்யாமலிருப்பதுதான்!'' என்றார் ராஜரத்தினம். பிறகு திடீரென்று கேட்டார்: ''புரொபஸர் மகளுக்குச் சீக்கிரமே கல்யாணம் நடக்கப் போகிறதாமே? வரப் போகிற மருமகனும் கம்யூனிஸ்ட்டாமே?''

முரளி அசிரத்தையுடன் தலையை அசைத்தான். ஜட்ஜ் தொடர்ந்து பேசினார்: ''கலியாணத்தைப் பண்ணி மகளையும், மருமகனையும் 'ஹனிமூனை' அநுபவிக்கச் சீனாவுக்கே அனுப்பலாம்!'' இவ்வாறு கூறிவிட்டுக் கலகலவென்று சிரித்தார். பேச்சை வேறு பக்கம் திருப்ப எண்ணினான் முரளி.

''உங்களுடைய பணத்தை இன்னும் ஆறு மாதத்தில் திரும்பத் தந்துவிடுகிறேன்'' என்றான்.

''டோன்ட் ஒர்ரி.... நீங்கள் திருப்பித் தருவதைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம், மிஸ்டர் முரளி. பத்திரிகை முன்னேறினால் சரிதான். இப்போது எப்படியிருக்கிறது?''

''அப்படியேதான்'' என்றான் முரளி, அசதியுடன்.

''சீனாக்காரன் செய்தி வந்த பிறகுமா?''

''இப்போது சீனச் சண்டை பற்றிய செய்திகளால் பத்திரிகையின் விற்பனை உயர்ந்திருக்கிறது. பத்திரிகையின் விற்பனைக்காகச் சீனாக்காரன் எல்லையில் நின்று கொண்டேயிருக்க முடியுமா?'' என்றான் முரளி விசனத்துடன்.

அன்று கிளப்பிலிருந்து 'பாரத மணி'க் காரியாலயத்துக்கு முரளி திரும்பிய போது இரவு எட்டு மணியாகி விட்டது. அவனுக்காகச் சாரதா அங்கு காத்திருந்தாள். அவனுடைய பதற்றத்தையும், பரபரப்பையும் கண்டு திகைத்தாள்.

''எனக்கு என்னவோ பயமாயிருக்கிறது. சிவராமன் முன்போலில்லை'' என்றாள் சாரதா.

சாரதாவின் குரலில் தொனித்த கவலையையும், அக்கறையையும் முரளி கவனித்துப் பரிதாபப்பட்டான்.

# கொஞ்சுமிளம் தென்றலோ, குலவ வரும் மல்லிகையோ!

கம கமக்கும் மல்லிகை மணம். இளமை கொழிக்கும் மேனியெழில். இரண்டையும் உங்களுக்கு வழங்கவே ஜேய் அழகு சோப். வில்லை கரைந்தாலும் சுகந்தம் குறையாத அதன் மென்மை நுரை உங்கள் சருமத்திற்கு நேயமானது. உங்கள் பைந்தளிர் மேனி என்றும் பதினாறாகப் புதுமையுடன் பொலிய உபயோகியுங்கள் ஜேய்—ஜிகினாத் தாளுறை தரித்த ஒரே அழகு சோப்!




**உங்கள் புத்தெழில் பெருக ஜேய் அழகு சோப் மணங்கவர் மல்லிகை மணம் கமழ்வது.**

**டாடா** தயாரிப்பு.

''அவனுக்கு இப்போது என்ன கவலே?'' என்று கேட்டான்.

''கட்சியைப் பற்றிய கவலேதான். இரண்டு நாட்களுக்குமுன் நரேந்திர போஸும், குர்னும் சிங்கும் தற்கொலே செய்து கொண்டதாகச் செய்தி வந்த பிறகு சிவராமன் இன்னும் மோசமாகி விட்டார். கட்சியில் சில மாறுதல் களேச் செய்ய வந்த தலேவர்களில் இரண்டு பேர் போய் விட்டதற்காக இவர் இப்படிக் கலங்குவானேன்? துணிவும், தைரியமும் உள்ள பழைய சிவராமன்தான இவர்?'' என்ருள் சாரதா.

''நேரடியாக எதிர்ப்பவனேப் பற்றி அஞ்ச வேண்டியதில்லே. எத்தனே பேர் வந்தாலும் சிவராமன் சமாளிப்பான். ஆனல் சதியை எதிர்க்க முடியுமா?''

''நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?''- பதற்றத்துடன் கேட்டாள் சாரதா.

''கம்யூனிஸ்ட் கட்சித் தலேவர்கள் இருவரின் மரணமும் தற்கொலே என் பதை நீ நம்புகிருயா?''

''பின்னே?''

''கம்யூனிஸ்ட் கட்சியில் களேஎடுப்பு நடக்கிறது. கட்சியின் கொள்கைக்கு எதிராக உள்ளவர்களேக் கட்சி ஒழித் துக் கொண்டிருக்கிறது.''

''ஐயோ.... அப்படியானல்...?'' — மேலே பேச முடியாமல் பயத்தினல் விழி பிதுங்க முரளியை உற்றுப் பார்த் தாள் சாரதா. அவளுடைய கண் களில் தோன்றிய பீதியையும், கலவரத் தையும் கண்டு பரிதாபம் கொண்டான், முரளி. அவளுடைய கண்கள் கலங் கின. உதடுகள் அழுவதற்குத் தயா ராகத் துடித்துக் கொண்டிருந்தன. சோம்பிக் களே இழந்துவிட்ட அவ ளுடைய முகத்தைப் பார்த்துப் பார்த்து மனம் நெகிழ்ந்தான் முரளி.

கல்லூரியில் படித்த நாட்களில் அந்த முகத்தைப் பார்த்துப் பார்த்துத் தான் உற்சாகமடைந்தான். அவ ளுடைய பேச்சும், பார்வையும் அவ னுடைய இதயத்தில் நிகழ்த்திய உணர்ச் சிப் புதுமைகளுக்கு அளவேது?

ஆனல் அத்தனேயும் வெறும் கன வாய்க் கற்பனேயாய்ப் போய்விட்ட பிறகு...

எங்கிருந்தாலென்ன? அவள் முகம் மலர்ந்திருக்கட்டுமே. இன்று அவளுக் கெதிரே முரளி படும் ஊமைத் துக் கத்தை அவள் உணரவேயில்லே. அதை அவன் அவளுக்கு உணர்த்தவும் இல்லே. அவனுக்கு எதிரே இருந்து கொண்டு, அவள் வேறொருவனுக்காகக் கண் கலங்குகிருள்.

''சிவராமனேக் கட்சியை விட்டு விலகிவிடச் சொல்லேன்'' என்று யோசனே கூறினன் முரளி.

''அவர் சம்மதிக்க வேண்டுமே.''

''எப்போது கட்சியின் போக்கி லிருந்து இவன் சிந்தனே மாறுபட்டு விட்டதோ, அதில் ஒட்டிக் கொண் டிருப்பதில்தான் என்ன நன்மை? கட்சியிலிருந்து விலக இது நல்ல சந் தர்ப்பம்.''

''நீங்கள் சொல்லுங்கள். கேட் டாலும் கேட்பார்'' என்ருள் சாரதா, சிறிது நம்பிக்கையுடன்.

''உன்னுடைய சொல்லுக்கு இல் லாத மதிப்பையா எனக்குக் கொடுத்து விடப் போகிருன்?'' என்ருன் முரளி, சிரித்துக் கொண்டே.

சாரதாவின் முகத்தில் மலர்ச்சி தோன்றியது. நாணம் கண்களில் வட்ட மிட்டது. அந்த அழகை, நிறைந்த உள்ளத்தோடு பூரணமாக ரசித்தான் முரளி.

''சொல்லிப் பார்க்கிறேன்'' என்று கூறிக் கொண்டே நாற்காலியிலிருந்து எழுந்தாள் சாரதா.

''இது நல்ல சந்தர்ப்பம். சிவராம னின் உள்ளம் கலங்கியிருக்கிறது. இப் போது அவன் மனத்தை மாற்றுவது எளிது.''

''என்னுடைய முதல் வேலே, கட்சியி லிருந்து அவரை விடுவிப்பதுதான்'' என் ருள் சாரதா.

''நீங்கள் இருவரும் கட்சியிலிருந்து விலகிய பிறகு எனக்கு ஓர் உதவி செய் வீர்களா?'' என்று கேட்டான் முரளி.

சாரதா வியப்புடன் அவனேப் பார்த் தாள். ஒரு குழந்தையைப் போல் மேஜையில் கையை ஊன்றிக் கொண்டு கண்களே அகல விரித்து அவனே விழுங் கினள். ஒரு கணம் முரளியின் மனம் அந்தப் பிடியில் சிக்குண்டு படபடத் தது. எல்லாம் ஒரு கணம்தான். மறு கணம் நிதானமடைந்து விட்டது.

''நீங்கள் இருவரும் 'பாரதமணி'ப் பத்திரிகைக்கு வந்துவிட வேண்டும்'' என்ருன்.

சாரதா, மனம் நிறைந்து சிரித் தாள். அந்தச் சிரிப்பு அந்த அறை முழுவதும் மணம் பரப்பியது. முரளி அவளேயே ஆவலோடு உற்றுப் பார்த் தான்.

''அப்பாவும் அடிக்கடி இதைத் தான் சொல்கிருர். கட்சியை விட்டு விலகி நிம்மதியாக உங்களோடு இந்தப் பத்திரிகையை நடத்தும்படி தான் எங்கள் இருவரிடமும் சொல்லிக்கொண் டிருக்கிருர்.''



''என்னய்யா இது? பழைய 'ஜோக்'கைக் கொண்டு வந்து கொடுத்து அச்சில் போடுங்கிறீங்களே?''

''இனி உலகத்திலே புதிய 'ஜோக்'குங்கிறது இல்லே'ன்னு உங்க பத்திரிகையிலே தானே 'துணுக்கு' வெளியிட்டிருந்தீங்க!''

- ''தழல்''

''இப்போது நீ என்ன சொல்கிறாய்?''

''கட்சியிலிருந்து விலகி உங்களிடமே வந்து சேர்ந்து விடுகிறோம்'' என்றாள் சாரதா, உற்சாகத்துடன்.

சாரதாவை அவளுடைய வீட்டில் கொண்டுபோய் விடுவதற்காக முரளியே காரை ஓட்டிச் சென்றான். அவளை அவளுடைய வீட்டில் விட்டு விட்டுத் திரும்பிய போது 'பாரதமணி'க் காரியாலயத்தில் சிவராமன் முரளிக்காகக் காத்திருந்தான்.

''இப்போதுதான் சாரதாவை வீட்டில் கொண்டு போய் விட்டு விட்டு வருகிறேன்'' என்றான் முரளி.

''எங்கே வந்தாள்?''

''உன்னைப் பற்றிச் சொல்லத்தான்.''

''என்னைப் பற்றியா?'' — வியப்புடன் முரளியை உற்றுப் பார்த்தான் சிவராமன்.

''உன்னைக் கட்சியிலிருந்து விலகும்படி நான் கேட்டுக் கொள்ள வேண்டுமாம்'' என்றான் முரளி.

சிவராமன் இலேசாகச் சிரித்தான். பிறகு சொன்னான்: ''கட்சியிலிருந்து விலகுவது அவ்வளவு சுலபமல்ல; விலக் விடமாட்டார்கள். கட்சிக்கும் எனக்குமுள்ள உறவு எவ்வளவு அந்தரங்கமானது, நெருக்கமானது என்பது தான் உனக்குத் தெரியுமே.... முரளி, என்னை அறியாமலேயே தாய்நாட்டுக்கு ஒரு பெரிய துரோகம் செய்து விட்டேனோ என்றுதான் அஞ்சுகிறேன்.''

முரளி, வியப்புடன் சிவராமனையே பார்த்துக் கொண்டிருந்தான்.

''எதைச் சொல்லுகிறாய்?''—முரளி கேட்டான்.

''சீனாவிலிருந்து வரும் போது மாஸேதுங், ஒரு ரகசியக் கடிதத்தை வேதமூர்த்தியிடம் ஒப்படைக்கும்படி என் மூலமாக அனுப்பி வைத்தார். அந்தக் கடிதத்தில் இந்த நாட்டின் பாதுகாப்புக்குக் குந்தகமான விஷயம் இருந்திருக்குமோ என்று இப்போது தான் சந்தேகப்படுகிறேன்'' என்றான் சிவராமன், வருத்தத்துடன்.

''கடிதத்தை நீ பிரித்துப் பார்க்கவில்லையா?''

''பார்த்தேன். ஒன்றும் புரியவில்லை. ஏதோ இரகசிய மொழியில் எழுதியிருந்தது. எனக்கு அப்போது சந்தேகம் வரவில்லை. கட்சி சம்பந்தப்பட்ட செய்தி என்று நம்பினேன்.''

''கட்சித் தலைவர்கள் இருவரின் மரணம் பற்றி மேற்கொண்டு ஒரு விவரமும் இல்லையே?'' என்று கேட்டான் முரளி.

''தற்கொலைதான் என்கிறார்கள். ஆனால் அவர்கள் ஏன் தற்கொலை செய்து கொள்ள வேண்டும் என்றுதான் புரியவில்லை. கோழையைப் போல் இறந்திருக்கிறார்களே.''

''தற்கொலை என்பதில் எனக்கு நம்பிக்கை இல்லை.''

''கொலையாகவே இருந்து விட்டுப் போகட்டும். இதனால் எல்லாம் கட்சிக்குள் ஏற்படப் போகிற மாறுதலைத் தடுத்துவிட முடியாது. கட்சியின் லட்சியங்களில் மாறுதல் ஏற்படுத்த வேண்டும் என்று முனைந்து நின்றவர்களில் இவ்விருவரும் முக்கியமானவர்கள்.''

''நீ கொஞ்சம் ஜாக்கிரதையாக இருந்து கொள். உன்னைப் பற்றிச் சாரதாவுக்கு மிகவும் கவலை'' என்றான் முரளி.

சிவராமன் சிரித்துக் கொண்டே சொன்னான்:

''ஆபத்து மனிதனுக்கு எப்போதும் வரலாம். அதற்காக அதை எண்ணித் தினமும் செத்துக் கொண்டே இருக்க முடியுமா? தலைவர் வேதமூர்த்தியோடு சீக்கிரமே ஒரு பலப் பரீட்சை நடத்தப் போகிறேன். என் பக்கத்திலும் நிறைய ஆதரவாளர்கள் இருக்கிறார்கள். கட்சியைச் சீர்ப்படுத்தியேதிருவேன், முரளி.''

''எதிரி எதிரே வந்தால் சமாளிக்கலாம். பின்னால் ஒளிந்திருந்தால்?''

''இதோ...'' என்று கூறிக்கொண்டு இடுப்பில் ஒளித்து வைத்திருந்த சிறு கைத் துப்பாக்கியை எடுத்துக் காட்டினான் சிவராமன்.

முரளி திகைப்புடன் ரிவால்வரை முறைத்துப் பார்த்தான்.

# துள்ளும் குழந்தைகள் நன்கு வளர்ந்திட
# ருசித்துப் பருகட்டும் போர்ன்விடா!

ஓடி விளையாடும் குழந்தைகள்
உணவிலிருந்து பெறும் சக்தியை
பள்ளியிலும் விளையாட்டிலும்
வெகுவாக இழந்து விடுகின்றனர்.
அவர்களுக்கு தேவையான
இச்சக்தியை போர்ன்விடா
அளிக்கிறது. கோகோ, பால்,
மால்ட், சர்க்கரை இவை
இனிதே சேர்ந்த போர்ன்விடா,
ஒரு காட்பரிஸ் தயாரிப்பு.




**சக்திக்கும் வலிமைக்கும்—**
**மற்றும் தீஞ்சுவைக்கும் *காட்பரிஸ்* போர்ன்விடா!**

BJ4664 TAM

''எதற்கும் நான் தயார். முரளி, உன் மீது எனக்கு நம்பிக்கை உண்டு. அம்மாவை நீ பார்த்துக் கொள்ள வேண்டும்'' என்றான் சிவராமன்.

அவன் கண்கள் கலங்கின.

''அசட்டுத்தனமாக நடந்து கொள்ளாதே, சிவராமன்.''

''இந்த ஆயுதம் என்னிடம் இருக்கும் வரை என்னை எவனும் நெருங்க முடியாது. வேதமூர்த்திக்கே இது சவால் கொடுக்கும். முரளி, ஒரு கட்சி, நாட்டுக்குத் துரோகம் செய்வதைவிட, அந்தக் கட்சி அழிந்தே போகலாம். ஆனால் கம்யூனிஸ்ட் கட்சி அழிந்து போவதை நான் விரும்பவில்லை. அதனுடைய கொள்கைகளை நான் மதிக்கிறேன், வணங்குகிறேன். அவற்றில் ஊறித் திளைத்திருக்கிறேன். ஆனால் அந்தக் கொள்கைகளுக்காக நான் என் தாய் நாட்டை பீக்கிங்குக்கு அடிமையாக்க விரும்ப வில்லை'' என்று கூறிவிட்டு ரிவால்வரை இடுப்பில் செருகி மறைத்துக் கொண்டு எழுந்தான் சிவராமன்.

''உன்னுடைய லட்சியப் போராட்டத்துக்கிடையில் சாரதாவை மறந்து விடாதே'' என்றான் முரளி.

''அவளும் இந்த லட்சியப் பாதையில் நடை போடுபவள்தானே. என்னோடு கைகோத்து நடப்பாள்'' என்று கூறிவிட்டு வேகமாக அந்த அறையை விட்டு வெளியேறினான் சிவராமன்.

அவன் போவதையே திகைப்புடன் பார்த்துக் கொண்டு நின்றான் முரளி. ஏதோ இனம் புரியாத பயம் முரளியின் நெஞ்சை வருடியது.

'**பா**ரத மணி'க் காரியாலயத்தை விட்டு வெளியேறிய சிவராமன் சைக்கிளில் கம்யூனிஸ்ட் கட்சிக் காரியாலயத்தை நோக்கிச் சென்றான். அங்கு அவனுக்காக நல்லதம்பி காத்திருந்தான். சிவராமனைக் கண்டதும் நல்லதம்பி ஒரு கவரை எடுத்துக் கொடுத்தான்.

''என்னது ?'' — அசிரத்தையுடன் கேட்டான் சிவராமன்.

''தலைமைக் காரியாலயத்திலிருந்து வந்தது. எனக்கு வந்த உத்தரவோடு உன் பெயருக்கு இதுவும் இருந்தது'' என்றான் நல்லதம்பி.

''உனக்கு என்ன உத்தரவு வந்திருக்கிறது ?''

''முதலில் உன்னுடைய கடிதத்தைப் படி. பிறகு சொல்கிறேன்.''

சிவராமன் கடிதத்தைப் பிரித்து விளக்கொளியில் படித்தான். அவனுடைய முகம் கோபத்தினால் சிவந்தது. கடிதத்தைக் கிழித்துக் குப்பைக் கூடையில் விசினான்.

''அந்த உத்தரவின் நகல்தான் எனக்கும் வந்தது'' என்றான் நல்லதம்பி, நிதானமாக. சிவராமன் அவனை முறைத்துப் பார்த்தான்.

''உத்தரவுப்படி, நீ மாநிலத் தலைமைப் பதவியை ராஜினாமாச் செய்வதாக எழுதிக் கொடு'' என்றான் நல்லதம்பி.

''தலைமைப் பதவியை எனக்கு வேதமூர்த்தி அளிக்கவில்லை. நான் தேர்ந்தெடுக்கப்பட்டவன். என்னைத் தேர்ந்தெடுத்தவர்கள் சொல்லட்டும் : ராஜினாமாச் செய்கிறேன்'' என்றான் சிவராமன்.

''இது தலைமைக் காரியாலயத்தின் உத்தரவு.''

''தெரியும். இந்த மாதிரியான சர்வாதிகாரத்தனம் இனிப் பலிக்காது, நல்ல தம்பி! ஏன், தலைவர் வேதமூர்த்தி கூடக் கட்சி அங்கத்தினர்களின் சிந்தனைகளை மதித்தால்தான் தலைமைப் பதவியில் நீடிக்க முடியும்!'' என்று கூச்சலிட்டான் சிவராமன்.

''மாநிலத் தலைவரைப் பதவியிலிருந்து நீக்க அகில இந்தியத் தலைவருக்கு அதிகாரம் உண்டு'' என்றான், நல்லதம்பி.

''அகில இந்தியத் தலைவரையே பதவியிலிருந்து இறக்க அங்கத்தினர்களுக்கு அதிகாரம் உண்டு.''

''உன்னுடைய வாக்குறுதிகள்...?''

''உம்.... மறந்துவிடவில்லை. கட்சிக்காக உயிரையே கொடுப்பதாக வாக்களித்திருக்கிறேனே தவிர, ஒரு தனி மனிதனின் அதிகார வெறிக்கு அடிமையாக இருப்பதாக வாக்களிக்கவில்லை.''

''வேதமூர்த்திக்கு எதிராக நீ நடந்து கொள்வது நல்லதில்லை.''

''தலைவரை எதிர்க்கவில்லை. அவரது சில சிந்தனைகளைத்தான் எதிர்க்கிறேன்.''



இசைத் தட்டுக்களைத் தணிக்கை செய்ய பஞ்சாபில் ஒரு சென்சார் போர்டு ஏற்படுத்தப் போகிறார்கள். இப்படிச் செய்வது இதுதான் இந்தியாவில் முதல் தடவை. காரவான் - 'பாலி'

''நம்முடைய கட்சியின் லட்சியம் நிறைவேறும் சந்தர்ப்பம் நெருங்கிக் கொண்டிருக்கும் போது எல்லோரும் தலைவருக்குப் பணிவதுதான் நல்லது.''

''அப்படி என்ன சந்தர்ப்பம் இப்போது இங்கே உருவாகி விட்டது ?''

''சீனப் படை உள்ளே நுழைந்து விட்டதே. இதுகூடவா உனக்குப் புரியவில்லை?'' என்று கோபத்துடன் இரைந்தான் நல்லதம்பி.

''தாய்நாட்டுக்குத் துரோகம்செய்யக் கட்சி முற்பட வேண்டும் என்று சொல்கிறாயா ? கட்சிக்காரர்கள் அனைவரையும் தேசத் துரோகிகள் என்னும் பழியை ஏற்கச் செய்யவா ? நல்ல தம்பி ! எனக்கு எல்லாம் தெரியும் ! சீனாவிலிருந்து நான் வரும் போதே, சதியும் என்னோடு இங்கே புகுந்து விட்டது. நம் கட்சி, இந்த நாட்டின் நலனைத்தான் நாட வேண்டுமே தவிர, துரோகம் செய்யக் கூடாது'' என்று அழுத்தமாகச் சொன்னான் சிவராமன்.

''நாம் ஆட்சியைக் கைப்பற்றுவது நல்லதுதானே ?''

''அதை நாமேதான் செய்ய வேண்டுமே தவிர சீனாக்காரன் உதவியோடு அல்ல. பின்னர் ஆட்சி நாம் செலுத்தினாலும் அதிகாரம் பீக்கிங்கில்தான் இருக்கும்.''

''இது பற்றி முடிவு எடுக்க வேண்டியது கட்சியின் தலைமைப் பீடமே தவிர, நாமல்ல.''

''சரியான முடிவு எடுக்காத போது தலைமைப் பீடத்தையே மாற்றிவிட வேண்டியதுதான்'' என்று சொல்லிவிட்டு அலட்சியமாக நல்லதம்பியைப் பார்த்துச் சிரித்தான் சிவராமன்.

நல்லதம்பியின் கண்கள் கோபத்தால் சிவந்தன. பற்களைக் கடித்துக் கொண்டு சிவராமனை நெருங்கி வந்தான். சிவராமனின் கை, தானாக இடுப்பிலிருந்த ரிவால்வரைத் தொட்டுப் பார்த்துக் கொண்டது.

சிவராமனின் முகத்துக்குப் பக்கத்தில் குனிந்தான் நல்லதம்பி.

'' நீ கட்சியின் துரோகி.... '' என்றான்.

''நீ தாய்நாட்டின் துரோகி...'' என்று முகத்தை நிமிர்த்தி நல்லதம்பியை முறைத்துப் பார்த்தவாறு தெளிவாகச் சொன்னான் சிவராமன்.

அந்தச் சமயத்தில் அவர்கள் இருந்த அறை வாசலில் ஏதோ ஓசை கேட்கவே சிவராமன் திடுக்கிட்டுத் திரும்பினான். பின்னால் யாரோ நின்று கொண்டிருப்பதைக் கண்டு துணுக்குற்றான். அந்த அறையின் மங்கிய வெளிச்சத்தில் அவனை இன்னாரென்று அடையாளம் கண்டு கொள்ளுமுன் சிவராமனின் தலையில் ஏதோ ஒன்று பலமாகத் தாக்குவது போலிருந்தது. மறுகணம், சிவராமன் நிலைகுலைந்தான். தலையிலிருந்து இரத்தம் பீறிட்டு முகத்தில் வழிந்து கண்களை மறைத்தது. எங்கும் இருள் சூழ்ந்தது.

* * *

அன்று வேலை முடிந்து 'பாரத மணி'க் காரியாலயத்திலிருந்து முரளி புறப்பட்ட போது, இரவு இரண்டு மணியாகி விட்டது. களைப்புடன் வீட்டுக்குச் சென்றவன் வெகு நேரம் வரை தூக்கம் வராமல் திணறினான். பல நினைவுகள் மனத்தில் புரண்டு நெளிந்தன. சாரதாவைப் பற்றியும், அவளைச் சந்தித்தது பற்றியும் எண்ணி எண்ணிக் குமைந்து கொண்டிருந்தான். யாரிடமும் சொல்லி ஆறுதல் பெற முடியாத ஊமைத் துக்கத்தை நெஞ்சுக்குள்ளேயே புரட்டிப் புரட்டிப் போட்டு வேதனை அடைந்தான்.

இரவு வெகுநேரத்துக்குப் பிறகு உறங்கினான். காலையில் கதவை யாரோ படபடவென்று பலமாகத் தட்டும் ஓசை கேட்டுத் திடுக்கிட்டு விழித்தான். தூக்கம் முழுவதும் கலையாத நிலையில் கண்களை இடுக்கிக் கொண்டு எழுந்து கதவைத் திறந்தான். வாசலில் சாமிநாதன் நின்று கொண்டிருந்தான்.

''சிவராமன் செத்துப் போய்விட்டார் சார் ! கம்யூனிஸ்ட் கட்சிக் கட்டடத்துக்குப் பக்கத்தில் விழுந்து கிடக்கிறார்'' என்றான் சாமிநாதன் பரபரப்புடன். செய்தியைக் கேட்டு அதிர்ந்து விட்டான் முரளி. சற்று நேரம் பேச இயலாமல் விழித்தபடி நின்றான்.

''இரவு முழுவதும் காரியாலயத்தில்தான் நான் தங்கியிருந்தேன். காலையில் வீட்டுக்குப் போய்க் கொண்டிருந்த போது கட்சிக் கட்டடத்துக்குப் பக்கத்தில் கூட்டமாயிருந்தது. அருகில் போய்ப் பார்த்தேன். சன்னல் பக்கத்தில் மண்ணில் சிவராமன் விழுந்து கிடந்தார். மாடியிலிருந்து விழுந்து தற்கொலை செய்து கொண்டதாகக் கட்சிக்காரர்கள் சொல்லிக் கொண்டிருந்தார்கள்'' என்றான் சாமிநாதன்.

சில விநாடிகளில் முரளியின் கார் கம்யூனிஸ்ட் கட்சிக் காரியாலயத்தை நோக்கி ஓடிக் கொண்டிருந்தது. காரின் வேகத்தோடு முரளியின் இருதயம் போட்டி போட்டுக் கொண்டிருந்தது.

(தொடரும்)

ஜோதிநாத் பாபுவுக்கு அந்த ஆண்டின் இலக்கியத்துக்கான நோபல் பரிசு கிடைத்திருந்தது. அவருடைய 'கண்ணீர்ப் பூக்கள்' கவிதைத் தொகுதி உலகத்தின் பல்வேறு மொழிகளில் அவசரம் அவசரமாக மொழி பெயர்க்கப்பட்டுக் கொண்டிருந்தது. ஆங்கிலத்தில் வெளிவந்திருந்த முதற்பதிப்பின் ஆயிரக்கணக்கான பிரதிகள் அனைத்தும் தீர்ந்து போய் அடுத்த பதிப்புக்கான அறிவிப்புகளும் விளம்பரங்களும் பத்திரிகைகளில் தொடர்ந்து வெளிவந்து கொண்டிருந்தன. நாடெங்கிலுமிருந்த இலக்கியக் கழகங்களாலும் பிரமுகர்களாலும் அவர் போற்றிப் பாராட்டப்பட்டுக் கொண்டிருந்தார்.

ஸ்வீடனுக்குத் தம்முடைய மனைவியுடன் நேரில் சென்று அந்த ஆண்டின் இலக்கியத்துக்கான பரிசைப் பெற்றுக் கொண்டு திரும்பி வந்து ஒரு வாரமே ஆகியிருந்தது. அவர் ஸ்வீடனிலிருந்து தாயகம் திரும்பிய நாளன்று — அவருடைய மனைவியுடன் விமானத்திலிருந்து இறங்கிக் கொண்டிருக்கும் புகைப்படத்தைப் பிரசுரித்து, 'உலகின் மாகவி' என்று தலைப்பிட்டுப் பெரிய பெரிய பத்திரிகைகள் செய்தி வெளியிட்டிருந்தன.

அந்தப் பரபரப்பான நாட்களில் ஒரு நாள் காலைப் பொழுதில் அவருக்கு வந்திருந்த கடிதங்களில் 'தனிப்பட்டது' என்று எழுதப்பட்ட சிலவற்றைத் தனியே பிரித்தெடுத்து அவருடைய நேரடிப் பார்வைக்கு வைத்து விட்டுச் சென்றான் அவரது காரியதரிசி. அவற்றைப் பார்த்துக் கொண்டே வந்தவர், கடைசியாக இருந்த கனமான கடிதத்தை எடுத்து ஒரு விநாடி உற்றுக் கவனித்தார். எந்த ஒரு கிராமத்தில் கிராமத்துக்கே உரிய சகலவிதமான அழகுகளோடு அவருக்கே உரியதொரு தனி அழகும் குடியிருக்கிறதோ, அந்தக் கிராமத்திலிருந்து அது வந்திருந்தது. 'என் அன்புத் தெய்வத்துக்கு' என்று தொடங்கி அவருக்கு எவள் எழுதுவாளோ—அவள்தான் அதை எழுதியிருந்தாள்!

அதெல்லாம் ஒரு நளினமான பழையகனவு!

ஜோதிநாத் பாபு கண்களை மூடிக்கொண்டார். அங்கே கங்கா நின்று சிரித்துக்கொண்டிருந்தாள். அவளுடைய இதழ்கள் கனிந்து நகை செய்தபோது மல்லிகைப் பூக்கள் மலர்ந்து கொண்டிருந்தன. சொல்லப் போனால் அவளே ஒரு மல்லிகைப் பூதான். கங்கா — அவள் முறுவல் அரும்பும் முகம், ஒடித்துக் கொண்டு போய்விடலாம் போல் அத்தனை மெல்லிய அவளுடைய கைகள், கவிதைகளுக்கு அடியெடுத்துக் கொடுக்கும் கண்களும், கழுத்துப் பிரதேசங்களும், வெண்மையும் புதுச் சிவப்பும் கலந்த ஒருமையான



அட்டைப் படக்கதை

நிறத்தில் வாய்ந்த அவளுடைய மென்மை யான மேனி —

ஓ! அதெல்லாம் ஒரு நவீனமான பழைய கனவு! எப்போதோ இளம் பருவத்தில் நெருங்கியும் நெருக்கியும் கேட்டுக் கேட்டு அனுபவித்து உடல் சிலிர்த்ததோர் இனிய பழம் பாடல்!

ஜோதிநாத் பாபு விழிகளைத் திறந்தார். கடிதத்தைப் பிரித்துப் படித்தார்:

என் அன்புத் தெய்வத்துக்கு,

தொலை தூரத்தில் இருந்தபடி உங்களைத் தொழுவதையும், உங்களுக்காகத் தொழு வதையுமே வாழ்க்கையாக்கிக் கொண்ட ஓர் அபலை எழுதுவது:

எட்டு வருடங்களுக்குப் பிறகு உங்க ளுக்கு இதை எழுதும்போதுகூட என் நினை வுகள் சிலிர்க்கின்றன. நம்முடைய கிரா மத்தில் — பசுமை படர்ந்த அந்த வயல் வெளிகளில் பெருகிச் செல்லும் அந்த ஆற் றங்கரைகளில் நேரத்தை, பொழுதை, மனி தர்களின் கூரிய, கொடிய பார்வைகளைப் பொருட்படுத்தாமல், உங்களுடன் சுற்றித் துள்ளித் திரிந்த மகிழ்ச்சியான நாட்கள் இப்பொழுதும் என் கண்ணெதிரில் நிற் கின்றன. இந்த ஏழையைப் பற்றிய நினை வில் ஒரு துளியாவது உங்களுக்கு இருக் கிறதா?

நீங்கள் என்னை மறந்து விட்டாலும் நான் உங்களை மறக்க முடியாது. ஏனென் றால் — உங்களுடைய கண்களுக்கு உலகம் முழுக்கத் தெரிகிறது. என் கண்களுக்கு நீங்கள் ஒருவர் மட்டுமே தெரிகிறீர்கள்.

எட்டு வருஷங்களுக்கு முன்னர் நீங்கள் எனக்கு இல்லையென்று முடிவானபோதே நான் இறந்திருக்க வேண்டும். இறக்க வில்லை. இப்போதும் இறந்து போக விரும்பவில்லை. ஏன் தெரியுமா? எனக்கு விடிகின்ற ஒவ்வொரு நாளும் உங்களுடைய நாள். என் வீட்டில் உதயமாகிற ஒவ் வொரு பொழுதும் உங்களுடைய பொழுது. உங்களை எண்ணி மகிழ அல்லது உருக எனக்கு வாய்க்கும் நாட்களை வேண் டாமென்று உதறித் தள்ளி விட்டு உயிரை விட்டுவிட எனக்கு மனம் வருமா?

இப்போது நான் கிராமத்துப் பெண்கள் உயர்நிலைப் பள்ளியிலேயே ஆசிரியையாகி இலக்கியம் கற்பித்துக்கொண்டிருக்கிறேன். பத்து நாட்கள் கழித்து எங்கள் பள்ளியின் ஆண்டு விழா நடைபெற விருக்கிறது. 'இந்தக் கிராமத்திலேயே பிறந்து வளர்ந்து இப்போது உலகப் புகழ் பெற்றிருக்கும் பிரபல கவிஞர் ஜோதிநாத் பாபு நம் முடைய ஆண்டு விழாவுக்கு வருகை புரிந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்'— என்று எங்கள் பள்ளித் தலைமை ஆசிரியை அடிக்கடி அங்கலாய்த்துக் கொள்கிறார். பள்ளி இலக்கிய மன்றத்தின் துணைத் தலைவி என்ற முறையில் உங்களை எப்படி யாவது இங்கு வரவழைத்து விடுவதாகத் தலைமை ஆசிரியையிடம் நான் வாக்குக் கொடுத்திருக்கிறேன். இத்துடன் தலைமை ஆசிரியையின் வேண்டுதல் கடிதத்தையும் இணைத்து அனுப்பி யிருக்கிறேன்.

எட்டு வருஷங்களுக்குப் பிறகு — உங்களை மறுபடியும் ஒரு முறை கண் குளிரத் தரி சிக்க வேண்டும் என்று எனக்கும் ஆசை யாக இருக்கிறது. என் ஆசை நிறை வேறுமா?

என்னுடைய இன்னோர் ஆசையையும் உங்களிடம் சொல்லி விடுகிறேன். இதைப் படித்துவிட்டு நீங்கள் சிரிக்கக் கூடாது. நீங்கள் இங்கு வரும்போது 'கண்ணீர்ப் பூக்கள்' கவிதைத் தொகுதியில் ஒன்றை எனக்காகக் கொண்டு வாருங்கள். அதில் என்னைப் பற்றி — என் நினைவைப் பற்றி இரண்டு வரிகளாவது எழுதிக் கையெழுத் திட்டுத் தாருங்கள். இதுவரை எதையும் உங்களிடம் யாசித்ததில்லை. இப்போது இதை யாசிக்கிறேன். செய்வீர்களா?

—உங்கள் நினைவில் வாழும் உங்களுடையவள்

என்று எழுதிக் கங்கா கையெழுத்திட் டிருந்தாள். கடிதத்தைப் படித்து முடித்த கவிஞருடைய கண்கள் கலங்கியிருந்தன. தன் காரியதரிசியை அழைத்து, பள்ளித் தலைமை ஆசிரியையின் கடிதத்தை மட்டும் கொடுத்து, அழைப்பு ஏற்கப்பட்டது என் றும், நிகழ்ச்சி உறுதி செய்யப்பட்டதென்

# வார்த்தை வரம்—

மு. மேத்தா—



றும் தந்தி கொடுத்து விடுமாறு கூறினார். அநேகமாக அதே சமயத்தில் விசுவபாரதி பல்கலைக் கழகம் நடத்தும் பாராட்டு விழாவில் கலந்து கொள்ள வேண்டியிருக்கும் என்பதைக் காரியதரிசி நினைவு படுத்திய போது, ''பல்கலைக் கழக நிகழ்ச்சியை ஒத்தி வைக்கச் சொல். அல்லது ரத்து செய்துவிடு'' என்று கூறிவிட்டுக் கவிஞர் ஜோதிநாத் பாபு நாற்காலியில் சாய்ந்து, கண்களை மூடிக் கொண்டார்.

அங்கே—

கங்கா நின்று சிரித்துக் கொண்டிருந்தாள்!

பக்கத்து நகரத்துக்கு விமானத்தில் வந்திறங்கிய கவிஞர் ஜோதிநாத் பாபுவைக் கிராமத்துக்குக் காரில் அழைத்து வந்தார்கள். அப்படி அழைத்து வருவதற்காகக் கங்காவும் தலைமை ஆசிரியையுமே போயிருந்தார்கள். விமான நிலையத்தில் மாலை மரியாதை எல்லாவற்றிலிருந்தும் ஒரு வழியாகத் தப்பிக் காருக்குள் வந்து அமர்ந்தபோது கங்காவைப் பார்த்து, ''நலமாக இருக்கிறீர்களா? கிராமத்தின் பள்ளிச் சூழல் மனத்துக்கு மகிழ்ச்சி தருகிறதா?'' என்று பன்மையில் பொதுவாக விசாரித்து விட்டுத் திரும்பிக்கொண்ட கவிஞர் அதன் பிறகு அவளுடன் பேசவேயில்லை. தலைமை ஆசிரியையோடும் தம்முடைய காரியதரிசியோடும் ஏதேதோ பேசிக்கொண்டு வந்தார். அவளை அவர் தவிர்க்க முயல்வது போலத் தோன்றியது.

விழா நிகழ்ச்சிகளெல்லாம் முடிந்து தலைமை ஆசிரியை அறைக்குத் திரும்பியதும், தலைமை ஆசிரியை கவிஞரிடம் கேட்டாள்: ''எங்கள் பள்ளி நூலகத்துக்கு உங்கள் கையெழுத்திட்ட 'கண்ணீர்ப் பூக்கள்' கவிதைத் தொகுதி யொன்றை நீங்கள் பரிசளிக்க வேண்டும்''.

ஜோதிநாத் பாபு தம் காரியதரிசியின் பக்கம் விழிகளைத் திருப்பினார். அவன் பையைத் திறந்து சில புத்தகங்களை எடுத்துக் கொடுத்தான். கவிஞர் அதில் மூன்று புத்தகங்களை எடுத்துக் கையெழுத்து மட்டும் போட்டு, இரண்டைத் தலைமை ஆசிரியையிடம் கொடுத்தார்: ''ஒன்று நூலகத்துக்கு, இன்னொன்று உங்களுக்கு.'' மற்றொரு புத்தகத்தை எடுத்து அருகில் நின்று கொண்டிருந்த கங்காவிடம் நீட்டினார். அதைப் பெற்றுக் கொண்டு புரட்டிப் பார்த்து விட்டுக் கங்கா பொதுவாகக் கேட்பதுபோல் கேட்டாள்: ''இதில் வெறும் கையெழுத்து மட்டும் போட்டிருக்கிறீர்கள். வேறெதுவுமே எழுதவில்லையே?'' அவளுடைய விழிகள் அவரிடம் எதையோ எதிர்பார்த்து நினைவுபடுத்தி வேண்டிக் கெஞ்சிக் கொண்டிருந்தன. அவர் உறுதியான குரலில் மறுத்துரைத்தார்: ''வேறெதுவும் எழுத வேண்டியதில்லை.''

இந்த நேரத்தில் அறைக்கு வெளியே கூடியிருந்தவர்களின் இரைச்சல் பலமாகக் கேட்கவே கவிஞரின் காரியதரிசியும் தலைமை ஆசிரியையும் அதைக் கவனிப்பதற்காக வெளியே சென்றார்கள். கங்கா ஆவேசத்துடன் கேட்டாள்: ''என்னைப் பற்றி எனக்காக இரண்டே இரண்டு வரிகளை எழுதித் தர உங்களால் முடியாதா? என்னுடைய சாதாரணமான இந்தச் சிறிய ஆசையைக்கூட நிறைவேற்றி வைக்க உங்களுக்கு மனமில்லையா?'' ஜோதிநாத் பாபு பதிலெதுவும் சொல்லாமல், கங்காவை — அவளுடைய ஆவேசத்தை ஒரு மூன்றாவது மனிதரைப் போல ரசித்துக் கொண்டிருந்தார். சிறிது நேரம் கழித்து உடைந்து போய்விட்ட ஒரு வீணையின் குரலோடு அவள் பேசினாள்: ''ஆமாம், என்னைப் பற்றி நீங்கள் பேசவும் மாட்டீர்கள். எனக்காக இரண்டு வரிகளை எழுதிக் கொடுக்கவும் மாட்டீர்கள். ஏனென்றால் — உங்களுடைய வார்த்தைகளை வாங்கிக் கொள்வதற்கு எவ்வளவு பணத்தை வேண்டுமானாலும் கொட்டிக் கொடுக்க இந்த உலகம் இப்போது தயாராக இருக்கிறது. அப்படிப் பட்ட விலையுயர்ந்த உங்களுடைய வார்த்தைகளை — இந்த அபலைப் பெண்ணுக்காக வீண் செலவு செய்வதை நீங்கள் விரும்புவீர்களா? சொல்லப் போனால் உங்களால் நினைவுகூர்ந்து எழுதப்படுவதற்கு என்னிடத்தில்தான் என்ன இருக்கிறது? நீங்கள் வானத்தில் மிதந்து கொண்டிருக்கிறீர்கள். நான் மண்ணில் புரண்டு கொண்டிருக்கிறேன்''—கங்கா திரும்பி நின்று கண்களைத் துடைத்துக் கொண்டாள்.

தலைமை ஆசிரியையும் காரியதரிசியும் திரும்பி வந்தார்கள். காரியதரிசி சொன்னார்: ''உங்களுடைய உறவினர்களும் நண்பர்களும் உங்களைப் பார்த்துப் பேசுவதற்காகக் காத்துக்கொண்டிருக்கிறார்கள் ஐயா.''

''அப்படியா? பார்க்கலாமே?'' கவிஞர் எழுந்து நின்றார்.

சந்திப்பு, நலவிசாரணை, பேச்சு வார்த்தை கையெழுத்து வேட்டை எல்லாவற்றையும் ஒருவாறு சமாளித்து முடித்துக் கொண்டு, பக்கத்து நகரத்திலிருந்த விமான நிலையத்தை நோக்கிக் கவிஞர் புறப்பட்டார். விமான நிலையம் வரை உடன் சென்று வழியனுப்பி வைப்பதற்காகக் கங்காவை அழைத்துக் கொண்டு தலைமையாசிரியையும் புறப்பட்டிருந்தாள். வழி நெடுகிலும் கங்கா யாரோடும் முகம் கொடுத்துப் பேசவில்லை. துருவித் துருவிக் கேட்ட தலைமையாசிரியைக்கு ''மனநிலை சரியில்லை... இல்லை...இல்லை... உடல்நிலை சரியில்லை'' என்று கங்கா தடுமாற்றத்துடன் பதில் சொல்லியிருந்தாள். திடீரென்று புதிராகி விட்ட அவளையும் அவளுடைய சோக மயமான மௌனத்தையும் தலைமையாசிரியையால் புரிந்து கொள்ள முடியவில்லை.

விமான நிலையத்தை அடைந்து விசாரித்த போது கவிஞர் புறப்படவிருந்த விமானம் ஏதோ ஒரு காரணத்தால் அன்று அரை மணி நேரம் தாமதமாகப் புறப்பட விருக்கிறது என்ற தகவல் கிடைத்தது. மற்றவர்களை அழைத்துக் கொண்டுபோய் 'லௌஞ்சில்' உட்கார வைத்து விட்டுப் பிற விவரங்களை அறிந்து வருவதற்காகக் கவிஞரின் காரிய தரிசி விமான விசாரணை ஆபீசைத் தேடி நடந்தான். குக்கிராமத்தின் தலைமையாசிரியை பிரும்மாண்டமான விமான தளத்தையும் பெரிய பெரிய விமானங்களெல்லாம் ஆகாயத்தில் பறந்து செல்லும் அதிசயத்தையும்

# உங்கள் சொந்தப் பக்குவ முறையைச் சிறப்பிப்பவை

# பிரவுன் & போல்ஸன் மற்றும்




தயாரிப்பு வகைகள்






**ரெக்ஸ் ஜெல்லி க்ரிஸ்டல்.**

ஆறு இனிய பழச் சுவைகள், விரைவில் எளிதாகத் தயாரிக்கலாம். குழந்தைகள் முதல் பெரியோர்கள் வரை யாவரும் விரும்பக் கூடியது.






**ரெக்ஸ் பேகிங் பவுடர்**

தின் பண்டங்களை மென்மையாக்க சிறிதே சேர்த்தால் போதும். கேக், பிஸ்கோத்து, பக்கோடா, பூரி, குலாப்ஜாமுன் தயாரிக்க உபயோகியுங்கள்.



**பி & பி கஸ்டர்டு பவுடர்**

மென்மையான செழுமையுடன் இனிமையானது. முட்டை கலவாதது. ஃபிர்னி, ஐஸ் க்ரீம், கீர், ட்ரைபிள் தயாரிக்க ஏற்றது ஜெல்லி மற்றும் ப்ரூட் ஸாலெட்டுடன் பரிமாறும் போது சுவை கூட்டுகிறது.









**பி & பி வெரைட்டி கஸ்டர்டு பவுடர்**

ஆறு சுவைகள், புட்டிங்குகள், பழ உணவுகள் தயாரிக்க உகந்தது.






**பி & பி ஃப்ளேவர்டு கார்ன் ஃப்ளவர்**

ஐந்து சுவைகள், இனிமை யான ஹல்வாக்கள் தயாரிக்க பாலோடு மென்மையாகக் கலக்கலாம்.






**பி & பி பேடென்ட் கார்ன் ஃப்ளவர்**

சூப்புகளையும், இறைச்சிக் குழம்பையும் இறுக்கமாக்குகிறது. காரப் பான கபாப், சமோசா, பட்டீஸ் தயாரிப்பதில் மாவுடன் சேர்க்கச் சிறந்தது. குழந்தைகளுக்கும் நோயாளிகளுக்கும் மிகவும் நல்லது.

*உங்கள் சமையல் உன்னதமாக இருக்க, உயர்ந்த சாமான்களையே உபயோகியுங்கள்*



**கார்ன் பிராடக்ட்ஸ் கோ. (இந்தியா) பிரைவேட் லிட்.**
ஸ்ரீநிவாஸ் ஹவுஸ், வாட்பி ரோடு, பம்பாய்-1. BR.

ஏகபோக விற்பனை ஏஜெண்டுகள்:
பாரி & கம்பெனி, டேர் ஹவுஸ், மதராஸ்-1,
மற்றும் அவர்களது கிளைகள்

Bensons/5200 TM

அருகில் நின்று வேடிக்கை பார்ப்பதற்காக வெளியே போயிருந்தாள்.

லௌஞ்சில், கங்காவுக்கு அவள் விரும்பிய தனிமை கவிஞருடன் கிடைத்தது. அவள் சீறினாள்: ''உங்களையே நினைத்து ஒவ்வொரு நொடியும் உங்கள் நினைவிலேயே உருகிக் கருகி இந்த வாழ்க்கையையே ஒரு பெரிய தவமாகச் செய்து கொண்டு என் உள்ளம் ஊமை அழுகை அழுது கொண்டிருப்பதை உங்களால் புரிந்து கொள்ள முடியவில்லையா?''

ஜோதிநாத் பாபு பதில் சொல்லவில்லை.

''அப்படி என்ன நான் பெரிதாக ஆசைப் பட்டு விட்டேன்? விமானத்தின் படிக்கட்டுக் களில் உங்களுக்குப் பக்கத்தில் நின்று புகைப் படம் எடுத்துக் கொள்ள வேண்டும், அது பத் திரிகைகளில் பிரசுரமாகிப் பிரபலமாக வேண் டும் என்று ஆசைப்பட்டேனா? வெளி நாட் டின் வீதிகளிலே — வரவேற்பு மண்டபங் களிலே — உங்களுடைய புகழையும் பெருமை யையும் சரி பாதியாகப் பகிர்ந்துகொண்டு உங்களோடு உங்களுடையவளாகவே உலகத் தின் கண்ணெதிரில் உலவி வரவேண்டுமென்று நான் ஆசைப்பட்டேனா? அவ்வாறு உலவி வருவதற்கு நிச்சயமாக எனக்கு உரிமை இருக் கிறது என்பதை எப்போதாவது யாரிடமா வது நான் சொல்லிக் கொண்டதுண்டா? சத்தியமாக இந்த வினாடி வரைக்கும் உங்க ளிடம் கைநீட்டி வேறெதையாவது நான் யாசித்திருக்கிறேனா? நெஞ்சைத் தொட்டுச் சொல்லுங்கள். எனக்காக என்னில் இணைந் திருக்கும் உங்களுடைய நினைவுக்காக, உங்களை எண்ணி நான் செய்யும் இந்தத் தவத்தில் எப்போதாவது சோர்வு ஏற்படும்பொழுது எனக்கு ஆறுதல் கொடுப்பதற்காக என்னைப் பற்றி என் நினைவைப் பற்றி — இரண்டே இரண்டு வரிகளை எழுதிக் கொடுக்குமாறு ஒரு தெருப் பிச்சைக்காரியைப் போல் கை நீட்டி நான் யாசித்தேன். வாய் விட்டு நான் கேட்டேன். நீங்கள் மறுத்து விட்டீர்கள். அபாக்கியவதியாகி விட்ட ஒரு பேதைப் பெண்ணுக்கு வார்த்தைப் பிச்சைகூட வழங்க விரும்பாத இந்தப் பொல்லாத மனம் உங் களுக்கு எப்போது வந்தது? இந்தக் கொடிய மனத்தை உங்களுக்குக் கொடுத்தது எது? பணமா? புகழா?''

பெண் மனத்தில் நெருப்புப் பற்றிக்கொண் டது. அந்தச் சுட்டெரிக்கும் நெருப்பின் தணலைத் தாங்கிக் கொள்ள முடியாமல் ஜோதிநாத் பாபு தவித்தார். கங்காவின் முகத்தை ஏறிட்டு நோக்கினார்.

''போதும் கங்கா. போதும் நிறுத்து. அன்பில் நெகிழ்ந்து நெகிழ்ந்து பழக்கப் பட்டுப் பலவீனப்பட்டுப் போய்விட்டவன் நான். உன்னுடைய வார்த்தைகளால் என் னைக் கொன்றுவிடாதே. என்னை நம்பு. உன் னுடைய பவித்திரமான, பரிசுத்தமான காத லையும், தியாக மயமான உன் அன்பையும் புரிந்து கொள்ள முடியவில்லையென்றால் நான் ஒரு கவியாக இருக்க முடியாது. உன்னையும் உன் புனிதமான அன்பையும் மறந்துபோனால் நான் ஒரு மனிதனாகவே இருக்க முடியாது. என்னில் நீ வாழ்கிறாய்; என்றும் வாழ்வாய். 'இரண்டே இரண்டு வரிகள் — ஏதேனும் சில வார்த்தைகள் — என்னைப் பற்றி எழுதித் தாருங்கள்' என்று நீ யாசித்தாயே—அது என்னுடைய மனத்தை எத்தனை தூரம் புண் படுத்தியிருக்குமென்று உனக்குத் தெரியுமா? இவ்வளவு காலமும், இத்தனை வருடங்களும் நான் உன்னைத் தவிர வேறு யாரைப் பற்றி எழுதிக் கொண்டிருக்கிறேன் என்று நினைத் தாய்? 'மனங்களின் மௌன அழுகையை, இதயங்களின் ஏக்கத் துடிப்பை அப்படியே கவிதையில் வடித்துக் காட்டுகிறார்' என்று என்னை எல்லோரும் பாராட்டுகிறார்களே— இந்த எழுத்துக்களை — வார்த்தைகளை யாரிட மிருந்து, யாருடைய நினைவிலிருந்து யாரு டைய இதயத் துடிப்பிலிருந்து நான் பெறு கிறேன் என்று உனக்குத் தெரியவில்லையா? பைத்தியக்காரியைப் போல் 'என்னைப் பற்றி இரண்டு வரிகள் எழுதித் தாருங்கள்' என்று என்முன் நின்று புலம்பிக் கொண்டிருக்கிறாயே? இவ்வளவு காலமும் நான் உனக்காகவே, உன்னைப்பற்றியே, உன் நினைவுகளைப்பற்றியே கவிதைகளில் புலம்பிக் கொண்டிருக்கிறேன் என்பதை உன்னால் புரிந்து கொள்ள முடிய வில்லையா? நீ சிந்திக் கொண்டிருக்கும் கண் ணீர்தான் என்னுடைய 'கண்ணீர்ப் பூக்க' ளாகி, உலகத்து மனிதர்களை உருக வைத்துக் கொண்டிருக்கிறதென்ற உண்மையை நீ ஏன் அடையாளம் கண்டுகொள்ளவில்லை? இப் போது ஒருசில வார்த்தைகளை எழுதிக் கை யெழுத்திட்டுக் கொடுப்பதன் மூலம் உன்னை யும் ஒரு சாதாரண ரசிகையாக, அன்னியப் பெண்ணாக ஆக்கிவிட என் உள்ளம் சம்மதிக் குமா? நீ என்னுடையவள் — எனக்குப் பக் கத்தில் என்னோடிருந்து வாழாவிட்டாலும் நீ என்னுடையவள்தான். இதை நான் உல கத்துக்குச் சொல்லவில்லை. இனி சொல்லப் போவதுமில்லை. ஏனென்றால் காதலை அந் தரங்கமாக, மனம் மட்டுமே அறிந்த ரகசிய மாகக் காப்பாற்றி வைப்பதில் கிடைக்கக் கூடிய அற்புதமான சுக துக்கங்களின் ருசியை என்னால் இழக்க முடியாது.''

ஜோதிநாத பாபு மனம் திறந்து குமுறி விட்டு ஓய்ந்தார்.

கங்கா அவரை மிக அண்மையில் நெருங்கி ஏதோ சொல்வதற்கு வாய் திறந்தாள்.

காரியதரிசி உள்ளே நுழைந்தாள்.

கவிஞர் ஏறிக்கொண்ட விமானம் புறப் பட்டது. கங்காவும் தலைமை ஆசிரியையும் கவிஞருக்கு விடை கொடுத்தார்கள்.

அவர் வானத்தில் மிதக்கிறார்.

அவள் மண்ணில் நிற்கிறாள்.

மண்ணில் எங்கே நிற்கிறாள்? — அவருடைய மனத்தில் அல்லவா நிற்கிறாள்?

விமான நிலையத்துக்கு வந்தபோது கங்கா உம்மென்று முகத்தைச் கனித்துக் கொண்டு வந்ததற்கு எவ்வாறு காரணம் புரியாமல் தலைமை ஆசிரியை திகைத்தாளோ — அவ் வாறே விமான நிலையத்தை விட்டு வெளி யேறியபோது கங்கா அளவிலாத மகிழ்ச்சி யுடன் அரட்டை யடித்துக் கொண்டு வந்த தற்கும் காரணம் புரியாமல் திகைத்தாள்.

ஓர் இளம் பெண்ணின் மனத்தில் திடீ ரென்று ஏற்படக் கூடிய துக்கத்துக்கோ, மகிழ்ச்சிக்கோ சரியான காரணத்தைக் கண்டு பிடித்துப் புரிந்து கொள்வதற்கு இந்த உல கத்தில் யாரால்தான் முடிகிறது?

# போர்ஹென்ஸ் பற்பசையால் தவறாது பிரஷ் கொண்டு பல் துலக்கினால் ஈறு உபாதைகளையும் பற்சிதைவையும் தடுக்கலாம்

சிறியோர், பெரியோர், யாவரிடமிருநதும் தாமாகவே தேடிவந்த நற்சாட்சிக் கடிதங்கள், ஈறு உபாதைகளை நிறுத்தி, பற்சிதைவைத் தடுக்கும் போர்ஹென்ஸ் பற்பசையின் அற்புதமான விளைவுகளைப் பாராட்டுகின்றன. அந்தக் கடிதங்களை ஜெப்ரி மானேர்ஸ் & கோ. லிமிடெட்டின் எந்த அலுவலகத்திலும் காணலாம்.

"போர்ஹென்ஸ் பற்பசைக்கும், அதை நான் தவறாமல் உபயோகிக்கச் சொன்ன டாக்டருக்கும் நான் நன்றிக்கடன் பட்டிருக்கிறேன்...இதன் விளைவு, எனது 76வது வயதிலும், ஒரே மாதிரியாகப் படிந்துள்ள பளபளப்பான என் பற்கள் ஆரோக்கியமான ஈறுகளில் வலுவாக வேரூன்றியுள்ளன..."

—விபூதி பூஷன் போஸ், கல்கத்தா

"உலகப் புகழ் பெற்ற உங்கள் பற்பசையை என் சிறு பிராயம் முதல் தவறாது உபயோகித்து வருகிறேன். இன்று என்னுடைய ஒவ்வொரு பல்லும் வலுவாக இருக்கிறது ... நான் போர்ஹென்ஸை எல்லா வகையிலும் சிறந்த பற்பசையாகக் கருதுகிறேன். ஏனெனில் அது பல் வைத்தியர் ஒருவரால் உருவாக்கப்பட்ட பற்பசை. அது ஒன்றே போதுமே...!"

—எஸ்.என். சட்டர்ஜி, கோயம்புத்தூர்

பற்களைத் தக்க முறையில் பராமரிக்க, இரவிலும் காலையிலும் போர்ஹென்ஸ் பற்பசையையும், போர்ஹென்ஸ் டபிள்-ஆக்ஷன் டூத்பிரஷ்ஷையும் உபயோகியுங்கள் ... தவிர, உங்கள் பல் வைத்தியரையும் தவறாது பார்த்து வாருங்கள்!



இலவசம்! "பற்களையும் ஈறுகளையும் பராமரிக்கும் முறை" என்னும் விவரமான வண்ணப் புத்தகம்.

இந்தப் புத்தகத்தைப்பெற, (தபால் செலவுக்காக) 20 பைசா தபால் தலையை "மனேர்ஸ் டென்டல் அட்வைஸரி ப்யூரோ, தபால் பை 10031, பம்பாய் 1" என்னும் முகவரிக்கு அனுப்புக. புத்தகம் 10 மொழிகளில்* கிடைக்கிறது.

பெயர் ________ வயது ________ K-6

முகவரி ________

*எந்த மொழியில் புத்தகம் வேண்டுமோ, அதன் கீழ் தயவு செய்து கோடிடவும். ஆங்கிலம், இந்தி, மராட்டி, குஜராத்தி, உருது, வங்காளி, தமிழ், தெலுங்கு, மலையாளம், அல்லது கன்னடம்.

**போர்ஹென்ஸ்** பல் வைத்தியரொருவரால் உருவாக்கப்பட்ட பற்பசை

90F-192 TAM



ஜப்பானில் சமீபத்தில் மாணவ, - மாணவியர் அவர்களுடைய கல்வித் திட்டத்தை எதிர்த்து ஆர்ப்பாட்ட ஊர்வலம் ஒன்றை இரவில் நடத்தி னார்கள். ஏன் இரவில் நடத்த வேண்டும்? பகலில் கல்லூரிக்குச் செல்ல வேண்டுமே, அத னால்! ஆர்ப்பாட்டம் செய் தாலும் வகுப்புக்களை இழக்க விரும்பவில்லை அவர்கள்!

நாவக் - ஸ்ரீபெமினு

## கடும் ஆடை!



கடும் பனி பெய்யும் காலத்தில் வெளிப்புறங்களில் வேலை செய் கிறவர்கள், கம்பளி ஆடைகளை அணிந்துகொண்டாலும் தாக்குப் பிடிக்க முடியாது. இவ்விதம் பனியில் வேலை செய்கிறவர் களுக்காகச் ''சூடக்கூடிய ஆடை களை'' 'ஜெர்மன் நிபுணர்கள் தயாரித்திருக்கிறார்கள். 'டிலோ லின்' செயற்கை இழையில் தயாரித்த துணியில் இடை இடையில் மெல்லிய தாமிரக் கம்பிகள் பிணைக்கப்பட்டிருக்கின்றன. கார்பன், கிராபைட் ஆகியவை இவை மீது பூசப்பட்டிருக்கின்றன. 12 வால்ட் கார் பாட்டரி மூலம் தேவையான மின்சக்தி கிடைக்கிறது. இதன் மூலம் ஆடை கதகதப்பாக இருக்கிறது. சூடக்கூடிய ஆடைகளுக்கு இப்போது ஜெர்மனியில் கிராக்கி அதிகரித்து வருகிறது.

- பூ.பி.எஸ்

## பார் பார் ரயிலைப் பார்!



சென்னையிலிருந்து பம் பாய் வருபவர்கள் அரக் கோணம் ஸ்டேஷனருகே ஒரு விசித்திர ஆனால் பாராட்டத்தக்க அறிவிப்புப் பலகையைக் காணலாம்:

**Train the mind to mind the Train.**

ரயில்வே ஊழியர்களுக்கான அறிவிப்புதான் இது!

கண்டவர் -- ''ஜெயந்தி''

*'' நேற்று இருந்தவன் இன்றில்லை ; இவ்வளவு தான் வாழ்க்கை '' என்னும் பொருள் கொண்ட குறள் இடம்பெற்றுள்ள இடம்: தமிழக அரசு பஸ்!*

- ஏ. சண்முகசுந்தரம்



## முட்டையிட்டுப் பாலூட்டும் பிளாட்டிபஸ்

முட்டையிட்டுக் குஞ்சு பொரிக்கும் என்றும், குட்டி போட்டுப் பாலூட்டும் என்றும்பொதுவாக நாம் கேட் டிருக்கிறோம். ஆனால் முட்டையிட்டுக் குஞ்சுக்குப் பாலூட்டுகிறது ஒரு பிராணி. இத்தகைய அதிசயப் பிராணியின் பெயர் பிளாட்டிபஸ்.

ஆஸ்திரேலியாவிலும் டாஸ்மேனியாவிலும் மட் டுமே இது காணப்படுகிறது. வாத்தின் அலகினைப் போன்று அகன்றும், தட்டையாகவும் உள்ள வாயைக் கொண்டது.

வாயினுட்புறம் ஒரு வகை பை போன்ற அமைப்பு காணப்படும். இரை தேடும்போது இரை அதிகமாகக் கிடைத்தால், இப்பிராணி உடன் அவற்றை இப்



பையில் சேர்த்து வைத்துக் கொள்ளும். பின்பு தான் விருப்பப்பட்ட சமயத்தில் அவற்றை உண்ணும்.

நீரிலும் நிலத்திலும் இரட்டை வாழ்வு வாழும் இப்பிராணிக்குக் குட்டையான வலுவான கால்கள் உண்டு. இக்கால்களில் உள்ள நீண்ட கூரிய வளைந்த நகங்களினால் இது தன் நீண்ட குகைக் கூட்டினைத் தோண்டும். விரல்களுக்கு இடையில் காணப்படும் ஜவ்வு, கால்களைத் துடுப்பினைப் போன்று பயன் படுத்தி நீரில் வேகமாக நீந்தப் பயன்படுகிறது. தரையில் நடக்கும்போது இந்த ஜவ்வுப் பகுதியை விரல்களுக்கு நடுவில் இழுத்து வைத்துக்கொள்ளும். அகன்றும் தட்டையாகவும் உள்ள தன்னுடைய வாலை, நீரில் நீந்தும்பொழுது, படகிலிருக்கும் சுக் கானைப் போன்று திசை மாற்றம் பயன்படுத்திக் கொள்கிறது.

ஆண் பிளாட்டிபஸ்ஸின் பின்னங்காலில் கூரிய முள் காணப்படும். இம் முள்ளானது தொடையி லுள்ள ஒரு கொடிய விஷச் சுரப்பியுடன் இணைக்கப் பட்டிருக்கும். பகை விலங்குகள் தன்னைத் தாக்க வரும்பொழுது பெரும்பாலும் தன் உடலைப் பந்து போல் சுருட்டிக் கொள்ளும். தவிர்க்க முடியாத ஆபத்தான சூழ்நிலையில்தான் தன்னுடைய நச்சு முள்ளைப் பகை விலங்கின் மேல் செலுத்தித் தன்னைப் பாதுகாத்துக் கொள்ளும். குகைக் கூட்டுக்கு நீரின் அருகிலும் நிலத்திலுமாக இரு வாயில்களை அமைத் துக்கொள்ளும். நிலத்தில் வாழும் ஒரு பகை விலங்கு விரட்டினால் உடனே ஓடோடி வந்து நிலத்தி லுள்ள வாயில் வழியாகப் புகுந்து நீரினுள் இறங்கிச் சென்றுவிடும். நீரிலுள்ள பகை விலங்கு விரட்டினால் நிலப் பரப்புக்கு வந்து தன்னை மறைத் துக் கொள்ளும்.

தாய் பிளாட்டிபஸ் பால் கொடுப்பதற்கான பால் காம்புகள் இல்லாமலே தனது பாலை, தன் உடலி லிருந்து பீச்சிட்டுத் தனது குஞ்சுகளுக்குப் பால் கொடுக்கிறது.

இதனுடைய மிருதுவான பளபளப்பான தோலுக் காக இப்பிராணி வேட்டையாடப்பட்டதால் இவ் வினத்தின் எண்ணிக்கை குறைந்துவிட்டது. ஆகவே வேட்டையாடுவதைத் தடுக்க ஆஸ்திரேலியாவிலும் டாஸ்மேனியாவிலும் தடுப்புச் சட்டம் ஏற்படுத்தி யுள்ளார்கள்.

-- எஸ். பாஸ்கரன்



# பலராமனின் மூன்றாவது குழந்தை

— முகுந்தன் —

சொரசொரப்பான கால் மிதியில் சூடு பறக்கக் கால்களைத் தேய்த்துக் கொண்டு உள்ளே நுழைந்த பலராமன், ஹாலில் நிலைக் கண்ணாடி முன் நின்றபடி கூந்தல் அலங்காரத்தைக் கண்டு வியந்து கொண்டிருந்த மனைவியிடம் கேட்டான்: ''என்ன வீடு எப்படி இருக்கிறது பார்த்தாயா?... உன் அபிப்பிராயம் என்ன? ஒன்றுமே சொல்லமாட்டேன் என்கிறாயே?...''

''நன்றாய்க் கட்டினீர்கள் வீடு!'' என்று ஒரே வார்த்தையை அவன் பக்கமாகத் தூக்கி எறிந்து விட்டுக் கொண்டையில் செருகியிருந்த ஊசிகளின் எண்ணிக்கையைச் சரி பார்க்கத் தொடங்கினாள் சுசீலா.

''ஏன் இதற்கென்ன குறைச்சலாம்?''

''குக்கிராமமாக இருந்தால் கூடப் பரவாயில்லை; சகித்துக் கொள்ளலாம். ஆனால் இது பாலைவனமாக அல்லவா இருக்கிறது! இங்கே நம்ம வீட்டைத் தேடிக் கண்டுபிடிப்பதற்குள் எல்லோருக்கும் தாவு தீர்ந்து போய் விடும்!''

''ரொம்ப நல்லது. விருந்தாளிகளென்று உன் அக்காவுக்கு ஒன்றுவிட்ட மச்சினரின் அத்தானின் மருமானோ அல்லது அது போல் வேறு யாரேனும் ஒரு தெருவோடு போகிற பயலோ நம்ம வீட்டிலே வந்து 'காம்ப்' போட முடியாது!... அது சரி... தரை... தரை இதைப் பற்றி ஒன்றுமே சொல்லவில்லையே நீ...?''

''நான் அபிப்பிராயம் சொல்ல என்ன இருக்கிறது... ஆனாலும் ரொம்பத்தான்...'' என்றவள் கண்ணாடியிலிருந்து இரண்டு அடி எடுத்துவைத்ததுமே ''ஆ!...'' என்று ஈனக் குரல் எழுப்பியபடியே தரையில் சாயப் போகத் தரைக்குக் கேடு வந்து விடக் கூடாதே என்ற எண்ணத்துடன் அவளைத் தாங்கிப் பிடிக்க விரைந்தான் பலராமன். அவன் கரங்களிலிருந்து எழுந்து கொண்ட சுசீலா, ''நாசமாய்ப் போக! என்னமாய் வழுக்கித் தொலைக்கிறது!...'' என்று அந்த மொஸைக் தரையைச் சபித்தாள்.

''சும்மாவா பின்னே?... ஒட்டிக்கு இரட்டி கூட இல்லை; மூன்று தடவை அல்லவா பாலிஷ்' பண்ணச் சொன்னேன்? என்னமாய் வழ வழ வழவென்றிருக்கிறது பார்.... உன் கன்ன....''

'' 'த்தைப் போலவே இருக்கிறது' என்கிறீர்களாக்கும்!... கண்ணாடியில் பார்த்துக் கொள்ளுங்கள் உங்கள் முகத்தை! விட்டர் அசடு வழிகிறது!...'' ன்று கோபித்துக் கொண்டு உள்ளே போய்விட்டாள்.

பலராமன் முகவாயைத் தடவிக் கொண்டு நின்றான். சுசீலா கோபித்துக் கொண்டு போய் விட்டதற்காக அல்ல. வீட்டு விஷயமாக அவள் சொன்னது அத்தனையும் உண்மையிலேயே குறைபாடுகள்தானா என்று.

அவன் இந்தப் பங்காருசாமி நகர்ப் பக்கம் தலை வைத்துக் கூடப் படுத்திருக்க மாட்டான், ஆபீஸ் நண்பன் சுந்தரம் மட்டும் வலுக்கட்டாயப்படுத்தியிராவிடில். அவன்தான் கூடு வாஞ்சேரிக்குப் பக்கத்திலே இருக்கிற இந்தப் பாலைவனத்தில் முதல் முதலாக 'பிளாட்' வாங்கிப் போட்டவன். தான் மட்டும் ஒண்டியாக அந்தப் பொட்டைப் பிரதேசத்தில்

வீடு கட்டிக் கொண்டு குடியேறுவது உசித மல்ல என்று சுந்தரத்தின் மூளைக்கு எட்டி யிருக்க வேண்டும். எனவே ஆபீசில் ஒவ்வொருவராக வளைத்துப் போட முனைந்தான். புத்திசாலிகள் பலர் தப்பினார்கள். பலராமன் என்றைக்குமே புத்திசாலிப் பட்டத்துக்கு ஆசைப்பட்டதில்லை யாதலால், சுந்தரம் சொன்னதை வேத வாக்காக எடுத்துக் கொண்டு, 'கிரவுண்ட்' ஒன்றுக்கு நூற்றிருபத்தைந்து ரூபாய் என்று இரண்டு 'கிரவுண்ட்' வாங்கிப் போட்டு விட்டான். அடுத்தபடி "நான் வீடு கட்டப் போகிறேன். நீயும் அதே கண்டிராக்டரிடம் ஒப்படைத்து விடலாம்!" என்று தூண்டில் போட்டான் சுந்தரம். அதிலும் இந்த அசட்டு மீன் அகப்பட்டுக் கொண்டது. பாங்கில் போட்டிருந்த பணம், ஆபீசில் வாங்கிய கடன்—இரண்டையும் வைத்து ஒரு வழியாக வீட்டைக் கட்டி ஒப்பேற்றி விட்டான் பலராமன். குறிப்பிட்ட நாளில் பலராமன் தன் மனைவி சுசீலா சகிதம் குடிபெயர்ந்து விட்டான்.

ஆயிரம்தான் குற்றம் குறைகள் இருந்தாலும் சொந்த வீடு என்கிற பெருமைப் பூச்சில் பல குறைகளை மறந்திருந்தான் பலராமன். ஆனால் குடி வந்த முதல் நாளே ஊறி விட்டு விட்டாள் சுசீலா. அவள் என்ன சொன்ன போதிலும் அந்த வீட்டுக்கு ஈடு இணை வேறு எதுவும் கிடையாது என்று தனக்குத் தானே சமாதானம் செய்து கொண்டான் பலராமன்.

"அக்கா கடிதாக போட்டிருக்கிறான்!..." என்று பேச்சை ஆரம்பித்தாள் சுசீலா.

"உம்..." பலராமன் 'எலெக்ட்ரிக் ஷேவ'ரைக் கன்னத்தின்மீது ஓடவிட்டபடியே கேட்டான்: "என்ன விஷயமாம்?"

"நம் குழந்தைகளை இங்கே அனுப்பி வைக்கலாமா என்று கேட்டிருக்கிறான்!"

"நாசமாய்ப் போச்சு போ!... அந்த வால்களை வைத்துக் கொண்டு யார் சமாளிப்பதாம்?... அதுவும் இந்தப் புது வீட்டிலே! குடியிருந்த வீட்டிலேயே ஒரு சுவர் பாக்கி வைக்காமல் — தரையில் ஓர் அங்குலம் கூட மிச்சமில்லாமல் நாசம் பண்ணுகிற குழந்தைகள், புதுக் கருக்கு அழியாமல் இருக்கிற இந்தச் சுவர்களையும் தரையையும் கண்டார்களானால் என்னதான் செய்ய மாட்டார்கள்?"

"அதெல்லாம் நான் பார்த்துக் கொள்கிறேன்... குழந்தைகளை வரச் சொல்வோம்... எனக்கும் அவர்களைப் பார்க்க வேண்டும்போல ஆசையாக இருக்கிறது..."

"ஏய்! ஏய்! ஏய்! நீ என்ன சொன்னாய் முன்னே? 'என் அக்காவுக்குக் குழந்தை இல்லை என்று ஒரே ஏக்கம்... குறை... நம்ம குழந்தைகளை அவள் வீட்டிலேதான் விட்டு வைப்போமே? தன் குழந்தைகளைப் போலவே பார்த்துக் கொள்வாள்' என்றாயல்லவா?... இப்போது இப்படிப் பால் மாறினால் என்ன அர்த்தம்? இது எந்த நியாயத்திலே சேர்த்தி?"

"அழகுதான் போங்கள். என்றைக்கு இருந்தாலும் ஒரு நாள் நம்மகிட்டே வந்து சேர வேண்டிய குழந்தைகள்தானே?"

"பேஷாக வரட்டுமம்மா... ஆனால் இன்னும் ஓர் ஆறு மாசம் கழித்து வரட்டுமே?"

"ஆறு மாசம் என்ன கணக்கு?"

"அதற்குள் இந்த வீடு கொஞ்சம் பழசாகி விடும். சுவர்களில் கொஞ்சமாவது அழுக்கேறி விடும்... அப்புறம் அவர்கள் தங்கள் கை வரிசையைக் காட்டட்டுமே!..."

"ஆனாலும் கொஞ்சம் கூடக் குழந்தைப் பாசமே இல்லாத ஜன்மம் நீங்கள்!"

"அதை மட்டும் சொல்லாதே!... நம்ம இரண்டு குழந்தைகளிடமும் எனக்கு ஆசை, பாசம் எல்லாம் உண்டு. ஆனால் இந்தப் புது



வீடு இருக்கிறதே. இதை என்னுடைய மூன்ஞவது குழந்தையாக நினைக்கிறேன்.... எப்போதும் கடைக்குட்டி மேலேதானே எல்லோருக்கும் நிறைய ஆசை இருக்கும்?... எனக்கும் அதைப் போலத்தான்!...''

'' நல்ல ஆசை! நல்ல பாசம்!.... அது கிடக்கட்டும், அக்காவுக்கு நான் என்ன பதில் எழுதட்டும்......?''

'' 'வீவிலே நாங்களே ஒரு குட்டி க்ஷேத்ராடனம் போவதாக இருக்கிறோம். அதனாலே இப்போது குழந்தைகளை அனுப்பவேண்டாம். மைக்கல்மஸ் லீவின் போது அனுப்பினால் போதும்' என்று எழுதிவிடு!.... உனக்கா பொய் சொல்லத் தெரியாது!....''

'' உக்கும்!....''

ஒரு பிரச்னையைச் சுலபமாகச் சமாளித்து விட்ட சந்தோஷத்தில் பலராமன் அன்றைக்கு ஆபீசில் நிறையப் 'பேப்பர்'களைப் பைசல் செய்தான். அதாவது தினமும் எட்டு கடிதங்களை 'டைப்' பண்ணும் அவன் அன்றைக்குப் பன்னிரண்டு கடிதங்கள் டைப் செய்து 'வாங்குகிற கூலிக்கு வஞ்சனையில்லாமல் வேலை செய்து விட்டோம்' என்று திருப்திப்பட்டுக் கொண்டான். அந்தத் திருப்தி அவன் அன்று மாலை வீடு திரும்பும் போது கதம்பப் பொட்டலமாகவும், சுசீலாவுக்குப் பிடித்த காராச்சேவாகவும் உருமாறி அவன் பையில் இடம் பிடித்துக் கொண்டிருந்தது.

''சுச்சீ!....'' என்று உற்சாகம் தலைக்கு மேலே ஏறும்போதெல்லாம் அருமை மனைவியை அழைக்கிற வழக்கப்படி அன்றும் அழைத்தபடியே சுசீலாவை நெருங்கி, கதம்பப் பொட்டலத்தை எடுத்துப் பிரித்த பலராமன் ஆவலுடன் அவள் தலையில் அதைச் சூடப் போனான் —

''வேண்டாம்!....'' என்று டிரலான் புடவை தரித்த விசுவாமித்திரர் மாதிரி அவன் முகத்துக்குக் குறுக்கே கையை நீட்டினாள் சுசீலா.

''ஏன்? ஏன்?.... எதற்காக வேண்டாமென்கிறாய்? என் மீது என்ன கோபம்?....'' என்று பதறினான் பலராமன்.

''கோபமில்லை,.... யாராவது பார்க்கப் போகிறார்களே என்பதற்காகச்சொன்னேன்.''

'' அசட்! அசட்! இந்த வீட்டில் உன்னையும் என்னையும் தவிர வேறே யார் இருக்கிறார்கள்? அக்கம்பக்கத்தில்கூட அரை மைலுக்கு ஆள் நடமாட்டமே கிடையாதே இங்கே!.....''

''உஸ்! இரையாதீர்கள்! விழித்துக் கொண்டு விடப் போகிறார்!'' என்று உதட்டின் மேல் விரலை வைத்து எச்சரிக்கை செய்தாள் சுசீலா.

'' யாரைச் சொல்கிறாய் நீ?''

'' அங்கே பாருங்கள்!....''

சுசீலா சுட்டிக் காட்டிய திசையில் பார்த்தான். ஹாலின் ஒரு மூலையில் ஓர் உருவம் போர்த்துக் கொண்டு படுத்திருப்பது தெரிந்தது. மேலே போர்த்தியிருந்தது சாக்குத் துண்டு போலிருந்ததால் அது ஏதோ சாக்கு மூட்டையாக்கும் என்றே எண்ணி விட்டான் பலராமன்.

''யார் அது?''

'' உங்க அப்பாவுக்கு வேண்டியவராம்.''

'' இங்கே இவருக்கு என்ன வேலை?....''

''காசிக்குப் போகிறாராம், பாலக்காட்டிலிருந்து.... இங்கே தங்கிவிட்டுப் போகும்படி அப்பா சொல்லி அனுப்பியிருக்கிறாராம். வந்திருக்கிறார்......''

''சரி, போகட்டும்.... எப்போது காசிக்குப் புறப்படுகிறாராம்? அதைச் சொல் முதலில்!....'' அருமையான மொசெய்க் தரையில் கருப்பட்டி மூட்டை போல் அந்த ஆசாமி படுத்துக் கிடக்கிற காட்சியே சகிக்கவில்லை அவனுக்கு.

''இன்றைக்கு மத்தியானம்தானே வந்தார்? அதற்குள் கேட்டால் நன்றாக இருக்குமா...?''

''பரவாயில்லை, விடு.... நாம் சாப்பிடுகிற சாப்பாட்டில் அந்த ஒரு வயிற்றுக்கும் போட்டு அனுப்புவோம்.....''

''ஒரு வயிறு என்று சொல்லாதீர்கள்!.... நான்கு வயிறு!.....''

''என்னதான் இருந்தாலும் அவர் கொஞ்சம் பருமனாக இருக்கிறார் என்பதற்காக 'நாலு வயிறு' என்று கேலி பண்ணக் கூடாது சுசீ!.... நான் அதை விரும்பமாட்டேன்....!''

''ஐயோ! உங்களுக்கு நான் சொன்னது ஏறவே இல்லையே! வந்திருப்பது இவர் ஒருத்தர் மட்டுமில்லை; இவருடைய பெண் ஒருத்தி, பேரக் குழந்தைகள் இரண்டு பேர்; ஆக மொத்தம் நாலு பேராக்கும்!....''

''ஆமாம், அவர்கள் எங்கே இப்போது?'' என்று கேட்டான்.

'' ஸ்டேஷன் வரைக்கும் வாக்கிங் போய் வருவதாகச் சொன்னார்கள்.... இதோ வந்து விடுவார்கள்!''

சற்று நேரத்துக்கெல்லாம் கருப்பட்டி மூட்டை — மன்னிக்கவும் — பெரியவர் எழுந்து கொண்டார். பலராமனிடம் தம்மை அறிமுகம் செய்து கொண்டார். ஹரிஹரசர்மா என்று பெயராம். ''உங்க தோப்பனாரும் நானும் சின்ன வயசிலே ஒண்ணா மாங்கா(ய்) அடிச்சுத் தின்னவாள்!'' என்று சொல்லிப் பெருமைப்பட்டுக் கொண்டார்.

''காசிக்கு இப்போதுதான் முதல் தடவையாகப் போகிறீர்களாக்கும்?....'' என்று மரியாதைக்காக விசாரித்தான் பலராமன்.

''நன்னாக் கேட்டாய்!... முதல் தடவையாவது! இது முப்பத்திரண்டாம் தடவையாக்கும்!.... பனாரஸ் எனக்கு நம்ம வீட்டுக் கொல்லைப்புறமாக்கும்! நெனச்சுக்கோ....! கையிலே பணம் சேர்ந்தால் கிளம்பிவிடுவேன் பனாரஸுக்கு....!''

அவர் கையில் இப்போது பணம் சேர விட்ட பாவியை மனத்துக்குள் திட்டித் தீர்த்தான் பலராமன்.

''நான்கூடக் காசி, கயா எல்லாம் போய் இருக்கேன்....'' என்றான் பலராமன் அடக்கமாக.

'' உம்....'' என்றபடியே தமது இருபத்தேழு நாள் வளர்ச்சியைத் தடவி விட்டுக் கொண்டார் சர்மா.

''ரிஷிகேஷ்கூடப் பார்த்திருக்கேன்.....'' என்றான் அவன் தொடர்ந்து.

''வடக்கே நான் பார்க்கா(த்)த க்ஷேத்திரம் இல்லே! நெனச்சுக்கோ!....

'இருக்கட்டுமே! அதற்காக அநாவசியமாக அந்த 'த்' எதற்கு?' என்று மனசுக்குள்

# பாலுஸேரி பேனிபிட் சிட் பண்டு

## பிரைவேட் லிமிடெட்

(ஸ்தாபிதம்: 1947)

"வீணு விகார்" — 17-A, :.பிளாங் ரோடு,

ஷண்முகானந்தா ஹாலுக்கு அடுத்தது

சயான் (கிழக்கு) பம்பாய்-22. D. D.

டெலிபோன்: 471455

தபால் பெட்டி 6759 :: தந்தி: "GROWRICH"

உன்னத சேவையில் 25-வது ஆண்டு ஆரம்பம்

ஏலம் கேட்ட பிறகு டிவிடெண்டு அடையும் வசதியுள்ள சிட்கண்ட

**1971 பிப்ரவரி புதிய குரூப்புகள்**

| குறுகிய காலம்: 25 மாதங்கள் | | | நீண்ட காலம்: 40 மாதங்கள் | | |
|---|---|---|---|---|---|
| சேருவதற்கு கடைசி தேதி: 13-2-1971 | | | சேருவதற்கு கடைசி தேதி: 27-2-1971 | | |
| முதல் ஏலத் தேதி: 14-2-1971 | | | முதல் ஏலத் தேதி: 28-2-1971 | | |
| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை | வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
| | ரூ. | ரூ. | | ரூ. | ரூ. |
| B | 100/- | 2,500/- | E | 500/- | 20,000/- |
| C | 50/- | 1,250/- | F | 250/- | 10,000/- |
| F | 25/- | 625/- | G | 125/- | 5,000/- |
| G | 20/- | 500/- | | | |

நீண்ட காலம்; 50 மாதங்கள் — ஏலம் எடுக்காத சீட்டுதாரர்களுக்கு மட்டும் டிவிடெண்டு உண்டு

சேருவதற்கு கடைசி தேதி: 20-2-1971 :: முதல் ஏலத் தேதி: 21-2-1971

| வகுப்பு | தவணை ரூ. | சீட்டுத் தொகை ரூ. |
|---|---|---|
| LTA | 100/- | 5,000/- |
| LTB | 50/- | 2,500/- |
| LTD | 20/- | 1,000/- |

வேலை நேரம்: காலை 8 மணி முதல் 10-30 வரை :: மாலை 4 மணி முதல் 8 வரை

**வார விடுமுறை: திங்கட்கிழமை**

தலைமை அலுவலகம் & பதிவு செய்யப்பட்ட அலுவலகம்:

"பாலுஸேரி பில்டிங்ஸ்"

3, சிங்கராச்சாரி தெரு, திருவல்லிக்கேணி, தபால் பெட்டி: 414, சென்னை - 5

கிளைகள்: பெங்களூர் - கல்கத்தா - புது டெல்லி

இலவச பிரசுரத்திற்கு எழுதுங்கள்

சீட்டுகள் ஒழுங்குபடுத்தல் கம்பெனியின் உரிமையைப் பொறுத்தது

எமது வெள்ளி விழா ஆண்டு

## எங்கள் சேவை உங்களுக்குத் தேவை







# கால்கேட் டென்டல் க்ரீமின் மூலம் வாய் துர்நாற்றத்தைத் தடுத்திடுங்கள்... நாள்முழுவதும் பற்சிதைவை எதிர்த்திடுங்கள்!

கால்கேட், 10க்கு 7 பேர்களில் வாய்துர்நாற்றத்தை உடனடியாக அகற்றுகிறது என்றும், உணவு உட்கொண்டவுடன் கால்கேட் முறையில் பற்களைத் துலக்குவதால், இதுவரை பற்பசை வரலாற்றிலேயே கண்டிராத பேரளவில் ஏராளமானவர்களுக்கு பற்சிதைவு தடுக்கப் படுகிறது என்றும் விஞ்ஞான சோதனைகள் நிரூபித்துள்ளன. ஏனெனில், ஒரே தேய்ப்பில் வாய்துர்நாற்றத்தையும், பற்சிதைவையும் விளைவிக்கும் கிருமிகளை 85சதவீதம் வரை, கால்கேட் டென்டல் க்ரீம் அகற்றிவிடுகிறது. இத்தகைய நிரூபணத்தைப் பெற்றிருப்பது கால்கேட் மட்டுமே! அதன் வியக்கத்தக்க பெப்பர்மின்ட் சுவையுடனே— கால்கேட் டென்டல் க்ரீம் கொண்டு குழந்தைகள் தவறாமல் பல்துலக்க விரும்புவதில் வியப்பென்ன!







தூய்மையான இனிய மூச்சுடனே, வெண்மையான பற்களையும் பெற்றிடவே... உலகிலேயே அதிக மக்கள் மற்றெந்த பற்பசையையும் விட, கால்கேட் பற்பசையையே வாங்குகிறார்கள்!

DC.G.42TM

கேட்டுக் கொண்டான் பலராமன். வெளிப் படையாக, ''அப்படியா ?'' என்று வியப் பது போல் பாவனை பண்ணினான்.

''நான் பத்ரிநாத் போயிருக்கேன்; நீ போயிருக்கியோ ?....''

''இல்லே.... நான் கேதார்நாத் மட்டும் தான் போனேன்......''

''ஓ ! அதென்ன பிரமாதம்.... நான் பார்க்கா(த்)ததா?.... அமர்நாத்கூடப் போயிருக்கேனுக்கும் நான்!....''

''நான் மவுண்ட்கைலாஸ் போயிருக்கேன்.''

''ஓ! அதென்ன பிரமாதம்!... நான் நேபாள் போயிருக்கேனுக்கும்! பசுபதிநாத் கோவில்!.... நீ பார்த்திருக்கியோ ?....''

''இல்லே... ஆனால் பூரி ஜகந்நாத் பார்த் திருக்கேன்.....''

''ஓ! அதென்ன பிரமாதம்!.... துவாரகை போயிருக்கியோ? மதுரா?... ஹரித்வார், பிரயாக்?......''

அவர் இப்படிப் போட்டி போட்டுக் கொண்டு பேசுவது பலராமனுக்குக் கட் டோடு பிடிக்கவில்லை; பிடிக்கவே இல்லை.

''இதெல்லாம் என்ன சார் ! நான் செத்தே போயிருக்கேனே!'' என்று ஒரு போடு போட்டான். மனசுக்குள், 'இப்போ என்ன பண்ணுவே?' என்று கேட்டுக் கொண் டான். அதிலே ஒரு திருப்தி.

''எத்தனை வாட்டி....?'' நிதானமாகக் கேட்டார் சர்மா.

''இதென்ன கேள்வி! டைபாய்ட் ஜுரத் திலே ஒரே ஒரு தரம்தான் செத்துப் பிழைத் திருக்கிறேன் !....''

''பையா ! நான் மூணுவாட்டி அந்த எமதர்ம ராஜாவுக்குப் பாய்ச்சக் காட்டியிருக் கிறேனுக்கும் !.... கங்கையிலே ஒரு தரம் விழுந்தேன்; பைராகி ஒருத்தர் காப்பாற்றி னார்.... அப்புறமா அலக்நந்தாவிலே விழுந் தேன்; சாது கம்பளிபாபா கைகொடுத்தார். கோதாவரியிலே புஷ்கரத்தின் போது விழுந் தேன்..... கோங்குராசாமி தூக்கிப் போட் டார் மணலிலே.....''

'ஏன் தூக்கிப் போட்டார்?' என்று அலற வேண்டும் போலிருந்தது பலராமனுக்கு.

வெளியே போயிருந்த சர்மாவின் பெண் ணும் குழந்தைகளும் திரும்பி வந்தார்கள். ஆளுக்குக் கணுக்கால் வரை புழுதியை ஏற்றிக் கொண்டு கால் மிதியில் துடைத்துக் கொள் ளாமல் அப்படியே உள்ளே வந்து நடமாடி, கிருஷ்ண ஜயந்தியை நினைவூட்டுவது போல் அவர்கள் அடிச்சுவடுகளைப் பதித்தபோது, தன் உடம்பின் மீதே அவர்கள் நடந்து செல் வது போலிருந்தது பலராமனுக்கு. பல்லைக் கடித்துக் கொண்டான்.

சர்மாவை உத்தேசித்து அன்று இரவு வாசல் வராந்தாவில் படுத்துக் கொண்டான் பலராமன். விடியற்காலை ஐந்து மணி இருக் கும். ஆழ்ந்த தூக்கத்திலிருந்த பலராமனைக் குற்றாலச் சாரல்போல ஒன்று வந்து தாக்கவும் திடுக்கிட்டுக் கண் விழித்தான். சாரலுமில்லே, ஒண்ணுமில்லே. சர்மாவின் பெண் ரத்தினம் குடம் குடமாகத் தண்ணீரைச் சேந்தி வந்து வீடு முழுதிலும் கொட்டி அமர்க்களம் பண்ணிக் கொண்டிருந்தாள்.



கல்கத்தாவில் உள்ள ஒரு பாங்கு 'வேலை காலி' என்று விளம்பரம் கொடுத்தது. 'தபால் பெட்டி' விலாசம் கொடுத்திருந்ததால் மனுக்கள் எல்லாம் ஸ்டேட்ஸ்மென் காரியாலயத்துக்கு வந்தன. 10,300 கடிதங்கள் வந்ததால் அவற்றை ஒரு லாரியில் போட்டு அந்த பாங்குக்கு அனுப்பி வைத்தார்கள்! —ஸ்டேட்ஸ்மென்

—பாபு.

ஹாலில் இரண்டு தடவை வழுக்கிச் சாய்ந்து, ஈர வேட்டியும் எரியும் கண்களு மாகச் சுசீலாவை நெருங்கி, ''என்ன சுசி இதெல்லாம்?'' என்று கேட்டான் பலராமன்.

''பார்த்தால் தெரியவில்லே?''

''எதிர்க் கேள்வி போடுவது இருக்கட்டும்; இதெல்லாம் என்ன கலாட்டா என்கிறேன்?''

''தினமும் வீடு முழுதும் கழுவி விட வேண்டுமாம். அப்போதுதான் லட்சுமி வாசம் பண்ணுவாளாம்....'உங்களுக்கு எதற் குச் சிரமம்?' என்று அந்த அம்மாளே செய் கிறாள்....''

''வெறும் தண்ணீர் மாதிரி தெரிய வில்லையே!''

''வாசலுக்குக் கரைத்துத் தெளிப்பார்களே அதைக் கரைத்து விட்டிருக்கிறாள். லட்சுமி வாசம் பண்ண வேண்டாமோ?...''

''ஐயோ! நீ போய் அந்த அம்மாளைத் தடுத்து நிறுத்தேன். காஸ்ட்லி மொஸைக்!.. அதைவிடக் காஸ்ட்லி பாலிஷிங்! அத்தனை யும் வீணாகப் போகும்!...''

''நான் சொல்லிப் பார்த்தாகி விட்டது: கேட்கவில்லையே?...''

''நானே போய்க் குடத்தைப் பிடுங்கி வாசலில் எறியட்டுமா?... என் கை பரபரக் கிறது சுசி!...''

''கை பரபரத்தால், இந்தாருங்கள் பிரஷ்! நன்றாகப் பல் தேய்த்து விட்டு வாருங்கள்... இன்றைக்கு ஒரு நாளாவது பற்கள் வெள்ளை வெளேரென்று இருக்கட்டும்!...''

சர்மாவின் மகள் மீது இருந்த ஆத்திரத்தில் பிரஷ்ஷை மேலும் கீழும் வீசியதால் ஈறு முழுதும் குதறிப் போய்விட்டதுடன் கடை வாய்ப் பல் ஒன்றும் ஆட்டம் கண்டுவிட்டது.

காப்பி சாப்பிட்டு விட்டு (மூக்கைப் பொத் திக்கொண்டே) வாசலுக்கு வந்து செய்தித் தாளில் மூழ்கினான் பலராமன். கடைசியாக 'ஆபிச்சுவரி' பத்தியை ஆவலுடன் நோட்டம் விட்டுக் கொண்டிருக்கும்போது சர்மா அவ னைத் தேடிக் கொண்டு வந்தார்.

''எண்ணெய்க் குப்பி உண்டோ?'' என்று விசாரித்தார்.

''என்னது? என்னது?...''

''எண்ணெய்க் குப்பியாக்கும் கேட்டேன்? ஸ்நானம் செய்ய வேண்டாமோ?... இல் லா(த்)த போனால்...''

''என்ன செய்யச் சொல்கிறீர்கள்?...''

''தருவிக்கக் கொடு!''

''சுசி! என்னவோ எண்ணெய் கேட்கிறார் பார்!'' என்று உள்பக்கம் திரும்பிக் குரல் கொடுத்தான் பலராமன்.

**இரண்டு நிமிடங்களுக்கெல்லாம் வால் கின்ணத்தில் எண்ணெய் கொண்டு வந்து வைத்** தாள் கமலா.

''இது போதா(த்)து... எனக்கு அரை டம்ளர் வேணுமாக்கும்!''

அரை டம்ளர் எண்ணெய் வந்தது.

அடுத்தபடி சர்மா செய்த காரியம் பலராமனை ஊமையாக்கி அப்படியே உட்கார வைத்து விட்டது.

கௌபீனதாரியாக நடுக் கூடத்தில் போய் உட்கார்ந்தார் சர்மா. ''ஹரே ராமா!'' என்று சொல்லியபடியே ஒரு கை எண்ணெயை ஊற்றித் தலையில் வைத்துக் கொண்டார். அப்புறம் ''கிருஷ்ணா, முகுந்தா, ஷண்முகா, என்னப்பனே, குருவாயூரப்பா!''என்று ஒவ்வொரு பெயருக்கும் ஒவ்வொரு கை எண்ணெய். அந்தத் தொடர்ந்து 'சடபட சடபட சடபட' என்று தலையிலே தாளம்போட்டபடி ஆனந்தமாக எண்ணெயைத் தேய்த்துக் கொண்டார். அவர் தாளம் போட்ட வேகத்தில் தெறித்த எண்ணெய்த் திவலைகள் அந்த ஹால் முழுதும், தரையிலிருந்து மூன்றடி வரையிலுமாகப் பரவி மெருகூட்டின. பதினைந்து நிமிடங்களுக்குப் பிறகு கால் இடறி எண்ணெய்ச் செக்கில் விழுந்து விட்டு வந்தவர் போலத் தோற்றமளித்தார் சர்மா. ''கேட்டுக்கோ பலராமா... நான் தினமும் இது போல எண்ணெய் தேய்ச்சுக்கொள்கிறவனாக்கும்!'' என்று சொல்லிப் பலராமனை மேலும் பயமுறுத்தினர். ''பிறந்த அன்றையிலேருந்து டெய்லி ஆயில் பாத் உண்டாக்கும்!'' என்று சிவப்பேறியிருந்த தமது கண்களை உருட்டி அவனைக் கதி கலங்க வைத்தார்.

ஒரு வழியாக அவர் எழுந்து கொண்டதும் குளிக்கப் போவார் என்று அவன் எதிர்பார்த்தது தவறாகப் போய் விட்டது.

''பையா, எனக்கு நீ இந்த வீடு முழுசும் சுத்திக் காட்டல்லியே?...'' என்றார் சர்மா.

''ஆமாம். காட்டவில்லைதான். குளித்து விட்டு வாருங்கள், பார்ப்போம்!'' என்றான் அவன்.

''ஏதுக்குக் குளிக்கணும்?... இப்படியே பார்த்தால் போச்சு!... எண்ணெய் ஊறினாப் போலேயும் இருக்கும்!'' என்றவர் அவன் பதிலுக்குக் காத்திராமல், அறை அறையாகப் புகுந்து வந்தார். டிராயிங் ரூமில் எண்ணூறு ரூபாய் போட்டு வாங்கி வைத்திருந்த ரேடியோவைத் திருகிவிட்டுப் பாட்டுக் கேட்டார். புத்தக அலமாரியைக் குடைந்தார், ''சௌந்தர்ய லஹரி இல்லையோ உன்கிட்டே?'' என்று கேட்டபடி ''இது பியானோவாக்கும்! என்னடா அம்பி இது!'' என்று 'ரோல் டாப்' மேஜையைத் திறந்து வியந்தார். எல்லாம் எண்ணெய்க் கையுடனேயே. ஒவ்வோர் அறையிலும், ''அதே கலராக்கும் இது!'' என்று கேட்டு ஞாபகமாகச் சுவரில் கையைப் பதித்து விட்டு வந்தார். அப்போதா எல்லா விட்டுக் கதவுகளிலும் எண்ணெய் முத்திரை பதித்த சம்பவம்தான் பலராமனுக்கு ஞாபகம் வந்தது.

'இவர் இன்றும் எண்ணெயெல்லாம் கூத் ஆட்டப் போகிறாரோ?' என்று பயந்த

கொண்டே ஆபீசுக்குப் போய்விட்டு, மாலையில் ஒரு மணி நேரம் 'பெர்மிஷன்' போட்டு விட்டு விழுந்தடித்துக் கொண்டு வீடு வந்து சேர்ந்தான் பலராமன். அவன் பயந்தபடி சர்மா எதுவும் பண்ணியிருக்கவில்லை. அவருடைய பேரக் குழந்தைகள்தான் தங்கள் கைவண்ணத்தைக் காம்பவுண்டுச் சுவரிலிருந்து குளியலறைச் சுவர் வரையில் காட்டியிருந்தார்கள். ஊரிலிருந்து நிறைய வர்ணப் பென்சிலைச் சீவிக் கொண்டு வந்திருந்தார்கள் போலிருக்கிறது. சுவர் முழுதும் 'கே. ஆர். எஸ். வாசன், கே. ஆர். கே. கிருஷ்ணன்' என்று அருமையான கையெழுத்துக்களும், கேலிச் சித்திரங்களும் காட்சி யளித்தன. அந்தக் 'கார்ட்டூன்'களை ஊன்றிக் கவனித்தான் பலராமன். 'அப்பா, அம்மா, தாத்தா' என்று தொடங்கி, 'மாமா, மாமி' என்று (பல்லும் பவிஷுமாக) முடிந்திருந்தன. கடைசி இரண்டும் தன்னையும் கமலாவையும் குறிக்கின்றன என்று அறிந்து திருப்தியடைந்தான் பலராமன். படுக்கை அறைச் சுவர் முழுதும் நாய், பூனை, ஆந்தை, காக்கை, கூண்டுக்குள் சிங்கம், ஒட்டகம், கிளி என்று மிருகக் காட்சி சாலையையே கொண்டு வந்திருந்தார்கள். ஒரே கோட்டில் வரைந்த படங்கள் வேறு சுவர்களை அலங்கரித்தன. 'கார்ட்டூன்'களுக்கிடையே நெருக்கம் நெருக்கமாகக் கட்டம் போட்டு விளையாடி யிருந்தார்கள். ஏழு மணி நேரத்துக்குள் எப்படி இத்தனை சுவர்களையும் இவர்களால் நிரப்ப முடிந்தது?' என்று பலராமன் வியந்து(!) கொண்டிருக்கும் போது, ''நம்ம பசங்கள் மணியாக்கும்! தெருவிலே போய்க் களிக்க (விளையாட) மாட்டான்கள்... வீட்டிலேயேதான் களித்துக் கொண்டிருப்பான்கள்!... அறியா(ந்)தநுகளை வெளியிலே விடலாமோ?...'' என்று சர்மா எரிகிற நெருப்பில் கிரஸின் வார்த்தார்.

பலராமனுக்கு யாரையாவது கட்டிக் கொண்டு அழலாம் போலிருந்தது.

சர்மா குடும்பத்தினர் அங்கே தங்கியிருந்த நாற்பத்தெட்டு மணிநேரத்தில் அந்த வீட்டை நன்றாகப் பதம் பார்த்து விட்டார்கள் என்றே சொல்ல வேண்டும். முதல் நாள் தாங்கள் போட்ட படங்களை 'மாமா'ரசிக்கவில்லை என்பதை அறிந்த அந்த இரண்டு வாண்டுகளும் மறு நாள் பழைய பிளேடு, ஒன்றையும் துருப் பிடித்த பேனாக் கத்தி ஒன்றையும் வைத்துக் கொண்டு கண்ணில் பட்ட மரச் சாமான்கள் எல்லாவற்றிலும் தங்கள் பெயரைச் செதுக்கி வைத்திருந்தனர். வாசல் நிலைப்படி, கதவுகள், ஜன்னல்கள், கட்டில், மரப் பீரோ, நாற்காலி — இவை போதாவென்று ரேடியோ மீதும் அவர்கள் 'இனிஷியல்'களைச் செதுக்கி யிருந்தது கண்டு பலராமனுக்குப் படு கோபம் வந்து விட்டது. கமலையைத் தனிமையில் அழைத்து வெகுவாகக் கோபித்துக் கொண்டான். ''நீ என்ன பண்ணினாய்? வேடிக்கை பார்த்துக் கொண்டா இருந்தாய்? உனக்கு மூளை எங்கே போயிற்று?'' என்று இரைந்தான்.

''பாவம், குழந்தைகள்தானே! நம்ம குழந்தைகள் செய்திருந்தால் நாம் திட்டவா போகிறோம்?'' என்றாள் மேனகா.

# மிக அழகாக மாற்றுவதில் இணையற்றவை!

டுலக்ஸ் பெயிண்ட்டுகள் உங்கள் வீட்டை அழகின் உறைவிடமாக மாற்றக்கூடியது. தெரிந்தெடுக்க 92 கண்கவர் நிறங்கள். மங்காத, உரிந்துபோகாத உயர்தர பெயிண்ட். மேலும், புகழ்பெற்ற ஐஸிஐ தரத்தையே தனது அதிமுக்கிய மூலப் பொருளாகக் கொண்டது.

ICI

DULUX
ACRYLIC EMULSION

ICI

DULUX
SYNTHETIC ENAMEL

**அதிக இடத்தை மறைக்கக்கூடியது**

டுலக்ஸை சிலதடவை பூசினாலேயே அப்பழுக்கில்லாத சிறந்த தோற்றத்தைக் கொடுக்கிறது. குறைவாகப்பணம் செலவுசெய்து டுலக்ஸுடன் பயனடையுங்கள்.

**பூரணமாகக் கழுவக்கூடியது**

டுலக்ஸ் என்றும் அழகு குறையாமல் புதிதாகவே இருக்கும். காரணம், கறைகள், தூசு, அழுக்கு முதலியன படிந்த இடங்களை சோப்பும் நீரும் கொண்டு சுலபமாகக் கழுவி விடலாம்.

**டுலக்ஸ் மீது நம்பிக்கை வளர உங்கள் கன்ட்ராக்டரை நம்புங்கள்**

உங்கள் கன்ட்ராக்டருடன் தொடர்பு கொள்ளுங்கள். அவர் திறமைசாலி. அவரிடம் ஆலோசனை கேட்டு, கூடவே வண்ணநிறக் கார்டுகளைப் பெற்றுக் கொள்ளுங்கள்.

**அழகிற்கு வருடக் கணக்கில் அழகு நிலைத்திட**




**டுலக்ஸ் பெயிண்ட்**

டுலக்ஸை தயாரித்து விற்பவர்கள்:
தி ஆல்கலி அண்டு கெமிகல் கார்ப்பரேஷன் ஆஃப் இந்தியா லிமிடெட்.

டுலக்ஸ்-இம்பீரியல் கெமிகல் இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட், லண்டனின் வியாபாரச் சின்னம்.
பதிவு பெற்ற உபயோகிப்பவர்கள்:
தி ஆல்கலி அண்டு கெமிகல் கார்ப்பரேஷன் ஆஃப் இந்தியா லிமிடெட்.

ACCI (P) 6218

## ஒரே சலவையில் 3 வழிகளில் செயல் புரிந்து...




# டெட் துணிகளை அதிவெண்மையாக்குகிறது

— மற்ற எந்த பவுடரையும்விட.

**இதோ, எப்படி என்று பாருங்கள்:**

1. **டெட்** டிலுள்ள தனிப்பட்ட சக்திவாய்ந்த பொருள் அதி விரைவாகத் துணியில் ஊடுருவிச் சென்று, மறைந்துள்ள அழுக்கைக்கூட நொடியில் விரட்டி அடிக்கிறது. துணிகள் வெண்மையாகின்றன.
2. **டெட்** அழுக்கை வெளிக்கொணர்ந்த பிறகு, அது மீண்டும் படியாமல் தடுக்கிறது. துணிகள் அதிக சுத்தமாகின்றன; சுத்தமாகவே நீடித்து இருக்கின்றன.
3. **டெட்** துணிகளை அதிவெண்மையாக்குகிறது. துணிகள் முன்னைவிட அதிவெண்மையுடன் பளிச்சிடுகின்றன. (நீலம் அல்லது வெண்மைச் சாதனம் சேர்க்கவேண்டிய அவசியமில்லை.)

**இன்றே டெட் வாங்குங்கள்!** ஸ்வஸ்திக் ஆயில் மில்ஸ், பம்பாய்

SHILPI HPMA 38A/70 T

''நம்ம குழந்தைகளும் இவர்களும் ஒன்ருகிவிடுமா?''

'' இப்படிப் பேசுவதுதான் எனக்குப் பிடிக்கவில்லே. ஏதோ அறியா(த்)ததுகள்..... செய்து விட்டுப் போகட்டுமே? எதுக்கு இப்படி இல்லா(த்)ததுக்கெல்லாம் அமர்க்களம் பண்ணுகிறீர்கள்?...'' என்று சுசீலா சொன்னதும் பலராமனுக்குப் பொறுமையே பறி போய் விட்டது. 'இவளும் என்ன அநாவசியமாக 'த்' போடுகிருள் பார்!' என்றவன் அந்தக் கோபத்தில் சுசீலாவை அறையக் கையை ஓங்கியும் விட்டான். நல்ல வேளையாகச் 'கப்புச்சி' அந்தப் பக்கமாக வந்து சேரவும் பலராமன் பின்வாங்க வேண்டியதாயிற்று.

மறுநாள் அவன் ஆபீகக்குப் புறப்படும்போது சர்மா கௌபீனதாரியாய் (பிளஸ் எண்ணெய்) அவனிடம் வந்தார். ''மத்தியானம் நாங்கள் புறப்படரோம்...'' என்று தெரிவித்தார்.

''செய்யுங்கள்... ரொம்ப சந்தோஷம்...''

''ஏதோ நாங்கள் இங்கே தங்கியிருந்தபோது உங்களுக்குச் சில அசௌகரியங்கள் ஏற்பட்டிருக்கலாம்... மன்னிக்கணும்...''

''அதனுலென்ன... பரவாயில்லே...''

''என்ன இருந்தாலும் சுப்பிரமணிய ஐயர் பிள்ளேயல்லவோ நீ?...அப்பாவைப் போலவே உன் பேச்சும் பெருந்தன்மையாகத்தான் இருக்கும்....''

''என்னது! சுப்பிரமணிய ஐயரா?...... யாரது?''

''என்னடா அம்பி இப்படிக் கேட்கிருய்?... அவர் உன் தோப்பனுர் இல்லியோ?... எப்படியாக்கும் மறந்தாய்?...''

''இல்லேயே! என் அப்பா பெயர் ரங்கசாமி அல்லவா?...''

''அப்படீன்ன நீ இந்தத் தோல் கம்பெனியிலே வேலே பார்க்கிறவன் இல்லியாக்கும்?''

''அந்தக் கம்பெனியிலேதான் எனக்கும் வேலே.. ஆபீஸ் ஜியார்ஜ் டவுன்லே இருக்கு.''

''அப்போ குரோம்பேட்டைக் கம்பெனியிலே வேலே பார்க்கிற பலராமன் நீ இல்லியோ?... அதாரது?...'' என்று அதிசயித்தார் சர்மா.

பொட்டில் அறைந்த மாதிரி நினைவுக்கு வந்தது பலராமனுக்கு. தன் பெயர் கொண்ட இன்னேர் ஆசாமி அந்தப் பாலேவனத்தில் இன்னும் அரை மைல் தள்ளி வீடு கட்டிக் கொண்டிருப்பது.

அவன் விளக்கிச் சொன்னதும். ''அடே! நான் அங்கேயல்லவா போயிருக்க வேண்டியவன்! தப்பாக்கும் நான் இங்கே வந்துட்டது'' என்ருர் சர்மா.

'புறப்படுங்கள்' என்று சொல்ல ஏனே பலராமனுக்கு மனம் வரவில்லே.

''பரவாயில்லே... ஊருக்குத் திரும்பறபோது அங்கே போய் இறங்கிக்கிறேன்!...''

''பேஷாகச் செய்யுங்கள்! அது இன்னும் பெரிய வீடு. புதுசுகூட... அசல் தேக்கு மரம் உபயோகம் பண்ணி யிருக்கான்!...''

''அப்போ நான் வரட்டுமா?...'' என்று கையை அவன் பக்கமாக நீட்டினுர் சர்மா. எங்கே அவருடைய எண்ணெய் முத்திரை தன்னுடைய டெரிலின் சட்டையில் பட்டு விடுமோ என்று ஒதுங்கிக் கொண்டான் பலராமன், ''செய்யுங்கள்!'' என்றபடி.

''பனுரஸ்லேருந்து வர்றபோது உங்களுக்கு என்ன கொண்டு வரட்டும்?...''

''காசிக்குப் போனுல் எதையாவது விட்டு விட்டு வரவேண்டும் என்று சொல்வார்களே?''

''ஆமாம்...''

''நீங்கள் இந்தத் தினசரி எண்ணெய்க் குளியலே விட்டு விடுங்கள், அது போதும்!''

அன்று மாலே பலராமன் வீடு திரும்பிய போது வீடு அமைதியாக இருந்தது. ''சுச்சீ!'' என்று அழைத்தான். வந்தாள். ஒரு காகிதத்தை எடுத்து அவளிடம் நீட்டினுன். பேனுவையும் கையில் திணித்தான்.

''எதற்கு இதெல்லாம்?'' என்று கேட்டாள் சுசீலா.

''எழுது சொல்கிறேன்: 'அன்புள்ள அக்கா அவர்களுக்கு, குழந்தைகள் பத்ரியையும் பப்பியையும் உடனடியாக இங்கே அனுப்பி வைக்கவும்...''

## கொள்ளேயைத் தவிர்க்க......




பாங்குகளிலேயே மிகவும் கனமான கதவுகளைக் கொண்டது அமெரிக்காவில் சிக்காகோ நகரில் உள்ள 'ஃபர்ஸ்ட் நேஷனல் பாங்க்'. ஒவ்வொரு கதவும் 87 டன் எடை உள்ளது. விலே ஒரு லட்சம் டாலர்.

டைம் - பாலி

●

நியூயார்க் நகர பாங்க் ஒன்றில் பெண் காஷியர் ஒருவரின் முன் நின்றிருந்த இளேஞன் திடீரென ''நகராதே. பணத்தையெல்லாம் எடு. இல்லேயெனில் சுட்டுவிடுவேன்'' என்ருன். ஆனுல், என்ன தோன்றியதோ: அந்தப் பெண் பயப்படாமல், ''சரி! துப்பாக்கியை நான் பார்க்கலாமா?'' என்றவுடன் இளேஞன் ''துப்பாக்கியைக் காட்டாவிடில் பணம் இல்லே, என்பாயோ? சுட்டுவிடுவேன்!'' என்று மிரட்டினுன் கோபத்துடன். அப்படியும் அப்பெண் அஞ்சாமல் ''துப்பாக்கியைக் காட்டு, பணம் தருகிறேன்'' என்றதுதான் தாமதம் அத்திருடன் 'என்னிடம் துப்பாக்கியே இல்லே' எனக் கூறிக் கொண்டே வேகமாக ஓடி மறைந்து விட்டான்!

ஆதாரம்: 'ராம்பனர்'-கரிகாலன்



# தித்திக்கும் செய்தி

டி.எஸ்.கே

அந்தக் கடிதத்தை படித்து முடித்ததும் வெகு அலட்சியமாய் மேஜையின் மேல் எறிந்தான்; திவாகரன். அந்த அலட்சியமே அந்தக் கடிதத்துக்கு அவன் கொடுக்கப் போகிற பதிலை உணர்த்துவதாக இருந்தது.

அவன் தந்தை கோபாலசாமியிடமிருந்து வந்த கடிதம், அது. வனஜாவுக்குக் கல்யாணம் நிச்சயமாகும்போல் இருக்கிறதாம். ஓர் ஆயிரம் ரூபாய் திவாகரனிடமிருந்து கிடைத்தால் முகூர்த்தத்துக்கு நாள் பார்த்து விடலாமாம். அவனால் காரியாலயத்தில் 'புரட்டி'க் கொடுக்க முடியுமா என்று கேட்டுக் கடிதத்தை முடித்திருந்தார்.

கடிதத்தைப் படித்து முடித்ததும் திவாகரனின் உடலில் ஜில்லென்று உஷ்ணம் பரவியது. தந்தையின் அந்தக் கடிதத்துக்கு என்ன பொருள்? தடையற்ற அவனுடைய ஆனந்த வாழ்வுக்கு ஓர் அணை என்பதுதானே அதன் பொருளாக இருக்க முடியும்?

கோபாலசாமியும் ஆழ்ந்து யோசித்துவிட்டுத்தான் கடிதம் எழுதியிருப்பார். ஆறு மாதங்களுக்கு முன்பு என்றால், அவர் அநேகமாக இப்படிக் கேட்டிருக்கவே மாட்டார். இப்போது அவனைக் கேட்கலாம், அவனால் கொடுக்க முடியும் என்று அவருக்குத் தோன்றியிருக்க வேண்டும்.

திவாகரன், சுகந்தியின் கரம் பற்றி ஆறு மாதங்கள் ஆகின்றன. அவளும் ஒரு காரியாலயத்தில் அலுவலில் இருக்கிறாள். மாதம் இருநூற்றி முப்பது ரூபாய் சம்பளம். இவனுக்கு முந்நூற்றி ஐம்பது: மொத்த வருமானத்தையும் இருவரும் கூட்டாகச் செலவழித்துக் கொண்டு 'ஆனந்தமாக' இருக்கிறார்கள்.

திவாகரன், பி. காம். பட்டம் பெற்றது காரியாலயத்தில் உபயோகப்படுகிறதோ இல்லையோ, வாழ்க்கை என்னும் ஐந்தொகைக் கணக்கில் நூறு சதம் பயன்பட்டது!

அவனுடைய சம்பளம் அவனுக்கே போதும் போதாததுமாயிருந்தது. ஒரு கல்யாணத்தை வேறு பண்ணிக் கொண்டால் அவனால் குடும்பச் செலவை எப்படிச் சமாளிக்க முடியும்? அவனைப் பெற்றவர்கள் அவனை நச்சரித்துவிட்டார்கள், கல்யாணம் செய்து கொள்ளச் சொல்லி. பாண்டி பஜாரிலும் மெரீனாவிலும் சிரிப்பை வழிய விட்டுக் கொண்டு போகும் ஜோடிகளைப் பார்க்கும்போதெல்லாம் அவன் உள்ளத்திலும் இன்பக் கனவுகள் எழாமல் இருப்பதில்லை.

குடும்ப பாரத்தைக் கண்டு பயம்; குடும்ப சுகத்தை எண்ணி ஆசைப் பரிதவிப்பு! என்ன செய்வான், திவாகரன்!

சுகந்தியை அவன் மணந்து கொள்வதற்கு முன் கோபாலசாமி அவனுக்கு எழுதிய கடிதங்களைப் பார்த்தால், நிச்சயம் ஒரு பெண்ணைப் பற்றிய பிரஸ்தாபம் அதில் இருக்கும்! அரசாங்க உத்தியோகஸ்தரின் பெண்; ஆசிரியரின் பெண்; சொந்தமாய்த் தொழில் நடத்துகிறவரின் பெண்; ஸ்டேஷன் மாஸ்டரின் பெண்; மிராசுதாரின் பெண்... அடேயப்பா, எத்தனை ரகமான பெண்கள்!

அந்த மிராசுதாரின் பெண் கல்யாணியைப் பற்றி அப்பா மிகவும் பரிந்து எழுதினார். ஊர்வசி, திலோத்தமை வகுப்பாம். இவனும் போய்ப் பார்த்துவிட்டு வந்தான். அப்பா சொன்னதில் தவறில்லை என்றாலும், பி.காம். மூளையில் ஒருபக்கத்தில் இடறியது.

அவள் வருகையால் அவன் வருமானம் கூடுமா? கூடாவிட்டால், 'பாலன்ஸ்-ஷீட்'டை எப்படிச் சரிக்கட்டுவது?

கல்யாணியைக் கட்டிக் கொண்டால் அவள் எப்போதாவது அவள் வீட்டுக்குப் போனால், இருபது லிட்டர் அரிசியை அவள் அப்பா சிமெண்ட் சாக்கில் கட்டிக் கொடுக்கக் கூடும். அத்துடன் அவளுடைய அம்மா கொஞ்சம் வடகம், நூறு அப்பளம், டப்பாவில் மோர் மிளகாய் கொடுக்கக் கூடும்.

இவ்வளவுதானே!

அவனுடைய மனம் வருஷாந்தர ஆடிட் ரிப்போர்ட்டைப் பற்றி எண்ணிக் கொண்டிருக்கவில்லை; மாதாந்திர பாலன்ஸ்-ஷீட்டைப் பற்றிக் கவலைப்பட்டுக்கொண்டிருந்தது.

திவாகரனின் பெற்றோர்கள் எதிர்பார்த்ததைக் காட்டிலும் சற்று அதிகமாகவே செலவு செய்யத் தயாராக இருந்தார் மைதிலியின் தந்தை. அவர் ஒரு பிஸினஸ்காரர். திவாகரனின் அம்மாவுக்கு அந்தச் சம்பந்தத்தை இழக்கவே மனமில்லை.

அம்மாவுக்கென்ன — சபை நிறைக்கச் சீர் செய்துவிட்டால் போதும்! உரித்த தேங்காய் அளவுக்கு நூறு குஞ்சாலாடு பண்ணி வைத்தால் போதும்!... அப்புறம் மாதா மாதம் உப்புக்கும் உளுத்தம் பருப்புக்கும் ஓடுவது நானா நீங்களா?...

திவாகரன் தீர்மானமாக ஒரு 'நோ'வைக் கொடுத்தான், பெற்றோர்களுக்கு!

அப்புறம் சுகந்தியின் தந்தை, கோபாலசாமியைத் தேடிக் கொண்டு வந்தார். என்ன காரணத்தாலோ அவருக்கு இந்தச் சம்பந்தத்தில் உற்சாகம் தோன்றவில்லை. ஆனால்,



சுகந்தியின் தகப்பனார் ஒரு தடவை பட்டணத்துக்கே போய், திவாகரனைப் பார்த்துப் பேசி, கல்யாணத்தை ஏறக்குறைய உறுதிப் படுத்திக் கொண்டு விட்டார்!

திவாகரனுக்குச் சுகந்தியைப் பற்றிய ஒரு விஷயம் மிகவும் பிடித்திருந்தது. அது, அவளும் பட்டணத்தில் வேலையாக இருக்கிறாள் என்பதுதான்! இந்தப் பிசாத்து வரதட்சிணை யாருக்கு வேண்டும்? மாதா மாதம் அவள் ''கொண்டு வர'' 'தட்சிணை'தான் இருக்கிறதே!...

சுகந்திக்குக் கொஞ்சம் நீண்ட முகம்.. வனஜா கூட அவனைக் கேலி செய்தாள்; 'ஐயோ, அண்ணா!... இந்த நீண்ட மூஞ்சியில் நீ என்ன அழகைக் கண்டாயோ?' என்று.

அம்மாவோ, 'கல்யாணம் செய்துகொள்ளப் போகிறவன் நீ. உனக்குப் பிடித்திருந்தால் சரி' என்று தன் கையைக் கழுவிக் கொண்டு விட்டாள்.

'வரதராமன் கொடுக்கிற லிஸ்ட் ஒப்புக் கொண்டால் நானூறு—ஐந்நூறு நம் கையைக் கடிக்கும் போலிருக்கிறதே?' என்றார், கோபாலசாமி.

திவாகரன் உறுதியாக நின்றான்.—சுகந்தியை மணந்து கொள்வதில். (மாதம் இரு நூற்றி முப்பது ரூபாய். ஆண்டுக்கு இரண்டு மாத போனஸ். பிரயாணச் சலுகை. எல்லாவற்றுக்கும் மேலாக, மெடர்னிடி லீவ்!)

அப்பாடா, திருமணமான இந்த ஆறு மாதங்களாய் அவன் எவ்வளவு ஆனந்தமாய் இருக்கிறான்! ஒரு ஞாயிற்றுக் கிழமையேனும் அவர்கள் வீட்டில் தங்கியதுண்டா? அங்கே—இங்கே என்று திட்டம் போட்டுக் கொண்டு காலத்தையும் காசையும் எப்படிச் செலவழிக்கிறார்கள்!...

இது அப்பாவுக்குப் பொறுக்கவில்லையே? சம்பாதிக்கிற பெண் அவனுக்கு மனைவியாகி விட்டாள் என்பதில் அவருக்குப் பொறாமை கூடத் தோன்றியிருக்கக் கூடும்!...

காரியாலயத்தில் ஆயிரம் ரூபாய் கடன் கேட்டால் கொடுப்பார்கள். கொடுத்தவுடன் மறந்துவிடமாட்டார்களே?... மாதா மாதம்

ஐம்பது ரூபாய்க்கு மேல் பிடித்துக் கொள்வார்கள்.

வருமானத்தில் ஐம்பது ரூபாய் குறைந்தால் அந்த அளவுக்கு அவன் ஆனந்தத்தை இழக்கிறான்; இழந்தாக வேண்டும்!

அப்படி என்ன அவசரம் வந்து விட்டது, அந்த வனஜாவின் திருமணத்துக்கு? பார்க்கப் போனால் பச்சைக் குழந்தை அவள். வருகிற டிசம்பருக்கு இருபத்தொன்றுதான் முடியப் போகிறது.

**வீ**ட்டுக்குள் நுழைந்தான் திவாகரன். அவனுக்கு முன்பாகவே சுகந்தி வந்திருந்தது அவனுக்கு ஆறுதலைத் தந்தது.

''என்னவோ போல் இருக்கிறீர்களே?'' என்று கேட்டாள் சுகந்தி.

''அப்பாவிடமிருந்து கடிதம் வந்தது...''

''பேஷ்?... என்ன ஒற்றுமை!... எனக்கும் எங்கள் அப்பாவிடமிருந்து கடிதம் வந்திருக்கிறது. முதலில், உங்களுக்கு வந்த கடிதத்தைக் காட்டுங்கள்...''

''ரொம்பப் பறக்காதே, சுகந்தி. அதில் ஒன்றும் தேன் சொட்டிக் கொண்டிருக்கவில்லை.''

''என் அப்பாவின் கடிதத்தில் நிஜமாகவே தித்திக்கும் செய்தி ஒன்று இருக்கிறது?....''

அவன் நீட்டிய கடிதத்தை வாங்கிப் படித்தாள் சுகந்தி.

''என்ன செய்வதாக எண்ணம்?''

''எதையும் 'செய்வதாக' இல்லை; செய்தே விட்டேன்!...''

''பணம் வாங்கி அனுப்பி விட்டீர்களா?''

''ஆசையைப் பார்!... 'பணம் பெயராது' என்று நானே எழுதி, நானே விலாசத்தை டைப் செய்து நானே தபால் பெட்டியில் போட்டு விட்டேன்!...''

சுகந்தி முகத்தைத் திருப்பிக் கொண்டாள்.

''கோபமா?''

''அப்பா என்ன நினைத்துக் கொள்வார்?''

''என்ன வேண்டுமானாலும் நினைத்துக் கொள்ளட்டும்... நம்முடைய வருமானம், நமக்கே போதவில்லை...? அப்பாவுக்காக வேறு கடன் வாங்கி விட்டால்...? சரி, உன் சமாசாரம் என்ன?...''

''அதற்கு இது சமயமில்லை. அப்புறம் சொல்கிறேன்!...''

**வா**னொலியில் ஆங்கிலச் செய்தி கேட்டுக் கொண்டிருந்தான், திவாகரன். சமையற்கட்டு விளக்கை அணைத்துக் கொண்டு முன்புற அறைக்கு வந்தாள், சுகந்தி.

''டெஸ்டில், இன்றைக்கு நம்ம பசங்கள் சக்கைப் போடு போட்டிருக்கிறார்கள்.''

அவள் அதைச் செவிகளில் வாங்கிக்கொண்டதாகத் தெரியவில்லை. அலமாரியின் கதவைப் பிடித்துக் கொண்டு நின்றாள். — திடீரென்று தள்ளாமை வந்துவிட்ட மாதிரி.

சுகந்திக்கு ஏன் இந்தச் சோர்வு?

ஏதோ எண்ணம் எழவே, திவாகரனுக்கு ஒரு விநாடி நேரம் பொறி கலங்கிவிட்டது.

நிஜமாகவே தித்திக்கும் செய்தி, 'இது' தானோ?...

சுகந்தி, என்னை ரொம்பவும் சோதனைக்கு உள்ளாக்காதே. 'அதை'யெல்லாம் என்னால் தாங்க முடியாது. நீ மிகவும் அவசரப்படுகிறாய். என் நிலைமையைச் சற்று யோசித்துப் பார்... நமக்குத் திருமணமாகிச் சில மாதங்களே ஆகின்றன...

''ஏய், கழுதை, என்ன வந்துவிட்டது, உனக்கு?'' என்று உள்ளத்து உதறலை மறைத்துக்கொண்டு இரைந்தான் திவாகரன்.

''உங்களோடு வேலை செய்கிறாரே ரங்கசாமி — இங்கே கூட அடிக்கடி வருவாரே?— அவர் குடும்பத்தில் எத்தனை பேர்கள்?''

''ரங்கசாமியின் வீட்டில் வந்து...அவன், அவனுடைய மனைவி, இரண்டு குழந்தைகள், வீட்டோடு வந்துவிட்ட ஒரு தமக்கை...''

''அவருக்கு என்ன சம்பளம்?''

''என்னைவிட ஸீனியர், அவன். என்னைக் காட்டிலும் இருபது ரூபாய் அதிகமாக இருக்கும்.''

''அவர் எங்கேயாவது கடன் வாங்குவது உண்டா?''

''கடன் என்று சொல்ல முடியாது; அவ்வப்போது கைமாற்று வாங்குவான்.''

''....ஆக, அவர் நல்ல விதமாகத்தானே குடும்பத்தை நடத்திக்கொண்டு போகிறார்?''

திவாகரன் நிமிர்ந்தான்.

''ரங்கசாமியின் குடும்பத்தைப் பற்றி நீ ஏன் அநாவசியமாகக் கவலைப்படுகிறாய்?''

''நான் நம்மைப் பற்றித்தான் எண்ணிக் கொண்டிருக்கிறேன். உங்கள் ஒருவருடைய சம்பளத்தைக் கொண்டு குடும்பம் நடத்த முடியாதா? எத்தனையோ பேர் மிகக் குறைந்த வருவாயிலும் மன நிறைவோடு வாழ்க்கை நடத்தவில்லையா?''

''இப்படி யெல்லாம் மனத்தைக் குழப்பிக் கொள்ளுகிற நேரமா இது, சுகந்தி?''

''நான் குழம்பவுமில்லை; உங்களைக் குழப்பவுமில்லை. ஆனால், எப்படியும் உங்களுக்கு விஷயம் தெரிந்துதானே ஆக வேண்டும்...''

''என்ன சொல்கிறாய், நீ?... வேலை போய் விட்டதா, உனக்கு?''

''இல்லை, வேலையை நான் போக்கிக் கொண்டு விட்டேன்!...''

''சுகந்தி...''

''என் தங்கைக்கு ஒரு வரன் நிச்சயமாகும் போல் இருக்கிறதாம். அவள் வேலை பார்க்கவில்லை என்ற ஒன்றுதான், அந்த வரன் வீட்டாருக்குத் தயக்கத்தைக் கொடுக்கிறதாம்! அவளும் வேலைக்கு முயன்று கொண்டுதான் இருக்கிறாள். கிடைக்கவில்லை.... அப்பாவின் கடிதத்தைக் கொண்டு போய் எங்கள் கம்பெனி மானேஜரிடம் காட்டினேன். அவருக்குத் தங்கமான மனசு. என் வேலையையே என் தங்கைக்குத் தர ஒப்புக் கொண்டுவிட்டார்... மாலதியை வரச் சொல்லித் தந்தி கொடுத்து விட்டேன். நாளைக்கே அவள் வேலையை ஒப்புக் கொண்டாக வேண்டும். அடுத்த மாதம் அவளுக்கு நிச்சயம் திருமணமாகிவிடும். நான் இனிமேல் வீட்டோடு இருந்து, உங்கள் தேவைகளைக் கவனித்து, ஆபீஸ் பரபரப்பு இல்லாமல், சாவகாசமாய்.. என்ன அப்படிப் பார்க்கிறீர்கள்?...''

அவனுள் நமநமவென்று வலி ஆரம்பித்துப் பரவியது. ஆனால், வலியின் உற்பத்தி ஸ்தானம் அவனுக்கே புரிபடவில்லை!




ஃப்ளூரோ கார்பன் முனை கொண்ட

# பிரின்ஸ்

ப்ளூ பிளேடுகளை உபயோகியுங்கள்

குடும்பத்தினர் அனைவரும்
திட ஆரோக்கியத்துடன் திகழ
# ஃபாஸ்ஃபோமின்





ஃபாஸ்ஃபோமின்
- சக்தியை அதிகரிக்கிறது
- பசியைத் தூண்டுகிறது
- வலிவைப் பெருக்குகிறது
- நோய்களை எதிர்க்கும்
சக்தியைக் கூட்டுகிறது.






SQUIBB "TIT"
SARABHAI CHEMICALS
ஈ.ஆர் ஸ்க்விப் & ஸன்ஸ் இன்-
கார்ப்பரேட்டடின் ரெஜிஸ்டர்ட்
ட்ரேட்மார்க்காகும். கரம் சந்த் ப்ரேம்
சந்த் பிரைவேட் லிமிடெட் இதை
உபயோகிக்க உரிமை பெற்றவர்கள்.

ஃபாஸ்ஃபோமின்...
பழரஸ மணம் கமழும்
பச்சை நிற விடமின்
டானிக்.

Shilpi HPMA-35A/70 Tam




★ இக்குறியிட்ட கடிதம் ரூ. 15/- பரிசு பெறுகிறது.

★ கல்கி பொங்கல் மலரில் தி. மு. க. ஆட்சியில் உள்ள குறைபாடுகளைத் தலையங்கத்தின் மூலம் தெளிவாக எடுத்துக் கூறியிருந்தீர்கள். தங்கள் கருத்துக்களை ஏற்றுக் கொள்ளவோ, மறுக்கவோ கருணாநிதி அவர்களுக்கு உரிமை உண்டு. ஆனால் கருணாநிதி அவர்கள் அவ்வாறு செய்யவில்லை. அதற்கு மாறாகத் தாங்கள் எழுதிய தலையங்கத்தின் நோக்கத்தையே திசை திருப்பிவிட முனைந்தது ஒரு பொறுப்புள்ள முதலமைச்சருக்கு அழகல்ல.

தாங்கள் எழுதியுள்ள தலையங்கத்தில் "அண்ணாதுரை புற்றுநோய்க்காக அமெரிக்காவில் சிகிச்சை பெற்று வந்தபொழுது" என்று ஒரு வாசகம் வருகிறது. தாங்கள் அண்ணாத்துரை அவர்களைக் கேவலப்படுத்துவதற்காக இந்த வரிகளை எழுதியதாக கருணாநிதி அவர்கள் கடற்கரைப் பொதுக்கூட்டத்தில் பேசியுள்ளார். மகா பாவிக்குத்தான் புற்றுநோய் வரும். ஆகையால் அண்ணாதுரை ஒரு மகா பாவி என்று கூறுவதற்காகத்தான் தாங்கள் மேலே கூறிய வாசகங்களை எழுதியதாகக் கூறுகிறார். என்ன கிண்டல், என்ன இழிதன்மை என்றும் தங்களைச் சாடுகிறார்.

அண்ணாதுரை ராஜாஜியிடம் ஒரு தனி அன்பும் மரியாதையும் காட்டி வந்ததை நாடறியும். அப்படிப்பட்ட ஒரு பெருந்தகையைப் பற்றித் தரக் குறைவாக எழுத வேண்டிய அவசியம் கல்கிக்கு இருந்திருக்க முடியாது. அதுவும் ஒருவரது உடலிலுள்ள வியாதியைக் குறித்து எந்த அறிவுள்ள மனிதனும் கிண்டல் செய்து நிச்சயம் எழுத மாட்டான்.

இது கருணாநிதிக்குப் புரியாததல்ல; பின்பு ஏன் கருணாநிதி அவர்கள் அவ்வாறு கூறினார்கள்? அதற்குச் சில காரணங்கள் உண்டு. தங்களுடைய தலையங்கத்தில் தி. மு. க. அரசு மக்களுக்கு அளித்த வாக்குறுதிகளை நிறைவேற்றாததையும், மதுவிலக்கு அமுலில் இருக்கும்போதே மது தயாரிக்கும் தொழிற்சாலைகள் ஏற்படுத்துவதையும், லாட்டரி போன்ற சூதாட்டத்தை நடத்துவதையும் கண்டித்திருந்ததுதான் காரணம்.

குற்றச்சாட்டுகளுக்கு நேரடியாகப் பதில் சொல்ல இயலவில்லை. அதனால்தான் கல்கியின் பெயருக்குக் களங்கம் கற்பிக்க முயலுகிறார் திரு கருணாநிதி.

உண்மையைக் கூறும்பொழுது சிலருக்குத் தவறாகத்தான் படும். அதற்காக, பிரச்னைகளிலிருந்து நழுவுவதற்கு இது போன்ற தவறான குற்றச்சாட்டுக்களை இனிமேலும் கூற வேண்டாம் என்று முதலமைச்சரைக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

உத்தமபாளையம்,
20–1–71 எஸ். கோவிந்தராஜன்

டிசம்பர் மாதத்தின் இடையில் பழவந்தாங்கலில் செங்கற்பட்டு மாவட்டக் கிளை நூலகத்துக்கு விழா நடைபெற்றது. அந்த நூலகத்தினைத் திறந்து வைத்து உரையாற்றிக் கொண்டிருந்தார், மாண்புமிகு திரு என். வி. நடராசன் அவர்கள். அப்போது மேடைக்குப் பக்கவாட்டில் இருந்த கோயில் அருகே 'சபரிமலை ஐயப்பன் திருவிழா' நடைபெற்றுக் கொண்டிருந்தது. பக்தர்கள் மெய்மறந்து, இறைவனைத் துதித்து, ஆடிப் பாடிக் கொண்டிருந்தனர். இதைக் கண்ட திரு என். வி. என். "இந்த இருபதாவது நூற்றாண்டில் இப்படியும் பல மூடநம்பிக்கைகள்; நம் ஊர் சாமிகள் போதாது என்று வெளி மாநிலத்துச் சாமிகளை வேறு இறக்குமதி செய்து கொள்கிறார்கள்" என்று சொன்னார். மக்களின் அனுமதி பெற்று நாடாளும் நிலையில் உள்ள அமைச்சர் பெரும்பான்மையான மக்களின் மனம் புண்படப்பேசுவது முறையா?

சென்னை–61
20–1–71 "ஜெயப்பிரியன்"

ஜப்பான், ஜெர்மனி போன்ற நாடுகள் இத்துணை முன்னேற்றம் காணக் கருவியாய் இருந்தவை அந்நாட்டவரின் உழைப்பும், அவர்களுக்கு அதன் அருமை தெரிந்திருந்ததும்தான். நம் பாரதத்தில் உழைப்பின் பெருமையை எவ்வளவு அழகாக விளக்குகின்றனர் பாருங்கள்: 16ந் தேதி 'இந்து' நாளிதழில் வந்த ஒரு விளம்பரம்:

**"You can win more than you earn in a life time"**

(வாழ்நாளில் சம்பாதிக்கக் கூடியதைவிட அதிகமாக ஜெயிக்கலாம்!)

ஆம், இது ஒரு லாட்டரிச் சீட்டு விளம்பரம்! இன்னும் சிறிது காலத்தில் கல்கத்தாவிலிருந்து இப்படிப்பட்ட விளம்பரம் வரினும் வியக்க முடியாது: "ஏன் வீணாக உழைக்கிறீர்கள்? ஆயுளிலும் உழைத்துப் பெற முடியாததை ஒரு பாங்கைக் கொள்ளையடித்துப் பெறலாமே?"

சென்னை–17
18–1–71 இரா. மோகன்

விழுப்புரம் பஸ் நிலையத்தில் பஸ்ஸுக்காகக் காத்துக் கொண்டிருந்தேன். அப்போது அங்கு இரு கிராமவாசிகள் பேசிக் கொண்டிருந்தனர்.

"சென்ற பொதுத் தேர்தலின்போது ஒரு ஓட்டுக்குப் பத்து ரூபாய் கொடுத்தார்கள். எங்கள் வீட்டில் 4 வோட்டுக்கள் இருந்தன. எனக்கு நாற்பது ரூபாய்கள் கிடைத்தன. அது போல் இந்த வருடமும் கிடைக்கும்" என்ற ரீதியில் இருவரும் பேசிக் கொண்டிருந்தனர்.

இதைக் கேட்ட என் மனம் வேதனையால் துடித்தது. பாவம் சூதுவாது அறியாத கிராம மக்கள் ரூபாய்க்கு ஆசைப்பட்டு வாக்குகளைத் துஷ்பிரயோகம் செய்கிறார்கள். அதன் பின் பலனை அனுபவிக்கிறார்கள்!

முண்டியம்பாக்கம், எல். சிவசுப்பிரமணியம்
20–1–71





Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31
Managing Editor: T. Sadasivam

# GRASIM

## STAPLE FIBRE A SUPPLEMENT TO COTTON AND OTHER FIBRES



**Among Indian technological achievements Gwalior Rayon's success in producing Rayon Grade Pulp from indigenous raw materials without any foreign aid or collaboration has, perhaps, been the most remarkable.** The staple fibre produced from the pulp has been a boon to the hard-pressed textile industry which was deprived of valuable raw materials when vast areas of cotton-growing land were lost to Pakistan as a result of Partition.

Grasim Staple Fibre is unique in many respects, and is, in effect, a supplement to all natural fibres including cotton, wool, silk, jute, as well as to synthetic fibres. When blended or mixed with other fibres, it increases the usefulness of the resultant fabrics, making them cooler, softer, and more comfortable while at the same time helping to lower costs.

Today Gwalior Rayon contributes substantially to the national economy. It keeps hundreds of textile mills busy, gives employment to thousands of people, helps clothe lakhs more, saves crores of rupees in foreign exchange, contributes handsomely and in ever-increasing amounts to the national exchequer—these are just a few of the calculable benefits

Besides Rayon Grade Pulp and Staple Fibre, Gwalior Rayon also produces high quality fabrics and fabricates its own machinery and equipment.

As the needs of the nation for the basic necessities of life are constantly growing, Gwalior Rayon, conscious of its responsibilities, has already made plans to expand its production. It is the constant endeavour of the Company to serve the country to its utmost ability.

**THE GWALIOR RAYON SILK MANUFACTURING (WVG.) CO. LTD.**

Birlagram, Nagda.

SAS-GR 28 A

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon